ஸ்ரீராமஜயம்.



# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

கம்பநாட்டாழ்வாரருளிச்செய்தது.

நான்காவது

# கிஷ்கிந்தாகாண்டம்.



இஃது

திரிசிரபுரம்

தமிழ்த்தலைமைப்புலவராகிய

வி-கோவிந்தபிள்ளையவர்களால்

பார்வையிடப்பட்டு

புங்கத்தூர்

கந்தசாமிமுதலியாரால்

பு-ம-சபாபதிமுதலியாரது

கல்விவிளக்கஅச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை

இரக்தாக்ஷி௵-ஆவணிமீ.







# கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்

ஸ்ரீமத்கம்பராமாயணம்.

நான்காவது

# கிஷ்கிந்தாகாண்டம்.

## முதலாவது-பம்பைப்படலம்.

காப்பு.

மூன்றுருவெனக்குணமும்மையாமுதல்
தோன்றுருவெவையுமிம்முதலைச்சொல்லுதற்
கேன்றுருவமைந்தவரிடையினின்றவன்
சான்றுருவுலகினுக்குலகந்தாயினான். (௧)

தேன்படிமலரதுசெங்கண்வெங்கைமாத்
தான்படிகின்றதுதெளிவுசான்றது
மீன்படிமேகமும்படிந்துவீங்குநீர்
வான்படிந்துலகிடைக்கிடந்தமாண்பது. (௨)

ஈர்ந்தநுண்பளிங்கெனத்தெளிந்தவீர்ம்புனல்
பேர்ந்தொளிர்நவமணிபடர்ந்தபித்திகை
சேர்ந்துழிசேர்ந்துழிநிறத்தைச்சேர்தலால்
ஓர்ந்துணர்வில்லவருள்ளமொப்பது. (௩)

குவான்மணித்தடந்தொறும்பவளக்காலிவர்
கவானரசன்னமும்பெடையுங்காண்டலில்
தவாநெடுவானகத்தயங்குமீனொடும்
உவாமதியுலப்பிலதுதித்ததொப்பது. (௪)

ஓதநீருலகமுமுயிர்களியாவையும்
வேதபாரகனாயும்விதிக்கவேட்டநாள்
சீதம்வீங்குவரியைச்செகுக்குமாறொரு
காதிகாதலன்றருகடலினன்னது. (௫)

எற்பொருநாகர்தமிருக்கையீதெனக்
கிற்பமேதார்காட்சியதெனினுங்கூறக்
கற்பகமனையவக்கவிஞர்காட்டிய
சொற்பொருளாமெனத்தோன்றல்சான்றது. (௬)

களனவிலன்னமேமுதலகன்னகன்
றளமலர்ப்புள்ளொடுதயங்கவின்னதோர்
கிளவியென்றறிவருங்கிளர்ச்சித்தாதலால்
வளநகர்க்குலமேபோலுமாண்பது. (௭)

அரிமலர்ப்பங்கயத்தன்னமெங்கணும்
புரிகுழல்புக்கிடம்புகல்இலாமையாற்
றிருமுகநோக்கலபிறந்துதிர்துமென்
றெரிபுகுவனவெனத்தோன்றுமீட்டது. (௮)

காசடைவிளக்கியகாட்சித்தாயினும்
மாசடைப்பேதைமையிடைமயக்கலால்
ஆசடைநல்லுணர்வனையதாமெனப்
பாசடைவயின்றொறும்பரந்தபண்பது. (௯)

களிப்படாமனத்தவன்காணிற்கற்பெனும்
கிளிப்படாமொழியவள்விழியின்கேளெனத்
துளிப்படாநயனங்களிப்பச்சோருமென்
றொளிப்படாதாயிடையொளிக்குமீனது. (௧0)

தழைபடுமுத்தமுங்கலுழிக்கார்மத
மழைபடுதாளமுமணியும்வாரிநேர்
இழைபடர்ந்தனையநீரருவியெய்தலால்
குழைபடுமுகத்தியர்கோலமொப்பது. (௧௧)

பொங்குவெங்கடகரிபொருவிணுடலிற்
சங்குவினெதிர்பொருகலவிப்பூசலில்
அங்கநொந்தலசியவிலையினுய்வளை
மங்கையர்வடிவெனவருந்துமெய்யது. (௧௨)

விண்டொடர்நெடுவரைத்தேனும்வேழத்தின்
வண்டுளர்நறுமதமழையுமண்டலால்
உண்டவர்பெருங்களியுறவிநோதியர்
தொண்டையங்கனியிதழ்த்தோன்றல்சான்றது. (௧௩)

ஆரியமுதலியபதினெண்பாடையிற்
பூரியரொருவழிபுகுந்தபோன்றன

ஓர்கிலகிளவிகளொன்றொடொப்பில
சோர்விலவிளம்புபுட்டுவன்றுகின்றது. (கச)

தானுயிருறத்தணிதழுவும்பேடையை
ஊனுயிர்பிரிந்தெனப்பிரிந்தவோதிமம்
வானரமகளிர்தம்வயங்குநூபுரத்
தேனுகுமழலையைச்செவியினேற்பது. (கரு)

ஈறிடலரியமால்வரைநின்றீர்த்திழி
ஆறிடுவினையகிலாரமாதியா
ஊறிடவொண்ணகருணைத்தவொண்டளச்
சேறிடுபாண்டியிற்றிகழுநேரதி. (கசு)

வேறு.

நவ்விநோக்கியரிதழ்நிகர்குமுதத்துநறுந்தேன்
வவ்வுமாந்தரிற்களிமயக்குறுவனமகரம்
எவ்வநீங்கியபிறப்பினோடிறப்பிவையென்னக்
கவ்வுமீனொடுமுழுகுவவெழுவனகாரண்டம். (கஎ)

கவளயானையன்னாற்கந்தக்கடிநறுங்கமலத்
தவளையீகிலமாவதுசெய்துமென்றருளித்
திவளவன்னங்கடிருநடைகாட்டுவசெங்கண்
குவளைகாட்டுவதுவரிதழ்காட்டுவகுமுதம். (கஅ)

பெய்கலன்களினிலங்கொளிமருங்கொடுபிறழ
வைகலுய்ப்புனல்குடைபவர்வானரமகளிர்
செய்கையன்னங்களேந்தியசேடியரென்னப்
பொய்கையன்னங்களேந்தியபூங்கொம்பர்பொலிய(

எலுநீர்நிழலிடையிடையெறித்தலிற்படிகம்
போலும்வார்புனல்புகுந்துளவாமெனப்பொங்கி
ஆலுமீன்கணமஞ்சினவலம்வரவஞ்சிக்
கூலமாமரத்திருஞ்சிறைபுலர்த்துவகுரண்டம். (உ௦)

அங்கோர்பாகத்திலஞ்சனமணிநிழலடையப்
பங்குபெற்றொளிர்பதுமராகத்தொளிபரப்பக்
கங்குலும்பகலுமெனப்பொலிவெய்துகளைய
மங்கைமார்தடமுலையெனப்பொலிவனவாளம். (உக)

வலிநடத்தியவாளெனவாளைகள்பாய
நிலைநடத்தியுதிரைதொறுமுருள்வனநீர்நாய்
கலிநடைக்கழைக்கண்ணுளரெனநடங்கவினப்
பொலிவுடைத்தெனத்தேரைகள்புகழ்வனபோலும்.

அன்னதாகியவகன்புனத்பொய்கையையணுகிக்
கன்னியன்னமுங்கமலமுமுதலியகண்டான்
தன்னினீங்கியதளிரியற்குருகினன்றளர்வான்
உன்னுநல்லுணர்வொடுங்கிடப்புலம்பிடலுற்றான். (௨௩)

வேறு.

வரியார்மணிக்கால்வாளமேமடவன்னங்காளெனைநீங்கள்
தரியாணடந்தாளில்லமேளத்தளர்ந்தபோதுந்தகவேயாய்
எரியாநின்றவாருயிருக்கிரங்கிருலீதிசையன்றே
பிரியாதிருந்தேற்கொருமாற்றம்பேசிற்பூசல்பெரிதாமோ.(௨௪

வன்னநறுந்தாமரைமலரும்வாசக்குவளைநாண்மலரும் [காய்
புன்னினெரியுமொருநெஞ்சம் பொதியுமருந்துற்றரும்பொய்
கண்ணுமுகமுங்காட்டிவாய்வடிவுமொருகாற்காட்டாயோ
உன்னுமென்னிலஃதுதவாவுமேலாபிறுருமுயர்ந்தாரோ: (௨௫)

விரிந்தகுவளைசேதாம்பல்விளைமென்கமலங்கொடிவள்ளை
தாங்கங்கெண்டைவராலாமையென்றித்தகையதமைநோக்கி
மருந்தினனையாளவயங்களவைநிற்கண்டேன் வல்லரக்கன்
அருந்தியகல்வான்சிந்தினவோவாவியுரைத்தியாமன்றே. (௨௬)

ஓடாநின்றகளிமயிலேசாயற்கொதுங்கியுள்ளழிந்து
கூடாதாரிற்றிரிகின்றநீயுமாகங்குளிர்ந்தாயோ
தேடாநின்றவென்னுயிரைத்தெரியக்கண்டாய்சிந்தையுவந்
தாடாநின்றாயாயிரங்கணுடையாய்க்கொளிக்குமாறுண்டோ. ()

அடையீரொன்றுமொருமாற்றமறிந்ததுரையீரன்னத்தின்
பெடையீரொன்றும்பேசீரோ பிழையாதாற்குப்பிழைத்தீரோ
நடைநீரழியச்செய்தாரேநடுவிலாதார்தனியவரோ
யுடையீர்பகைதானுமைநோக்கியுவக்கின்றேனைமுனிவீரோ. ()

பொன்பாற்பொருவும்விரையல்விபுல்லிப் பொலிந்தபொலந்தா
துதன்பாற்றழுவுங்குழல்வண்டுதமிழ்ப்பாட்டிசைக்குந்தாமரை
என்பாலில்லையப்பாலோவிருப்பாரல்லர்விருப்புடைய [யே
உன்பாலில்லையென்றக்காலொளிப்பாரோடுமுறவுண்டோ(௨௯)

ஒருவாசகத்தைவாய்திறந்திட்டுதவாய்பொய்கையுள்ளொடுங்குந்
திருவாயனையசேதாம்பற்கயலேகிடந்தசெங்கிடையே [வாய்
வெருவாவெதிர்நின்றமுதுயிர்க்கும்விழிச்செவ்விக்கொழுங்கனி
தருவாயவ்வாய்முகிழ்நகையுந் தன்னைன்மொழியுந்தாராயோ.

அலக்கணுற்றேற்குற்றதவற் கடைவுண்டொன்றேகொடிவள்ளா
மலர்க்கொம்பனையமடச்சீதைக்காதேமற்றொன்றில்லையால் [ய்

பொலக்குண்டலமுங்கொடுங்குழையும் புனைதாழ்முத்தின் பொ
ற்றோடும், விலக்கிவந்தாய்விளம்பாதே யின்னும்பூசல்விரும்பு
தியோ. (௫௧)

பஞ்சுபூத்தவிரற்பதுமம்பவளம்பூத்தவடிவாளென்
நெஞ்சுபூத்ததாமரையினிலையம்பூத்தாணிறம்பூத்த
மஞ்சுபூத்தமலர்பூத்தகுழலாள்கண்போன்மணிக்குவளாய்
நஞ்சுபூத்ததாலென்னநகுவாயென்னைநலிவாயோ. (௫௨)

வேறு.

என்றயாவுயிர்க்கின்றவனேடவிழ்
கொன்றையாயிப்புறத்தவைகூறியான்
பொன்றயாரும்புகல்கிலபோனுமால்
வன்றயாவிலியென்னவருந்தினான். (௫௩)

வாரளித்தழைமாட்பிடிவாயிடைக்
காரளிக்கவுழிக்கருங்கைம்மலை
நீரளிப்பதுநோக்கினனின்றனன்
பேரளிக்குப்பிறந்தவில்லாயினான். (௫௪)

ஆண்டவள்ளலையன்பெனுமாரணி
பூண்டதம்பிபொழுதுகழிந்ததால்
ஈண்டிருப்புனறோய்ந்துன்னிசையென
நீண்டவன்கழறாழ்நெடியோயென்றான். (௫௫)

அரசுமவ்வழிநின்றரிதெய்தியத்
திரைசெய்தீர்த்தமுன்செய்தவவுண்மையால்
வரைசெய்மாமதவாரணநாணுற
விரைசெய்பூம்புனலாடலைமேயினான். (௫௬)

நீத்தநீரினெடியவன்மூழ்கலுப்
தீத்தகாமத்தெறுகதிர்த்தீயினால்
காய்த்திரும்பைக்கருமகக்கம்மியன்
தோய்த்ததண்புனலொத்ததத்தோயமே. (௫௭)

வேறு.

ஆடினானன்னமாயருமறைகள்பாடினான்
நீடுநீர்முன்னைநூனெறிமுறையினேமிதாள்
சூடினான்முனிவர்தந்தொகுதிசேர்சோலைவாய்
மாடுதான்வைகினானெரிகதிரும்வைகினான். (௫௮)

அந்தியாள்வந்துதானணுகவங்கணுகுருச்
சந்தவார்கொங்கையாடனிமைதனிநாயகன்
சிந்தியாநொந்துதேய்பொழுதுதெறுசீதநீர்
இந்துவானுந்துவானெரிகதிரானனன. (௫௯)

வேறு.

பூவொடுங்கினவிரவுபுள்ளொடுங்கினபொழில்கள்
மாவொடுங்கினமாறுபிலையொடுங்கினகிளிகள்
நாவொடுங்கினமயில்கணடமொடுங்கினகுயில்கள்
கூவொடுங்கினபிளிறுகுரலொடுங்கினகளிறு. (௪௰)

மண்டுயின்றனநிலையமலைதுயின்றனமறுவில்
பண்டுயின்றனவிரவுபணிதுயின்றனபகரும்
விண்டுயின்றனகழுதும்விழிதுயின்றனபழுதில்
கண்டுயின்றிலநெடியகடறுயின்றனகளிறு. (௪௧)

பொங்கிமுற்றியவுணர்வுபுணர்தலும்பகையினொடு
பங்கமுற்றனையவினைபரிவுறும்படியின்முடி
சங்குலிற்றதுகமலமுகமெடுத்ததுகடலின்
வெங்கதிர்க்கடவுளெழவிமலன்வெந்துயரினெழ. (௪௨)

காலையேகடிதுவரவேகினார்கடல்கவினு
சோலையேமலைதழுவுகானநீணெறிதொலைய
ஆலையேய்பழனியகளுடாரார்கலியமுது
போலவேயுணாசெய்புனமானநாடுதல்புரினார். (௪௩)

முதலாவது-பம்பைப்படலமுற்றிற்று.

## உ - வது - அநுமப்படலம்.

எய்தினார்சவரிநெடிதேயமால்வரையெளிதின்
நொய்தினேறினாரதனின்னோன்மைசேர்கவியரசு
செய்வதோர்கிலரிவர்கடெவ்வராமெனவெருவி
உய்துநாமெனவினாவினோடினார்மலைமுழையின். (௧)

காலின்மாமதலையிவர்காண்மினோகறுவுடைய
வாலியேவலின்வரவினார்கடாம்வரிசிலையர்
நீலமால்வரையனையர்நீதியாநினைதிரென
மூலமோர்கிலர்மறுகியோடினார்முழையதனில். (௨)

தாரநீலனைமருவுதாமமாருதியைமுதல்
வீரரோடிரவிசுதன்மேருமால்வரையைநிகர்
பாரமாமலையினொருபாகமோடுதல்புரிய
ஆரமார்பருமதனினுகுமாறுறல்கருதி. (௩)

மானைநாடுதல்புரினார்வாலியேவலின்வருதல்
ஆனவாறெனமதியாவிசோர்நிலையர்தொடர்

ஏனைவானரர்சிலருமேகமாமுறையின்முழு
ஞானராதலாயறிவினுடிமாருதிமொழியும். (௪)

அவ்விடத்தவர்மறுகியஞ்சிநெஞ்சழியமைதி
வெவ்விடத்தினைமறுகுதேவர்தானவர்வெருவல்
தவ்விடத்தினிதருளுநாழ்சலடக்கடவுளென
இவ்விடத்திடையிருமினஞ்சலென்றிடையுதவி. (௫)

அஞ்சனைக்கொருசிறுவனஞ்சனக்கிரியனைய
மஞ்சனைக்குறுகியொருமாணவப்படிவமொடு
வெஞ்சமத்தொழிலர்தவமெய்யர்கைச்சிலையரென
நெஞ்சயிர்த்தயன்மறையறின்றுகற்பினினினையும். (௬)

தேவருக்கொருதலைவராமுதற்றேவரெனின்
மூவர்மற்றிவரிருவர்மூரிவிற்காரிவரை
யாவரொப்பவருலகிலியாதிவர்க்கரியபொருள்
கேவலத்திவர்நிலைமைதேர்வதெக்கிழமைகொடு. (எ)

சிந்தையிற்சிறிதுதுயர்சேர்வுறத்தெருமரலின்
நொந்தயர்த்தனரனையர்நோவுறச்சிறியரலர்
அந்தரத்தமரரலர்மானிடப்படிவர்மயல்
சிந்தனைக்குரியபொருடேடுதற்குறுநிலையர். (அ)

தருமமுந்தகவுமிவர்தனமெனுந்தகையரிவர்
கருமமும்பிறிதொர்பொருள்கருதியன்றுகருதின்
அருமருந்தனையதிடையழிவுவந்துள்ளதனை
இருமருங்கினுநெடிதுருவுகில்றனரிவர்கள். (௯)

கதமெனும்பொதுமையிலர்கருணையின்கடலனையர்
இதமெனும்பொருளலதொரியல்புணர்ந்திலரிவர்கள்
சதமனஞ்சுறுநிலையர்தருமனஞ்சுறுசரிதர்
மதனனஞ்சுறுவடிவர்மறலியஞ்சுறுவிறலர். (௧௦)

வேறு.

என்பனபலவுமெண்ணியிருவரையெய்தநோக்கி
அன்பினனுருகுகின்றவுள்ளத்தனுர்வத்தோரை
முன்பிரிந்தனையர்தம்மைமுன்னினுனென்னநின்றுன்
தன்பெருங்குணத்தாற்றன்னிற்றுனலாதொப்பிலாதான். (௧௧)

தன்கன்றுகண்டவன்னதன்மையதருகட்பேழ்வாய்
மின்கன்றுமெயிற்றுக்கோண்மாவேங்கையென்றினையவேயும்
பின்சென்றுகாதல்கூரப்பேய்கணீர்த்திரங்குகின்ற
வென்கன்றுகின்றவெண்ணிற்பற்பலவிவனாயம்மா. (௧௨)

மயின்முதற்பறவையெல்லாமணிநிறத்திவர்கண்மேனி
வெயிலுறத்திரங்கிமீதாவிருஞ்சிறைப்பந்தர்வீசி
எயில்வகுத்தெய்துகின்றவினமுகிற்கணங்களெங்கும்
பயில்வுறத்திவலைசிந்திப்பயப்பயத்தழுவும்பாங்கர். (கங)

காயெரிகனலுங்கற்கள்கள்ளுடைமலர்களேபோல்
தூயசெங்கமலபாதந்தோய்தொறுங்குழைந்துதோன்றும்
போயினதிசைகடோறுமரனெடுபுல்லுமெல்லாம்
சாய்வுறத்தொழுவபோலிங்கிவர்களோதருமமாவார். (கச)

துன்பினைத்துடைத்துமாயத்தொல்வினைதன்னைநீக்கித்
தென்புலத்தன்றிமீளாநெறியுய்க்குந்தேவரோதாம்
என்பெனக்குருகுகின்றதிவர்கின்றதளவில்காதல்
அன்பினுக்கவதியில்லையடைவென்கொலறிதறேற்றேன். (கரு)

அவ்வழியெண்ணியாண்டவ்விருவருமெய்தலோடும்
செவ்வழியுள்ளத்தானுந்தெரிவுறவெதிர்சென்றெய்திக்
கவ்வையின்றாகநுங்கள்வரவெனக்கருணையோனும்
எவ்வழிநீங்கியோய்நீயாரெனவிளம்பலுற்றான். (கசு)

மஞ்செனத்திரண்டகோலமேனியர்மகளிர்க்கெல்லாம்
நஞ்செனத்தகையவாகிநளிரிரும்பனிக்குத்தேம்பாக்
கஞ்சமொத்தலர்ந்தசெய்யகண்ணையால்காற்றின்வேந்தற்
கஞ்சனைவயிற்றில்வந்தேனாமமுமனுமனென்றான். (கஎ)

இம்மலையிருந்துவாழுமெரிகதிர்ப்பரிதிச்செல்வன்
செம்மலுக்கேவல்செய்வேன்றேவநும்வரவுநோக்கி
விம்மலுற்றனையனேவவினவியவந்தேனென்றான்
எம்மலைக்குலமுந்தாழவிசைசுமந்தெழுந்ததோளான். (கஅ)

மாற்றமதுரைத்தலோடும்வரிசிலைக்குரிசின்மைந்தன்
தேற்றமுற்றிவனினூங்குசெவ்வியோரின்மைதேறி
ஆற்றலுநிறையுங்கல்வியமைதியுமறிவுமென்னும்
வேற்றுமையிவனோடில்லையாமெனவிளம்பலுற்றான். (ககூ)

இல்லாதவுலகத்தெங்குமிங்கிவனிசைகள்கூரக்
கல்லாதகலையும்வேதக்கடலுமேயென்னுங்காட்சி [ன்
சொல்லாலேதோன்றிற்றன்றே யார்கொலிச்சொல்லின்செல்வ
வில்லார்தோளிளையவீரவிரிஞ்சனோவிடைவலானோ. (உ0)

மாணியாம்வடிவமன்றுமற்றிவன்வடிவமைந்த
வாணியிவ்வுலகுக்கெல்லாமென்னலாமாற்றற்கேற்ற
சேணுயர்பெருமைதன்னைச்சிக்கறத்தெரிந்தேன்பின்னும்
காணுதிமெய்ம்மையென்றுதம்பிக்குக்கழறிக்கண்ணன். (உக)

மற்றுமிவ்வுலகத்துள்ளமுனிவர்வானவர்களாரிச்
சொற்றிறமுடையார்மற்றைச்சுருதியின்றுறையாவு
முற்றறிதருமிம்மாணிமொழிக்கெதிர்முதல்வராய
பெற்றியர்மூவர்க்கேயும்பேராற்றலரிதென்றான். (உஉ)

எவ்வழியிருந்தான்சொன்னகவிகுலத்தரசன்யாங்கள்
அவ்வழியவனைக்காணுமருத்தியாலணுகவந்தோம்
இவ்வழிநின்னையுற்றவெமக்கினியென்கொலென்னச்
செவ்வழியுள்ளத்தோனைக்காட்டுதிதெரியவென்றான். (உங)

மாதிரப்பொருப்போடோங்கிவரம்பிலாவுலகின்மற்றிப்
பூதரப்புயத்துவீரர்நும்மொக்கும்புனிதரியாரோ
ஆதரித்தவனைக்காண்டற்கணுகினீரொன்னினன்றான்
நீதவித்தமையச்செய்தசெய்தவச்செல்வநன்றே. (உச)

இரவிதன்புதல்வன்றன்னையிந்திரன்புதல்வனென்னும்
பரிவிலன்சீறப்போந்துபருவரற்கொருவனாகி
அருவியங்குன்றிலென்னோடிருந்தனனவன்பாற்செல்வம்
வருவதோரமைவின்வந்தீர்வலாயினும்வளர்ந்ததோளீர். (உரு)

ஒடுங்கலியுலகமியாவுமுவந்தனருதவிவேள்வி
தொடங்கினமற்றுமுற்றத்தொல்லறந்துணிவரன்றே
கொடுங்குலப்பகைஞனாகிக்கொல்லியவந்தகூற்றை
நடுங்கினர்க்கபயநல்குமதனினுநல்லதுண்டோ. (உசா)

எம்மையேகாத்திரென்றற்கெளிதரோவிமைப்பிலாதோர்
தம்மையேமுதலிட்டான்றசராசரஞ்சமைந்தவாற்றல்
மும்மையேயுலகுங்காக்குமுதல்வர்நீர்முருகற்செவ்வி
உம்மையேபுகல்புக்கேமுக்கிதின்வருமுறுதியுண்டோ. (உஎ)

யாரெனவிளம்புகேனானெங்குலத்தலைவற்கும்மை
வீரநீர்பணித்திரென்றான்மெய்ம்மையின்வேலிபோல்வான்
வார்கழலிளையவீரன்மரபுளிவாய்மையாதும்
சோர்விலதிலைமையெல்லாந்தெரிவுறச்சொல்லலுற்றான். (உஅ)

சூரியன்மரபிற்றோன்றிச்சுடர்நெடுநேமியாண்ட
ஆரியனமரர்க்காகவசுரனையாவியுண்ட

வீரியன்வேள்விசெய்துவிண்ணுலகோடுமாண்ட
காரியல்கருணையன்னகன்னனக்கவிகைமன்னன். (௨௯)

புயறருமதத்தின்கோட்டுப்புகர்மலைக்கிறையையூர்ந்து
மயறருமவுணரியாருமடிதரவரிவிற்கொண்ட
இயறரும்புலமைச்செங்கோன்மனுமுதலியாருமொவ்வாத்
தயரதன்கனகமாடத்தடமதிலயோத்திவேந்தன். (௩௦)

அன்னவன்சிறுவனுமிவ்வாண்டகையன்னையேவத்
தன்னுடையுரிமைச்செல்வந்தம்பிக்குத்தகவினல்கி
நன்னெடுங்கானஞ்சேர்ந்தானாமமுமிராமனென்பான்
இந்நெடுஞ்சிலைவலானுக்கேவல்செய்யடியனியானே. (௩௧)

என்றவன்றோற்றமாதியிராவணனிழைத்தமாயப்
புன்றொழிலிறுதியாகப்புகுந்துளபொருள்களெல்லாம்
ஒன்றுமாண்டொழிவுறாமலுணர்த்தினனுணர்த்தக்கேட்டு
நின்றவக்காலின்மைந்தனெடிதுவந்தடியிற்றாழ்ந்தான். (௩௨)

தாழ்தலுந்தகாதசெய்ததென்னைநீதருமமன்றால்
கேள்விநான்மறைவலாளாவென்றனனென்னக்கேட்ட
பாழியந்தடந்தோள்வீரமாருதிபதுமச்செங்கண்
ஆழியாயடியன்றானுமரிகுலத்தொருவனென்றான். (௩௩)

மின்னுருக்கொண்டவில்லோர்வியப்புறவேதநன்னூல்
பின்னுருக்கொண்டதென்னும்பெருமையாம்பொருளுந்தாழப்
பொன்னுருக்கொண்டமேருபுயத்திற்குமுவமைபோதாத்
தன்னுருக்கொண்டுநின்றான்றருமத்தின்றனிமைதீர்ப்பான். ( )

கண்டிலனுலகமூன்றுங்காலினாற்கடந்துகொண்ட
புண்டரீகக்கணழிப்புரவலன்பொலன்கொள்சோதிக்
குண்டலவதனமென்றாற்கூறலாந்தகைமைத்தன்றால்
பண்டைநூற்கதிரோன்சொல்லப்படித்தனன்படிவமம்மா. ( )

தாட்படாக்கமலமன்னதடங்கணான்றம்பிக்கம்மா
ஈட்படாதின்றநீக்கிக்கீழ்ப்படாதாகியென்றும்
நாட்படாமறைகளாலுநவைபடாஞானத்தாலும்
கோட்படாப்பதமேயையகுரக்குருக்கொண்டதென்றான். (௩௬)

நல்லனநிமித்தம்பெற்றோநம்பியைப்பெற்றோநம்பால்
இல்லையேதுன்பமானதின்பமுமெய்திற்றன்றே
வில்லினாயிவனைப்போலாங்கவிகுலக்குரிசில்வீரன்
சொல்லினாலேவல்செய்வானவனிலைசொல்லற்பாற்றே. (௩௭)

என்றகமலர்ந்துகோலமுகமலர்ந்தினிதுநின்ற
குன்றுயர்தோளினுனைநோக்கியக்குரக்குச்சீயம்
சென்றவன்றன்னையின்னேகொணர்கின்றேனென்றிதுபோது
வென்றியிரிருத்திஎன்றுவிடைபெற்றுவினாவிற்போனான் (௩௮)

௨-வது-அனுமப்படலமுற்றிற்று ஆகூ படலம்-௨-இ
திருவிருத்தம்-அக.

## ௩-வது-நட்புக்கோட்படலம்.

போனமந்தரமணிப்புயநெடும்புகழினான்
ஆனதன்னரிகுலத்தரசன்மாடணுகினான்
யானுமுன்குலமுமிவ்வுலகுமுய்ந்தனமெனு
மானவன்குணமெலாநினையுமாமதியினான். (க)

மேலவன்றிருமகற்குனாசெய்தான்வினாசெய்தார்
வாலியென்றளவிலாவலியினானுயிர்தெறக்
காலன்வந்தனனிடர்க்கடல்கடந்தனமெனு
ஆலமுண்டவனினின்றருநடம்புரிகுவான். (௨)

மண்ணுளார்விண்ணுளார்மாறுளார்வேறுளார்
எண்ணுளார்திசையுளாரியலுளாரிசையுளார்
கண்ணுளாராயினார்பகையுளார்கழிநெடும்
புண்ணுளாராருயிர்க்கமுதமேபோலுளார். (௩)

சூழிமாலியானையான்முன்னுழற்றயரதன்
பாழியாலுலகெலாமொருவழிப்படரவாழ்
ஆழியான்மைந்தர்பேரறிவினாரழகினார்
ஊழியாரெளிதுனக்கரசுதந்துதவுவார். (௪)

நீதியார்கருணையின்னெறியினார்நெறிவயிற்
பேதியாநிலைமையாரெவரினும்பெருமையார்
போதியாவளவிலாவுணர்வினார்புகழினார்
காதிசேய்தருநெடுங்கடவுள்வெம்படையினார். (௫)

வேலிகற்சினவுதாடகைவிளிந்துருளவிற்
கோலியக்கொடுமையாள்புதல்வனைக்கொன்றுதன்
காலியற்பொடியினானெடியகற்படிவமாம்
ஆலிகைக்கரியபேருருவளித்தருளினார். (௬)

நல்லுறப்பமையதம்பியரின்முன்பவனயந்
தெல்லுறப்பரியபேரொளிசுடர்க்கடவுடன்

பல்பிறத்தவன்வலிக்கமைதிரியம்பகமெனும்
வில்லிறத்தருளினன்மிதிலைபுக்கனையநாள். (எ)

உளைவயப்புரவியானுதவவுற்றொருசொலால்
அளவில்கற்புடையசிற்றவைபணித்தருளலால்
வளையுடைப்புணரிசூழ்மகிதலத்திருவெலாம்
இளையவற்குதவியித்தலையெழுந்தருளினன். (அ)

தெவ்விராவகைநெடுஞ்சிலைவிராமழுவினன்
அவ்விராமனையுமாவலிதொலைத்தருளினன்
இவ்விராகவன்வெகுண்டெழுமிராவணனையனும்
வெவ்விராதனையிராவினையுடைத்தருளினன். (கூ)

கரன்முதற்கருணையற்றவர்கடற்படையொடும்
சிரமுகச்சிலைகுனித்துதவுவார்திசையுளார்
பரமுகப்பகைதுமித்தருளுவார்பரமராம்
அரன்முதற்றலைவருக்கதிசயத்திறலினர். (க0)

ஆயமாநாகர்தாழாழியானேயலால்
காயமானுயினுனவனேகாவலா
நீயமானேர்தியானேருமாரீசனுர்
மாயமானுயினுல்மாயமானுயினுன். (கக)

உக்கவந்தமுமுடற்பகைதுறந்துயர்பதம்
புக்கவந்தமுநமக்குரைசெயும்புரையவோ
திக்கவந்தரநெடுந்திரள்கரஞ்சினவுதோள்
அக்கவந்தனுதினைந்தமரர்தாழ்சவரிபோல். (கஉ)

முனைவரும்பிறருமேன்முடிவரும்பகலெலாம்
இனையர்வந்துறுவரொன்றியறவம்புரிகுவார்
வினையெனுஞ்சிறைதுறந்துயர்பதம்விரவினர்
எனையொன்றுரைசெய்கேனிரவிதல்சிறுவனே. (கஙு)

மாயையான்மதியிலாநிருதர்கோன்மனைவியைத்
தீயகானெறியினுய்த்தனனவட்டேடுவார்
நீயையாதவமிழைத்துடைமையானெடுமெனந்
தாயையாவுடையையாலுறவினைத்துணிகுவார். (கச)

தந்திருந்தனரருட்டகைநெடும்பகைஞனும்
இந்திரன்சிறுவனுக்கிறுதியின்றிசைதரும்
புந்தியின்பெருமையாய்போதரொன்றுரைசெய்தான்
மந்திரங்கெழுமுனூன்மரபுணர்ந்துதவுவான். (கரு)

அன்னவாமுனாயெலாமறிவினுலுணர்குவான்
உன்னையேயுடையவெற்கரியதெப்பொருளரோ
பொன்னையேபொருவுவாய்போதெனப்போதுவான்
தன்னையேயனையவன்சரணம்வந்தணுகிஞல். (கசு)

வேறு.

கண்டனனென்பமன்றேகதிரவன்சிறுவன்காமர்
குண்டலந்துறந்தகோலவதனமுங்குளிர்க்குங்கண்ணும்
புண்டரீகங்கள்பூத்துப்புயறழீஇப்பொலிந்ததிங்கள்
மண்டலமுதயஞ்செய்தமரகதக்கிரியன்ஞனை. (கஎ)

நோக்கினனெடிதுநின்றுநெடுவருங்கமலத்தண்ணல்
ஆக்கியவுலகமெல்லாமன்றுதொட்டின்றுகாறும்
பாக்கியம்புரிந்தவெல்லாங்குவிந்திருபடிவமாகி
மேக்குயர்தடந்தோள்பெற்றுவீரராய்விளைந்தவென்பான். ()

தேறினனமரர்க்கெல்லாந்தேவராந்தேவரன்றே
மாறியிப்பிறப்பில்வந்தார்மானிடராகிமன்றே
ஆறுகொள்சடிலத்தானுமயனுமென்றிவர்களாதி
வேறுளகுழுவையெல்லாமானிடம்வென்றதன்றே. (கசு)

எனநினைந்தினையவெண்ணியிவர்கின்றகாதலோதக்
கனைகடற்கரைநின்றேறக்கண்ணிணைகளிப்பநோக்கி
அனகனைக்குறுகினனவ்வண்ணலுமருத்திகூரப்
புனைமலர்த்தடக்கைநீட்டிப்போந்தினிதிருத்தியென்றான். (உ0)

தவாவலியரக்கனொன்னுந்தகாவிருட்பகையைத்தள்ளிக்
குவாலறநிறுத்தற்கேற்றகாலத்தின்கூட்டமொத்தார்
அவாமுதலறுத்தசிந்தையனகனுமரியின்வேந்தும்
உவாவுறவந்துகூடுமுடுபதியிரவியொத்தார். (உக)

கூட்டமுற்றிருந்தவீரர்குறித்ததோர்பொருட்குமுன்னர்
ஈட்டியதவமும்பின்னர்முயற்சியுமியைந்ததொத்தார்
மீட்டும்வாளரக்கனொன்னுந்தீவினைவேரில்வாங்கக்
கேட்டுணர்கல்வியோடுஞானமுங்கிடைத்ததொத்தார். (உஉ)

ஆயதோரவதியின்கணருக்கன்சேயரசைநோக்கித்
தீவினைதீயநோற்றுணின்னின்யார்செல்வநின்னை
நாயகமுலகுக்கெல்லாமென்னலாநலத்தினனே
மேயினன்விதியேநல்கின்மேவலாகாதெனென்றான். (உங)

மையறுதவத்தின்வந்தசவரியிம்மலையினீவத்
தெய்தினையிருந்ததன்மையியம்பினளியாங்களுற்ற

கைய றுதுயரநில் றுற்கடப்பதுகருதிவந்தோம்
ஐயநிற்றீருமென்னவரிகுலத்தரசன்சொல்வான். (உ௫)

மூரணுடைத்தடக்கையோச்சிமுன்னவன்பின்வந்தேனை
இருணிலைப்புறத்தின்காறுமுலகெங்குந்தொடாவிக்குன்
றரணுடைத்தாகியுய்ந்தேனுருயிர் துறக்கவாற்றேன்
சரணுனைப்புகுந்தேனெல்லைத்தாங்குதறுமமென்றான். (உ௬)

என்றவக்குரங்குவேந்தையிராமனுமிரங்கிநோக்கி
உன்றனக்குரியவின்பதுன்பங்களுள்ளமுன்னாள்
சென்றனபோக்கிமேல்வந் துறுவனதீர்ப்பலல்ன
நின்றனவெனக்குநிற்குநேரொனமொழிபுநேரா. (உ௭)

மற்றினியுனாப்பதென்னேவானிடைமண்ணிலுன்னைச்
செற்றவரென்னைச்செற்றார்தீயரேயெனிலுமுன்றே
நற்றவரெனக்குமுற்றாருன்கிளையெனதென்காதற்
சுற்றமுன்சுற்றநீயேயின்னுயிர்த்துணைவனென்றான். (உ௮)

ஆர்த்தனகுரக்குச்சேனையஞ்சனைச்சிறுவன்மேனிப்
போர்த்தனபொடித்தரோமப்புளகங்கள்பூவின்மாரி
தூர்த்தனர்விண்ணோர்மேகஞ்சொரிந்தனவனகன்சொன்ன
வார்த்தையெக்குலத்துளோர்க்கு மறையினுமெய்யென்றன்னு.

ஆண்டெழுந்தடியிற்றாழ்ந்தவஞ்சனைச்சிங்கம்வாழி
தூண்டிரட்டடந்தோண்மைந்ததோழனுநீயும்வாழி
ஈண்டுநுங்கோயிலெய்தியினிதினுமிருக்கைகாண
வேண்டுநும்மருளென்னென்றான்வீரனும்விழுமிதென்றான். ()

எகினனிரவிசேயுமிருவருமரிகளென்னும்
ஊகவெஞ்சேனைசூழவறந்தொடர்ந்துவந்துவாழ்த்த
நாகமுநரந்தக்காவுநளினவாவிகளுநண்ணிப்
போகபூமியையுமேசும்புதுமலர்ச்சோலைபுக்கார். (௩0)

ஆரமுமகிலுந்துன்றியவிர்பளிக்கறையளாவி
நாரநின்றனபோற்றோன்றிநவமலர்த்தடங்களுடைய்
பாரமுமருங்குந்தெய்வத்தருவுநீர்ப்பண்ணையாடும்
சூரமகளிருசறுவன்றியசும்மைத்தன்றே. (௩௧)

வேறு.

அயர்வில்கேள்விசாலநிருர்வேலைமுன்
பயில்வில்கல்வியார்பொலிவில்பான்மைபோல்
குயிலுமாமணிக்குழுவுசோதியால்
வெயிலும்வெள்ளிவெண்மதியுமேம்படா. (௩௨)

ஏயவன்னதாமினியசோலைவாய்
மேயமைந்தருங்கவியின்வேந்தனும்
தூயபூவணைபொலிந்துதோன்றினார்
ஆயவன்பினோடளவளாவுவார். (௫௩)

கனியுங்கந்தமுங்காயுந்தூயநல்
இனியயாவையுங்கொணரயாரினும்
புனிதன்மஞ்சனத்தொழில்புரிந்துபின்
இனிதிருந்தநல்விருந்துமாயினான். (௫௪)

விருந்துமாகியம்மெய்ம்மையன்பினோ
டிருந்துநோக்கிநின்றிறைவனிந்தியாப்
பொருந்துநன்மனைக்குரியபூவையைப்
பிரிந்துளாய்கொலோநீயும்பின்னென்றான். (௫௫)

என்றவேலையிலெழுந்துமாருதி
குன்றுபோலநின்றிருகைகூப்பினான்
நின்றநீதியாய்நெடிதுகேட்டியால்
ஒன்றுநானுனக்குரைப்பதுண்டென. (௫௬)

நாலுவேதமானவையிலார்கலி
வேலியன்னதோர்மலையின்மேலுளான்
சூலிதன்னருட்டுறையின்முற்றினான்
வாலியென்றுளான் வரம்பிலாற்றலான். (௫௭)

கழறுதேவரோடவுணர்கண்ணினின்
றுழலுமந்தரத்துருவுதேயமுன்
அழலுங்கோளராவகடுதேய்விடச்
சுழலும்வேலையைக்கடையுந்தோளினான். (௫௮)

நிலனுநீருமாநெருப்புங்காற்றுமென்
றுலவில்பூதநான்குடையவாற்றலான்
அலையின்வேலைசூழ்கிடந்தவாழிமா
மலையினின்றுமம்மலையின்வாவுவான். (௫௯)

கிட்டினார்பொரக்கிடைக்கினன்னவர்
பட்டநல்வரம்பாகமெய்தவான்
எட்டுமாதிரத்திறுதிநாளுமுற்
றட்டமூர்த்திதாள்பணியுமாற்றலான். (௬0)

கால்செலாதவன்முன்னர்க்கந்தவேள்
வேல்செலாதவன்மார்பில்வென்றியான்

வாள்செலாதவாயலதிராவணன்
கோல்செலாதவன்குடைசெலாதரோ. (௪௧)

மேருவேமுதற்கிரிகள்வேரொடும்
பேருமேயவன்பெருமேனெடும்
காருவானமுங்கதிருநாகமும்
ஆருமேயவன்பெரியதோள்களால். (௪௨)

பாரிடந்தவெம்பன்றியன்றைநாள்
நீர்கடைந்தபேராமைநேருளான்
மார்பிடந்தமாவெனினுமற்றவன்
தார்கிடந்ததோடகையவல்லவே. (௪௩)

படர்ந்தநீணெடுந்தலைபரப்பிமீ
தடர்ந்துபாரம்வந்துறவனந்தனும்
கிடந்துதாங்குமிக்கிரியையேவினவ்
நடந்துதாங்குமிப்புவனநாளெலாம். (௪௪)

கடலுளைப்பதுங்கால்சலிப்பதும்
மிடலருக்கர்தேர்மீதுசெல்வதும்
தொடரமற்றவன்சூழியினெற்றலால்
அடலின்வெற்றியாயயலினவவோ. (௪௫)

வெள்ளமேழுபத்துள்ளமேருவைத்
தள்ளலானதோளரிகடானையான்
உள்ளமின்றியவ்வுயிராயஞ்சலால்
வள்ளலேயவன்வாழவாழுமால். (௪௬)

மழையிடிப்புறுவயவெஞ்சீயமா
முழையிடிப்புறுமுரண்வெங்காலுமென்
றழைதுடிப்புறுச்சார்வுறுதவன்
விழைவிடத்தின்மேல்விளிவையஞ்சலால். (௪௭)

மெய்க்கொள்வாலினான்மிடலிராவணன்
தொக்கதோளிறத்தொடர்ப்படுத்தநாள்
புக்கிலாதவும்பொழியரத்தநீர்
உக்கிலாதவும்முலகம்யாவதே. (௪௮)

இந்திரன்றனிப்புதல்வனின்னளிச்
சந்திரன்றழைத்தனையதன்மையான்
அந்தகன்றனக்கரியவாணையான்
முந்திவந்தனனிவனின்மொய்ம்பினாய். (௪௯)

அன்னவன்னெமக்கரசனுகவே
தின்னவன்னிளம்பதமியற்றுநாள்
முன்னவன்குலப்பகைஞன்முட்டினன்
மின்னெயிற்றுவாளவுணன்மேன்மையான். (ருo)

முட்டிநின்றவன்முரணுரத்தினோர்
ஒட்டவஞ்சிநெஞ்சுலையவோடினன்
வட்டமண்டலத்தரிதுவாழ்வெனு
எட்டரும்பெரும்பிலனுளெய்தினன். (ருக)

எய்துகாலையப்பிலனுளெய்தியான்
நொய்தினங்கவற்கொணர்வனென்மையர்ய்
செய்திகாவனீசிறிதுபோழ்தெனு
வெய்தினெய்தினன்வெகுளிமேயினன். (ருஉ)

ஏகிவாலியுமிருதுவேழ்டேழ்
வேகவெம்பிலந்தடவிவெம்மையான்
மோகவென்றிமேன்முயல்பின்வைகிடச்
சோகமெய்தினன்றுணைதுளங்கினன். (ருங)

அழுதழுங்குறுமிவனையன்பினில்
தொழுதிரந்துநின்றெழிலிதாதலால்
எழுதுவென்றியாயரசுசெய்கெனுப்
பழுதிதென்றனன்பரியுநெஞ்சினன். (ருச)

என்றுதானுமவ்வழியிரும்பிலம்
சென்றுமுன்னவற்றேடுவேனவற்
கொன்றுளான்றனைகொல்லொணுதெனிற்
பொன்றுவேனெனுப்புகுதன்மேயினன். (ருரு)

தடுத்துவல்லவர்தணிவுசெய்துநோய்
எடுத்தவேலையோரிவையைவினுவியைத்
தடுத்தகாவலுமரிகளாணையாற்
கொடுத்ததுண்டிவன்கொண்டனன்கொலாம். (ருசா)

அன்னநாளின்மாயாவியப்பிலத்
தின்னவாயினூடெய்துமென்னயாம்
பொன்னின்மால்வரைப்பொருப்பொழித்துவே
றுன்னுகுன்றெலாமுடனடுக்கினோம். (ருஎ)

சேமமவ்வழிச்செய்துசெங்கதிர்க்
கோமகன்றனைக்கொண்டுவந்துயர்

மேவுகுன்றின்மேல்வைகும்வேலைவாய்
ஆவியுண்டனனவனையன்னவன். (௫௮)

ஒளித்தவன்றுயிர்க்கள்ளையுண்டுளம்
களித்தவாலியுங்கடிதினெய்தினான்
விளித்துநின்றுவேறுணாபெருணிருந்
தளித்தவாறுநன்றிளவலாறொறு. (௫௯)

வால்விசைத்துவான்வளிநிமிர்ந்தெனக்
கால்விசைத்தவன்கடிதுதைத்தலும்
நீணிறத்துவிண்ணெடுமுகட்டவும்
வேலைபுக்கவும்பெரியவெற்பெலாம். (௬௦)

ஏறினானவனெவருமஞ்சுறச்
சீறினானெடுஞ்சிகரமெய்தினான்
வேறிலாதவன்புதல்வன்மெய்ம்மையாம்
ஆறினானும்வந்தடிவணங்கினான். (௬௧)

வணங்கியண்ணனின்வரவிலாமையால்
உணங்கியுன்வழிப்படரவுன்னுவேற்
கிணங்கரின்மையாலிறைவநம்முடைக்
கணங்கள்காவலுன்கடமையென்றனர். (௬௨)

ஆணையஞ்சியிவ்வரசையெய்திவாழ்
நாணிலாதவென்னவையைநன்குவாய்
பூணிலாவுதோளினைபொருயெனக்
கோணினானெடுங்கொடுமைகூறினான். (௬௩)

அடல்கடந்ததோளவனையஞ்சிவெம்
குடல்கலங்கியெங்குலமொடுங்கமுன்
கடல்கடைந்தவெங்கரதலங்களால்
உடல்கடைந்தனனிவனுலைந்தனன். (௬௪)

இவனுலைந்துலைந்தெழுகடற்புறத்
தவனியுங்கடந்தெயிலடைந்தனன்
கவனமொன்றிலன்கால்கடாயென
அவனிவேலையேழரியின்வாவினான். (௬௫)

என்றுகான்மகனியம்பவீசனும்
நன்றுநன்றெனாநனிதொடர்ந்துபின்
சென்றவாலிமுன்சென்றசெம்மனான்
அன்றுவாவுதற்கறிந்தனன்கொலாம். (௬௬)

இனையவாவியந்திளவறன்னெடும்
வனையும்வார்கழற்கருணைவள்ளல்பின்
பினையவீரர்செய்தமையியம்பெனப்
புனையும்வாகையால்புகழன்மேயினான். (சுஎ)

நக்கறக்கடற்புறத்துநன்னுநாள்
செக்கர்மெய்தனிச்சோதிசேர்கலாச்
சக்கரப்பொருப்பிற்றலைக்குமப்
பக்கமுற்றவன்கடிதுபற்றினான். (சுஅ)

பற்றியஞ்சிலன்பழியின்வெஞ்சினம்
முற்றிநின்றதன்முரண்வலிக்கையால்
எற்றுவானெடுத்தெழுதலும்பிழைத்
தற்றமொன்றுபெற்றிவனகன்றனன். (சுகூ)

எந்தைமற்றவனெயிறதுக்குமேல்
அந்தகற்குமோராணுமில்லையால்
இந்தவெற்பில்வந்திவனிருந்தனன்
முந்தையுற்றதோர்சாபமுண்மையால். (எ0)

உரிமையென்றிவற்குரியதாரமாம்
அருமருந்தையுமவன்விரும்பினான்
இருமையுந்துறந்திவனிருந்தனன்
கருமமிங்கிதெங்கடவுளென்றனன். (எக)

வேறு.

பொய்யிலாதவன்வரன்முறையிம்மொழிபுகல
ஐயனாயிரம்பெயருடையமலற்குமமலன்
வையநுங்கியவாயிதழ்துடித்ததுமலர்க்கட்
செய்யதாமரையாம்பலம்போதெனச்சிவந்த. (எஉ)

ஈரநீங்கியசிற்றவைசொற்றனனென்ன
ஆரம்வீங்குதோட்டம்பிக்குத்தன்னரசுரிமைப்
பாரமீந்தவன்பரிவிலனொருவன்றன்னிளையோன்
தாரம்வௌவினனென்றசொற்றரிக்குமாறுளதோ. (எ௩)

உலகமேழினோடேழும்வந்தவனுயிர்க்குதவ
விலகுமென்னினும்வில்லுடைவாளியின்வீட்டித்
தலைமையோடுநின்றாரமுமுனக்கின்றுதருவேன்
புலமையோயவனுறைவிடங்காட்டென்றுபுகன்றான். (எ௪)

எழுந்துபேருவகைக்கடற்பெருந்திரையினாப்ப
அழுந்துதுன்பத்துக்கக்கரைகண்டனனனையான்

விழுந்ததேயினிவாலிதன்வலியெனவிருப்பா
மொழிந்தவீரற்கியாமென்னுவதுண்டெனமொழிந்தான். (௭௫)

அனையவாண்டுரைத்தனுமனேமுதலியவமைச்சர்
நினைவுங்கல்வியுநீதியுஞ்சூழ்ச்சியுநிறைந்தார்
எனையரன்னவரோடும்வேறிருந்தனனிரவி
தனையனவ்வழிச்சமீரணன்மகனுரைதருவான். (௭௬)

உன்னினேனினதுள்ளத்தினுள்ளத்தையுரவோய்
அன்னவாலியைக்காலனுக்களிப்பதோராற்றல்
இன்னவீரர்பாலில்லையென்றயிர்த்தனையினியான்
சொன்னகேட்டவைகடைப்பிடிப்பாயெனச்சொன்னான். (௭௭)

சங்குசக்கரக்குறியுளதடக்கையிற்றாளில்
எங்குமித்தனையிலக்கணம்யாவர்க்குமில்லை
செங்கண்விற்கரத்திராமனத்திருநெடுமாலே
இங்குதித்தனனீண்டறநிறுத்துதற்கின்னும். (௭௮)

செறுக்கும்வன்றிறற்றிரிபுரந்தீயெழச்சினவிக்
கறுக்கும்வெஞ்சினக்காலன்றன்காலமுங்காலால்
அறுக்கும்புங்கவனுண்டபேராடகத்தனிவில்
இறுக்குந்தன்மையம்மாயவற்கன்றியுமெளிதோ. (௭௯)

என்னையீன்றவனிவ்வுலகியாவையுமீன்றான்
தன்னையீன்றவற்கடிமைசெய்தவமஃதையா
உன்னையீன்றவற்குறுபதமுளதெனவுரைத்தான்
இன்னதோன்றலேயவனிதற்கேதுவுண்டிறையோய். (௮௦)

றான்புதோன்றியபொழுதுடன்றோன்றினனெவர்க்கும்
முன்புதோன்றலையறிதற்குமுடிவெனென்றியம்ப
அன்புசான்றெனவுரைத்தனனையவென்னுக்கை
என்புதோன்றலவுருகினவெனிற்பிறிதெவனோ. (௮௧)

பிறிதுமன்னவன்பெருவலியாற்றலைப்பெரியோய்
அறிதியென்னினுண்டுபாயமுமஃதருமரங்கள்
நெறியினின்றனவேழினொன்றுருவவிந்நெடியோன்
பொறிகொள்வெஞ்சரம்போவதுகாணெனப்புகன்றான். (௮௨)

நன்றுநன்றெனநன்னெடுங்குன்றமுநாணும்
தன்றுணைத்தனிமாருதித்தோளிணைத்தழுவிச்
சென்றுசெம்மலைக்குறுகியான்செப்புவதுளதால்
ஒன்றுனக்கெனவிராமனுமுரைத்தியஃதென்றான். (௮௩)

ஏகவேண்டுமேயிந்நெறியெனவினிது தொண்டேபி
மாகநீண்டனகுறுகிடநிமிர்ந்தனமரங்கள்
ஆகவைந்திலேடிரண்டினென்றருவநின்னம்பு
போகவேயென்றன்மனத்திடர்போமெனப்புகன்றான். (அச)

மறுவிலானதுகூறலும்வானவர்க்கிறைவன்
முறுவல்செய்தவன்முன்னியமுயற்சியையுன்னி
எறுழ்வலித்தடந்தோள்களாற்சிலையைநாணேற்றி
அறிவினலளப்பரியவற்றருகுசென்றணைந்தான். (அரு)

ரு-வது-நட்புக்கோட்படலம்-முற்றிற்று.

ஆ படலம்-ரு-க்கு-திருவிருத்தம்-கஅசு.

## ச-வது-மராமரப்படலம்.

ஊழிபேரினும்பேர்விலவுலகங்களுலைந்து
தாழுங்காலத்துந்தாழ்விலதயங்குபேரிருள்சூழ்
ஆழிமாநிலந்தாங்கியவரும்பெருங்கிரிகள்
ஏழுமாண்டுசென்றொருவழிநின்றெனவியைந்த. (க)

கலைகொண்டோங்கியமதியமுங்கதிரவன்றானும்
தலைகண்டோடுதற்கருந்தவற்றொடங்குறுஞ்சாரல்
மலைகண்டோமென்பதல்லதுமலர்மிசையயற்கும்
இலைகண்டோமெனத்தெரிப்பருந்தரத்தனவேழும். (உ)

ஒக்கநாளெலாமுழல்வனவுலவிலவாக
மிக்கதோர்பொருளுளதெனவேறுகண்டிலமால்
திக்கும்வானமுஞ்செறிந்தவத்தருநிழற்சீதம்
புக்குநீங்கலிற்றளர்விலவிரவிதேர்ப்புரவி. (ரு)

நீடுதாள்களுங்கோள்களுமென்னமேனிமிர்ந்து
மாடுதோற்றுவமலமொனப்பொலிகின்றவனப்ப
ஓடுமாச்சுடர்வெண்மதிக்குட்கறுப்புயர்ந்த
கோடுதேய்த்தலிற்களங்கமுற்றுமன்னகுறிய. (ச)

நீதரும்பெருஞ்சாகைகடழைக்கின்றசெயலால்
வேதமென்னவுந்தகுவனவிசும்பினுமுயர்ந்த
ஆதியண்டமுன்பளித்தவனுலகினங்கவனூர்
ஓதிமந்தனிப்பெடையொடும்புடையிருந்துறைவ. (இ)

நாற்றமல்குபோதடைகனிகாய்முதனுறு
வீற்றுமண்டலத்தியாவையும்வீழ்கிலயாண்டும்
காற்றலம்பினுங்கலிநெடுவானிடைக்கலந்த
ஆற்றின்வீழ்ந்துபோயலைகடற்பாய்தருமியல்ப. (௬)

அடியினுலகளந்தவனண்டத்துக்கப்பால்
முடியின்மேற்சென்றமுடியனவாதலின்முடியா
நெடியமாலெனுநிலையனநீரிடைக்கிடந்த
படியின்மேனின்றமேருமால்வரையினும்பழைய. (௭)

வள்ளலிந்திரன்மைந்தற்குத்தம்பிக்கும்வைரத்
துள்ளமேயெனவொன்றினொன்றுள்வயிரத்த
தெள்ளுநீரிடைக்கிடந்தபார்சுமக்கின்றசேடன்
வெள்ளிவெண்படங்குடைந்துகீழ்போகியவேர. (௮)

சென்றுதிக்கினையளந்தனபணைகளிற்றேவர்
என்றுநிற்குமென்றிசைப்பனவிருசுடர்திரியும்
குன்றினுக்குயர்ந்தகன்றனவொன்றினுங்குறுகா
ஒன்றினுக்கொன்றினிடைநெடிதியோசனையுடைய. (௯)

ஆயமாமரமனைத்தையுநோக்கிநின்றமலன்
தூயவார்கணைதுரப்பதோராதரந்தோன்றச்
சேயவானமுந்திசைகளுஞ்செவிடுறத்தேவர்க்
கோய்விலாததோர்பயம்வரச்சிலையைநாணெறிந்தான். (௧௦)

ஒக்கநின்றதெவ்வுலகமுமங்கங்கேயோசை
பக்கநின்றவர்க்குற்றதுபகர்வதெப்படியோ
திக்கயங்களுமயங்கினதிசைகளுந்திகைத்த
புக்கயன்பதிசலிப்புறவொலித்ததப்பொருநாண். (௧௧)

அரிந்தமன்சிலைநாணொடிதார்த்தலுமமரர்
இரிந்துநீங்கினர்கதிபத்தினிறுதியென்றயிர்த்தார்
பரிந்ததம்பியேபாங்குநின்றான்மற்றைப்பல்லோர்
புரிந்ததன்மையையுரைசெயிற்பழியவற்புணரும். (௧௨)

எய்தல்காண்டுங்கோலின்னமென்றரிதின்வந்தெய்
பொய்யின்மாருதிமுதலினோர்புகழ்வுறும்பொழுதில்
மொய்கொள்வார்சிலைநாணினைமுறையுறவாங்கி
வெய்யவாளியையாளுடைவில்லியும்விட்டான். (௧௩)

ஏழுமாமரமுருவிக்கீழுலகமென்றிசைக்கும்
ஏழுமேபுக்குருவிப்பின்னுடனடுத்தியன்ற

ஏழிலாமையான்மீண்டதவ்விராகவன்பகழி
ஏழுகண்டபினுருவுமாலொழிவதன்றின்னும். (௧௪)

ஏழுவேலையுமுலகமேலுயர்ந்தனவேழும்
ஏழுகுன்றமுமிருடிகளெழுவரும்புரவி
ஏழுமங்கையரெழுவருநடுங்கினரொன்ப
ஏழுபெற்றபேரிக்கணக்கிலக்கமேல்றெண்ணி. (௧௫)

அன்னதாயினுமறத்தினுக்காருயிர்த்துணைவன்
என்னாத்தன்மையைநோக்கினரியாவருமெவையும்
பொன்னின்வார்கழற்புதுநறத்தாமரைபூண்டு
சென்னிமேற்கொண்டவருக்கன்சேயிவையிவைசெப்பும். (௧௬)

வேறு.

வையநீவானுநீமற்றுநீமலரின்மேல்
ஐயனீயாழிமேலாழிவாழ்கையனீ
செய்யதீவினைதெறுந்தேவுநீநாயினேன்
உய்யவந்துதவினாயுலகமுண்டுதவினாய். (௧௭)

என்னெனக்கரியதெப்பொருளுமெற்கெளிதலால்
உன்னையித்தலைவிடுத்துதவினார்விதியினார்
அன்னையொப்புடையவுன்னடியருக்கடியனியான்
மன்னவர்க்கரசவென்றுரைசெய்தான்வசையிலான். (௧௮)

ஆடினார்பாடினாரங்குமிங்குங்கலந்
தோடினாருவகையின்னறவையுண்டுணர்கிலார்
தேடினும்வாலிகாலனையெனுநெடிதுநாள்
வாடினார்தோளெலாம்வளரமற்றவரெலாம். (௧௯)

அண்டமும்மகிலமும்மடையவன்றனவிடைப்
பண்டுவெந்தனனெடும்பசைவறத்திடினும்வான்
மண்டலந்தொடுவதம்மலையின்மேல்மலையெனக்
கண்டனன்றுந்துபிக்கடலனனுடலமோ. (௨௦)

தென்புலக்கிழவனூர்மகிடமோதிசையின்வாழ்
வன்புலக்கரிமடிந்ததுகொலோமகரமீன்
என்புலப்புறவுலர்ந்ததுகொலோவிதுவென
அன்புலப்பரியதீயுரைசெய்வாயெனவவன். (௨௧)

ச-வது. மராமரப்படல முற்றிற்று.

ஆக படலம் - ச - க்கு-திருவிருத்தம்-௧௮௭

---

# ௫-வது-துந்துபிப்படலம்.

துந்துபிப்பெயருடைச்சுடுசினத்தவுணன்மீ
இந்துவைத்தொடநிமிர்ந்தெழுமருப்பிணையினன்
மந்தரக்கிரியெனப்பெரியவன்மகரநீர்
சிந்திடக்கருநிறத்தரியினைத்தேடுவான். (க)

அங்குவந்தரியெதிர்ந்தமைதியென்னென்றலும்
பொங்குவெஞ்செருவினிற்பொருதியென்றுரைசெயக்
கங்கையின்கணவனக்கறைமிடற்றிறைவனே
உங்கள்வெங்கதவலிக்கொருவனென்றுரைசெய்தான். (உ)

கூடிதுசென்றவனுமக்கடவுடல்கையிலையைக்
கொடியகொம்பினின்மடுத்தெழுதலுங்குறுகிமுன்
தொடிதிறின்குறையெனென்றலுநுவன்றனனரோ
முடிவில்வெஞ்செருவெனக்கருள்செய்வான்முயல்கெனா. (௩)

மூலமேவீரமேமூடினாயோடுபோர்
ஏதுமேதேவர்பாலேகெனாவேவினான்
சாலநாள்போர்செய்வாயாதியேற்சாருபோர்
வாலிபாலேகெனாவானுளோர்வானுளான். (௪)

அன்னவன்விடவுவந்தவனுவந்தரிகடம்
மன்னவன்வருகபோர்செய்கெனாமலையினைச்
சின்னபின்னப்படுத்தெய்தலுஞ்சினவியென்
முன்னவன்முன்னர்வந்தனையவன்முனைதலும். (௫)

இருவருந்திரிவுறும்பொழுதினின்னவர்களென்
றொருவருஞ்சிறிதுணர்ந்திலர்களெவ்வுலகினும்
வெருவருந்தகைவிலார்விழுவர்நின்றெழுவரால்
மருவருத்தகையர்தானவர்கள்வானவர்கடாம். (௬)

தீயெழுந்ததுவிசும்புறநெடுந்திசையெலாம்
போயெழுந்ததுமுழக்குடனெழுந்ததுபுகை
தோயநற்புணரியுஞ்சுடர்தடங்கிரிகளும்
சாயழிந்தனவடித்தலமெடுத்திடுதலால். (௭)

புயலும்வானகமுமப்புணரியும்புணரிசூழ்
அயலும்விழ்தூளியாலறிவருந்தகையவாம்
மயனின்மாமகனும்வாலியுமறத்துடலினர்
இயலுமாமதியமீராறும்வந்தெய்தவே. (௮)

அற்றதாகியசெருப்புரிவுறும்மளவினில்
கொற்றவாலியுமவன்குவவுத்தோள்வலியொடும்

பற்றியாசையினெடும்பணைமருட்பிணைபறித்
தெற்றினானவனும்வானிடியினின்றாதிருன். (௯)

தலையின்மேலடிபடக்கடிதுசாய்நெடிதுதாள்
உலையவாய்முழைதிறந்துதிரவாருமுகமா
மலையின்மேலுருமிடித்தென்னவால்மண்ணொடும்
குலையமாதிசைகளுஞ்செவிடுறக்குத்தினான். (௧௦)

கவரியிங்கிதுவெனக்கரதலங்கொடுதிரித்
திவர்தலுங்குருதிபட்டிசைதொறுந்திசைதொறும்
துவரணிந்தனவெனப்பொசிதுதைந்தனதணைப்
பவர்நெடும்பணைமதப்பகையின்வல்கரிகளே. (௧௧)

புயல்கடந்திரவிதன்புகல்கடந்தயலுளோர்
இயலுமண்டலமிகந்தெனையவுந்தவிரமேல்
வயிரவன்கரதலத்தவன்வலித்தெறியவன்
றுயிரும்விண்படரவிவ்வுடலுமிப்பரிசரோ. (௧௨)

முட்டிவான்முகடுசென்றளவியிம்முடைபுடற்
கட்டிமால்வரையைவந்துற்றதுங்கருணையான்
இட்டசாபமுமெனக்குதவுமிவ்வியல்பினிற்
பட்டவாமுழுவதும்பரிவினாலுரைசெய்தான். (௧௩)

(வேறு.)

கேட்டனனமலனுங்கிளந்தவாறெலாம்
வாட்டொழிலிளவலையிதனைமைந்தநீ
ஓட்டெனவவன்கழல்விரலினுந்தினான்
மீட்டதுவிரிஞ்சனாடுற்றுமீண்டதே. (௧௪)

ஆயிடையரிகுலமசனியஞ்சுற
வாய்திறந்தார்த்ததுவள்ளலோங்கிய
நாயநற்சோலையிலிருந்தசூழல்வாய்
நாயகவுணர்த்துவதுண்டுநானென்று- (௧௫)

துந்துபிப்படலமுற்றிற்று-ஆ படலம்-ரு-க்கு.

திருவிருத்தம்-உ௦உ.

## ௬-வது-கலன்காண்படலம்.

இவ்வழியாமியைந்திருந்ததோரிடை
வெவ்வழியிராவணன்கொணரமேலைநாள்
செவ்வழிநோக்கினின்றேவியேகொலாம்
கவ்வையினரற்றினள்கழிந்தசேணுளாள். (௧)

உழையரினுணர்ந்துவதுளதென்றுன்னியோ
குழைபொருகண்ணிஞள்குறித்ததோர்ந்திலம்
மழைபொருகண்ணிணைவாரியோடுந்தன்
இழைபொதிந்திட்டனள்யாங்களேற்றனம். (உ)

வைத்தனமிவ்வழியுள்ளனின்வயின்
உய்த்தனதந்தபோதுணர்தியாலெனுக்
கைத்தலத்தன்னவைகொணர்ந்துகாட்டினுன்
நெய்த்தலைப்பால்கலந்தனையநேயத்தான். (௩)

தெரிவுறநோக்கினன்றெரிவைமெய்யணி
எரிகனலெய்தியமெழுகின்யாக்கைபோல்
உருகினனென்கிலமுயிருக்கூற்றமாய்ப்
பருகினனென்கிலம்பகர்வதென்கொலாம். (சு)

நல்குவதென்னினிநங்கைகொங்கையைப்
புல்கியபூணுமக்கொங்கைபோன்றன
அல்குலினணிகளுமல்குலாயின
பல்கலன்பிறவுமப்படிவமானவே. (ரு)

விட்டபேருணர்வினைவிளித்தவென்கெனே
அட்டனவுயிரையவ்வணிகளென்கெனே
கொட்டினசாந்தெனக்குளிர்த்தவென்கெனே
சுட்டனவென்கெனேயாதுசொல்லுகேன். (சா)

மோந்திடநறுமலரானமொய்ம்பினில்
ஏந்திடவுத்தரீயத்தையேய்ந்தன
சாந்தமுமாயொளிதழுவப்போர்த்தலாற்
பூந்துகிலாயினபூவைபூண்களே. (எ)

ஈர்த்தனசெங்கணீர்வெள்ளமியாவையும்
போர்த்தனமயிர்ப்பெரும்புளகம்பொங்குதோள்
வேர்த்தனவென்கெனேவெதும்பினுனென்கோ
தீர்த்தனையவ்வழியாதுசெப்புகேன். (அ)

விடங்கலந்தனையதோர்வெம்மைமீக்கொள
நெடும்பொழுதுணர்வினேடுயிர்ப்புநீங்கிய
தடம்பெருங்கண்ணனைத்தாங்கினுன்றன
துடம்பினிற்செறிமயிர்சுறுக்கென்றேறவே. (கூ)

தாங்கினனிருத்தியத்துயரந்தாங்கலா
தேங்கியநெஞ்சினனிரங்கிவிம்முவான்

வீங்கியதோளினுய்வினையினேனுயிர்
வாங்கினனிவ்வணிவருவித்தேனெனூ. (௧0)

அயனுடையண்டத்தினப்புறத்தையும்
மயர்வறநாடியென்வலியுங்காட்டியுன்
உயர்புகழ்த்தேவியையுதவற்பாலனுன்
துயருழன்றயர்தியோசுருதிநூல்வலாய். (௧௧)

திருமகளனையவத்தெய்வக்கற்பினுள்
வெருவரச்செய்தளவெய்யவன்புயம்
இருபதுமீரைந்துதலையுமேவினுன்
ஒருகணைக்காற்றுமோவுலகமேழுமே. (௧௨)

ஈண்டுநீயிருந்தருளேழொடேழெனும்
பூண்டபேருலகங்கள்வலியிற்புக்கிடை
தேண்டியவ்வரக்கனைத்திருகித்தேவியைக்
காண்டியானிவ்வழிக்கொணர்வல்காவலோய். (௧௩)

ஏவல்செய்துணைவரோம்யாங்களீங்கிவன்
தாவரும்பெருவலித்தம்பிநம்பிநின்
சேவகமிதுவெனிற்சிறுகநோக்கலென்
மூவகையுலகுநின்மொழியின்முந்துமோ. (௧௪)

பெருமையோராயினும்பெருமைபேசிலார்
கருமமேயல்லதுபிறிதென்கண்டது
தருமநீயல்லதுதனித்துவேறுண்டோ
அருமையேதுனக்குநின்றவலங்கூர்தியோ. (௧௫)

முளரிமேல்வைகுவான்முருகற்றந்தவத்
தளிரியல்பாகத்தான்றடக்கையாழியான்
அளவியொன்றுவரோயன்றியையமில்
கிளவியர்தனித்தனிக்கிடைப்பரோதுணை. (௧௬)

என்னுடைச்சிறுகுறைமுடித்தலீண்டொரீஇப்
பின்னுடைத்தாயினுமாகட்பேதுறு
மின்னிடைச்சனகியைமீட்டுமீள்துமால்
பொன்னுடைச்சிலையினுய்விரைந்துபோயென்றான்.

எரிகதிர்க்காதலனினையகூறலும்
அருவியுங்கண்டிறந்தன்பினோக்கினன்
திருவுறைமார்பனுந்தெளிவுதோன்றிட
ஒருவகையுணர்வுவந்துரைப்பதாயினன். (௧௮)

விலங்கெழிற்றோளினாய்வினையினேனுடலிவ்
விலங்குவிற்கரத்தினானிருக்கவேயவள்
கலன்கழித்தனளிதுகற்புமேவிய
பொலன்குழைத்தெரிவையர்புரிந்துளோர்கள்யார் ( )

வாணெடுங்கண்ணியென்வரவுநோக்கயான்
நாணெடுங்கிரியொடுந்தடங்கடம்மொடும்
பூணொடும்புலம்பியிப்பொழுதுபோக்கினேன்
நாணெடுஞ்சிலைசுமந்துழலநாணிலேன். (௨௦)

ஆறுடன்செல்பவரஞ்சொன்மாதரை
வேறுளார்துயர்செயில்விலக்கிவெஞ்சமத்
தாறுறத்தம்முயிருகுப்பரென்பதும்
தேறினன்றுயரநான்றீர்க்கநோற்றிலேன். (௨௧)

கருங்கடறொட்டனர்கங்கைதந்தனர்
பொரும்புலிமானொடும்புனலூட்டினர்
பெருந்தகையென்குலத்தரசர்பின்னொரு
திருந்திழைதுயரநான்றீர்க்ககிற்றிலேன். (௨௨)

இந்திரற்குரியதோரிடுக்கண்டீர்த்திகல்
அந்தகற்கரியபோரவுணர்த்தேய்த்தனன்
எந்தைமற்றவனின்வந்துதித்தயானுமேளன்
வெந்துயர்க்கொடும்பழிபெறவிற்றாங்கினேன். (௨௩)

விரும்பெழிலெந்தையார்மெய்ம்மைவீயுமேல்
வரும்பழியென்றலான்மகுடஞ்சூடிலேன்
கரும்பழிசொல்லியைப்பகைஞன்கைக்கொளப்
பெரும்பழிசூடினேன்பிழைத்ததென்னரோ. (௨௪)

என்னநொந்தின்னனபன்னியீடழிந்
துன்னருந்துயரத்துச்சோர்கின்றான்றனைப்
பன்னருங்கதிரவன்புதல்வன்பையுள்பார்த்
தன்னவெந்துயரெனுமளக்கர்நீக்கினான். (௨௫)

ஐயநீயாற்றலினாறினேனல
துய்வனேயெனக்கினியுறுதிவேறுண்டோ
வையகத்திப்பழிதீரமாய்வது
செய்வனின்குறைமுடித்தன்றிச்செய்கலேன். (௨௬)

என்றனனிராகவனிளையகாலையில்
வன்றிறன்மாருதிவணங்கினானெடும்

குன்றிவர்தோளிஞய்கூறவேண்டுவ
தொன்றுளததனைநீயுணர்ந்துகேளெனு. (உஎ)

கொடுந்தொழில்வாலியைக்கொன்றுகோமகன்
கடுங்கதிரோன்மகனுக்கிக்கைவளர்
நெடும்படைகூட்டிஞலன்றிநேடரி
தடும்படையரக்கர்தமிருக்கையாணையாய். (உஅ)

வானதோமண்ணதோமாறுவெற்பதோ
ஏனைமாதாகர்தம்மிருக்கைப்பாலதோ
தேனுளதெரியலாய்தெரிவதன்றவர்
ஊர்நமக்குற்றுழியுறுதலுண்மையால். (உக)

எவ்வுலகங்களுமிமைப்பினெய்துவர்
வவ்வுவரவ்வழிமகிழ்ந்தயாவையும்
வெவ்வினைவந்தெனவருவர்மீள்வரால்
அவ்வவருறையிடமறியற்பாலதோ. (ஙo)

ஒருமுறையேபாரத்துலகம்யாவையும்
திருவுறைவேறிடந்தேரவேண்டுமால்
வரன்முறைநாடிடவரம்பின்றுவுல
கருமையுண்டளப்பருமாண்டுவேண்டுமால். (ஙக)

எழுபத்தாகியவெள்ளத்தெம்படை
ஊழியிற்கடலெனவுலகம்போர்க்குமால்
ஆழியைக்குடிப்பினுமயன்செய்யண்டத்தைக்
கீழ்மடுத்தெடுப்பினுங்கிடைத்தசெய்யுமால். (ஙஉ)

ஆதலாலன்னதேயமைவதாமென
நீதியாய்நினைந்தனனெனநிகழ்த்திஞன்
சாதுவாமென்றவத்தனுவின்செல்வனும்
போதுநாம்வாலிபாலென்னப்போயினர். (ஙங)

வேறு.

வெங்கணாளியேறுமீளிமாவும்வேகநாகமும்
சிங்கவேறிரண்டொடுந்திரண்டவன்னசெய்கையார்
தங்குசாலமூலமார்தமாலமேலமாலைபோல்
பொங்குநாகமுந்துவன்றுசாரலூடுபோயினர். (ஙச)

உழையுலாநெடுங்கண்மாதருசலூசலல்லவேல்
தழையுலாவுசந்தலர்ந்தசாரல்சாரலல்லவேல்

மழையுலாவுமூன்றிலல்லமன்றதூறுசண்பகக்
குழையுலாவுசோலைசோலையல்லபொன்செய்குன்றமே. (௩௫)

அறங்கறூறுமேனியாரரிக்கணங்களோடுமங்
கிறங்குபோதுமேறுபோதுமீறிலாதவோசையால்
கறங்குவார்கழற்கலன்கலிப்பமுந்துகண்முகிழ்த்
துறங்குமேகநன்குணர்ந்துமாகமீதுலாவுமே. (௩௬)

நீடுநாகமூடுமேகமோடநீருமோடநேர்
ஆடுநாகமோடமானயானையோடவாளிபோம்
மாடுநாகநீடுசாரல்வாளையோடுப்வாவிபூ
டோடுநாகமோடவேங்கையோடுப்பூகமோடவே. (௩௭)

மருண்டமாமலைத்தடங்கள்செல்லலாவதல்லமால்
தெருண்டமாமதத்தயானைசீறிநின்றுசிந்தலால்
இருண்டகாரகிற்றடத்தொடித்துலர்ந்தசந்துவந்
துருண்டபோதழிந்ததேனொழுக்குபேரொழுக்கரோ. (௩௮)

மினன்மணிக்குலந்துவன்றிவில்லலர்ந்துவிண்குலாய்
அனல்பரப்பலொப்பமீதிமைப்பவந்தவிப்பபோல்
புனல்பரப்பவெப்பிருந்தபொன்பரப்புமென்பரால்
இனையவிற்றடக்கைவீரரேகுகின்றகுன்றமே. (௩௯)

மருவியாடும்வாவிதோறும்வானயாறுபாயும்வந்
திருவியார்தடங்கண்மீனினேறுபாயுமாறுபோல்
அருவிபாயுமொன்றிறைன்றிறைனபாயுமேனவிற்
குருவிபாயுமோடிமந்திகோடுபாயுமாடெலாம். (௪0)

தேனிழுக்குசாரல்வாரிசெல்லமீதுசெல்லநாள்
மீனிழுக்குமன்றிவானவில்லிழுக்கும்வெண்மதிக்
கூனிழுக்குமற்றுலாவுகோளிழுக்குமென்பரால்
வானிழுக்குமேலவாயமன்றதூறுகுன்றமே. (௪௧

அன்னதாயகுன்றிறைசென்றவீரரைந்தொடைத்
துன்னலாயயோசனைக்குமுப்பரேறியிப்பரில்
பொன்னினூடிழிந்ததன்னவாலிவாழ்பொருப்பிடம்
துன்னினர்கள்செய்வதென்னையென்றுநின்றுசொல்லுவார். ()

௩-வது-கலன்காண்படலம்-முற்றிற்று

ஆ படலம்-௩-க்கு-திருவிருத்தம்-உ௪௪.

# எ-வது-வாலிவதைப்படலம்.

—※—

அவ்விடத்திராமனியமைத்துவாலியானதோர்
வெவ்விடத்தின்வந்தபோர்வினைக்குமேல்வைவேறுநின்
றெவ்விடத்துணிந்தமைந்ததென்கருத்திதென்றனன்
தெவ்வடக்கும்வென்றியானுநன்றிதென்றுசிந்தியா. (க)

வார்த்தையன்னதாகவானியங்குதேரினான்மகன்
நீர்த்தரங்கவேலையஞ்சநீலமேகநாணதேர்
வேர்த்துமன்னுளோரிரிந்துவின்னுளோர்கள்விம்மமேல்
ஆர்த்தவோசையீசனுண்டவண்டமுற்றுமுண்டதே. (உ)

இடித்துரப்பிவந்துபோரொதிர்த்தியேலடர்ப்பனென்
றடித்தலங்கள்கொட்டிவாய்மடித்தடுத்தலங்கரேள்
புடைத்துநின்றுளைத்தபூசல்புக்கதென்பமிக்கிடந்
துடிப்பவங்குறங்குவாலிதின்செவித்துளைக்கணே. (௩)

(வேறு.)

மாற்பெருங்கடகரிமுழக்கம்வாளரி
எற்பதுசெவித்தலத்தென்னவோங்கிய
ஆர்ப்பொலிகேட்டனனமளிமேலொரு
பாற்கடல்கிடந்ததேயனையபான்மையான். (௪)

உருத்தனன்பொரவெதிர்த்திளவலுற்றமை
வரைத்தடந்தோளினான்மனத்தினெண்ணினான்
சிரித்தனனவ்வொலிதிசையினப்புறத்
திரித்ததவ்வுலகமோரோழொடேழையே. (௫)

எழுந்தனன்வல்விரைந்திறுதியூழியிற்
கொழுந்திரைக்கடல்கிளர்ந்தனையகொள்கையான்
அழுந்தியதக்கிரியருகின்மால்வரை
விழுந்தனதோள்புடைவிசித்தகாற்றினே. (௬)

போய்ப்பொடித்தன்மயிர்புறத்தவெப்பொறி
காய்ப்பொடுற்றெழுவடகனலுங்கண்கெடத்
தீப்பொடித்தனவிழிதேவர்நாட்டினும்
மீப்பொடித்தனபுகையுயிர்ப்புவீங்கவே. (௭)

கைக்கொடுகைத்தலப்புடைப்பக்காவலின்
திக்கயங்களுமதச்செருக்குச்சிந்தின
உக்கனவுருமினமுலைந்தவும்பரும்
நெக்கெனநெரிந்தனநின்றகுன்றமே. (அ)

வந்தனன்வந்தனனென்றவாசகம்
இந்திரன்முதற்றிசையெட்டுங்கேட்டன

சந்திரன்முதலியதாரகைக்குழாம்
சிந்தினமணிமுடிசிகரந்தீண்டவே. (௯)

வீசினகாற்றின்வேர்பறிந்தவெற்பினம்
ஆசையையுற்றனவண்டப்பித்திகை
பூசினவெண்மயிர்பொடித்தவெம்பொறி
கூசினநந்தகன்குலைந்ததும்பரோ. (௧௦)

கடித்தவாயெயிறுருகனலக்கார்விசும்
பிடித்தவாயுருமுகுமினத்திற்சிந்தின
தடித்துவீழ்வனவெனத்தகர்ந்துசிந்தின
வடித்தமேதோள்வலையத்தின்வயங்குகாசெலாம். (௧௧)

ஞாலமுநாற்றிசைப்புனலுநாகரும்
மூலமுமுற்றிடமுடிவிற்றீக்குமக்
காலமுமொத்தனன்கடலிற்றன்கடை
ஆலமுமொத்தனனெவருமஞ்சவே. (௧௨)

ஆயிடைத்தாரையென்றமுதிற்றோன்றிய
வேயிடைத்தோளினளிடைவிலக்கினள்
வாயிடைப்புகையழவாலிகண்வரும்
தீயிடைத்தன்னெடுங்கூந்தறீகின்றாள். (௧௩)

விலக்கலைவிடுவிடுவிளித்துளானுரம்
கலக்கியக்கடல்கடைந்தமுதுகண்டெண
உலக்கவுற்றுயிர்குடித்தொல்லைமீள்குவன்
மலைக்குலமயிலெனமடந்தைகூறுவாள். (௧௪)

கொற்றவநின்பெருங்குவவுத்தோள்வலிக்
கிற்றயதல்லநாளிடுண்டேகுவான்
பெற்றிலன்பிறந்திலன்பெயர்த்துப்போர்செயற்
குற்றதுநெடுந்துணையுடைமையாலென்றாள். (௧௫)

மூன்றெனமுற்றியமுடிவில்பேருல
கேன்றுடனுற்றெனவெனக்குநேரெனத்
தோன்றினதோற்றவைதொலையுமென்றலில்
சான்றுளவன்னவைதையல்கேட்டியால். (௧௬)

மந்தரநெடுவரைமத்துவாசுகி
அந்தமில்கடைகயிறடைகலாழியான்
சந்திரன்றூணெதிர்தருக்கின்வாங்குவார்
இந்திரன்முதலியவமரர்மேலையோர். (௧௭)

பெயர்வுறவலிக்கவுமிடுக்கில்பெற்றியார்
அயர்வுறலுற்றதைநோக்கியானது
தயிரொனக்கடைந்தவர்க்கமுதந்தந்தவும்
மயிலியற்குயின்மொழிமறக்கலாவதோ. (௧௮)

ஆற்றலினமராருமவுணரியாவரும்
தோற்றனரொனையவர்சொல்லற்பாலரோ
கூற்றமென்பெயர்சொலக்குலையுமாரினி
மாற்றவற்காகிவந்தெதிருமாண்பினர். (௧௯)

பேதையரொதிர்குவரொனினும்பெற்றுடை
ஊதியவரங்களுமுரமுமுள்ளதில்
பாதியுமென்னதாற்பகைப்பதெங்ஙனம்
நீதுயரொழிகெனநின்றுகூறினான். (௨0)

அன்னதுகேட்டவளரசவாயவற்
கின்னுயிர்நட்பமைந்திராமனென்பவன்
உன்னுயிர்கோடலுக்குடன்வந்தானெனத்
துன்னியவன்பினர்சொல்லினாரென்றாள். (௨௧)

உழைத்தவல்லிருவினைக்கூறுகாண்கிலா
தழைத்தயருலகினுக்கறத்தினாறெலாம்
இழைத்தவற்கியல்பலவியம்பியென்செய்தாய்
பிழைத்தனைபாவியுன்பெண்மையாலென்றான். (௨௨)

இருமையுநோக்குறுமியல்பினாற்கிது
பெருமையோவிங்கிநிற்பெறுவதென்கொலோ
அருமையினின்றுயிரளிக்குமாறுடைத்
தருமமேதவிர்க்குமோதன்னைத்தானரோ. (௨௩)

எற்றபேருலகெலாமெய்தியீன்றவள்
மாற்றவளேவமற்றவடன்மைந்தனுக்
காற்றருமுவகையாலளித்தவையனைப்
போற்றலையின்னனபுகறற்பாலையோ. (௨௪)

நின்றபேருலகெலாநெருக்கிநேரினும்
வென்றிவெஞ்சிலையலாற்பிறிதுவேண்டுமோ
தன்றுணையொருத்தனுந்தன்னில்வேறிலான்
புன்றொழிற்குரங்கொடுபுணருநட்பனோ. (௨௫)

தம்பியரல்லதுதனக்குவேறுயிர்
இப்பரினிலதெனவெண்ணியேய்ந்தவன்

எம்பியும்யானுமுற்றெதிர்ந்தபோரிடை
அம்பிடைதொடுக்குமோவருளினாழியான். (௨௬)

இருத்திநீயிறையிவணிமைப்பில்காலையில்
உருத்தவனுயிர்குடித்துடன்வந்தாளையும்
கருத்தழித்தெய்துவன்கலங்கலென்றனன்
விரைக்குழல்பின்னானைவிளம்பவஞ்சினாள். (௨௭)

வேறு.

ஒல்லைச்செருவேட்டுயர்வல்புயவோங்கலும்பர்
எல்லைக்குமப்பாலிவர்கின்றவிரண்டினோடும்
மல்லற்கிரியின்றலைவந்தனன்வாலிகீழ்பால்
தொல்லைக்கிரியின்றலைதோற்றியஞாயிறென்ன. (௨௮)

நின்றானெதிர்யாவருநெஞ்சுநடுங்கியஞ்சத்
தன்றோள்வலியாற்றலகமால்வரைசாலும்வாலி
குன்றூடுவந்துற்றனன்கோளவுணன்குறித்த
வன்றூணிடைத்தோன்றியமாநரசிங்கமென்ன. (௨௯)

ஆர்க்கின்றபின்னோன்றனைநோக்கினன்றானுமார்த்தான்
வேர்க்கின்றவானத்துருமேறுவெறித்துவீழப்
போர்க்கின்றதெல்லாவுலகும்பொதிர்வுற்றபூசல்
கார்க்குன்றமன்னானிலந்தாவியகாலினென்ன. (௩0)

அவ்வேலையிராமனுமன்புடைத்தம்பிக்கைய
செவ்வேசெலநோக்குதிதானவர்தேவர்நிற்க
எவ்வேலையெம்மேகமெக்காலொடெக்காலவெந்தீ
வெவ்வேறுலகத்திவர்மேனியைமானுமென்றான். (௩௧)

வள்ளற்கிவையான்பகர்வானிவன்றன்முன்வாணாள்
கொள்ளக்கொடுங்கூற்றுவனைக்கொணர்ந்தான்குரங்கின்
எள்ளற்கரும்போரஃதிசைக்கலென்னென்னுமின்னல்
உள்ளத்தினான்றவுணர்வுற்றிலனென்றுமென்றான். (௩௨)

ஆற்றாதுபின்னும்பகர்வானறத்தாறழுங்கத்
தேற்றாதுசெய்வார்களைத்தேற்றுதல்செவ்விதன்றால்
மாற்றானெனத்தம்முனைக்கொல்லியவந்துநின்றான்
வேற்றார்கடிறத்திவன்றஞ்சமென்வீரவென்றான். (௩௩)

அத்தாவிதுகேளெனவாரியன்கூறுவானிப்
பித்தாயவிலங்கினொழுக்கினைப்பேசலாமோ
எத்தாயர்வயிற்றினும்பின்பிறந்தார்களெல்லாம்
ஒத்தாற்பரதன்பெரிதுத்தமனாவதுண்டோ. (௩௪)

விற்ருங்குவெற்பன்னவிலங்கெழிற்ருேளமெய்ம்மை
உற்ருர்சிலரல்லவரோபலரொன்பதுண்மை
பெற்ருருழைப்பெற்றபயன்பெறும்பெற்றியல்லால்
அற்ருர்நவையென்றலுக்காகுனரார்கொலென்ருன். (௩௫)

வீரத்திறலோரினவயின்னவிளம்பும்வேலை
தேரிற்றிரிவான்மகனிந்திரன்செம்மலென்றிப்
பாரிற்றிரியும்பனிமால்வரையன்னபண்பார்
மூரித்திசையானையிரண்டெனமுட்டினரோ. (௩௬)

குன்ருேடுகுன்ருெத்தனர்கோளரிக்கொற்றவல்லே
ருென்ருேடுசென்ருென்றெதிருற்றனவேயுமொத்தார்
நின்ருர்திரிந்தார்நெடுஞ்சாரிநிலந்திரித்த
வன்ருேட்குயவன்றிண்மட்கலத்தாழியென்ன. (௩௭)

தோளோடுதோடேய்த்தலிற்ருென்னிலந்தாங்கலாற்ருத்
தாளோடுதாடேய்த்தலிற்றந்ததழற்பிறங்கல்
வாளோடுமின்ருேடுவபோனெடுவானிருேடும்
கோளோடுகோளுற்றனவொத்தடர்ந்தார்கொதித்தார். (௩௮)

தந்தோள்வலிமிக்கவர்தம்மொருதாய்வயிற்றின்
வந்தோர்மடமங்கைபொருட்டுமலேக்கலுற்ருர்
சிந்தோடரியொண்கட்டிலோத்தமைகாதல்செற்ற
சுந்தோபசுந்தப்பெயர்த்தொல்லையிருேருமொத்தார். (௩௯)

கடலொன்றிெனுடொன்றுமலேக்கவுங்காவன்மேருத்
திடரொன்றிெனுடொன்றமர்செய்யவுஞ்சீற்றமென்ப
துடல்கொண்டிரண்டாகியுடற்றவுங்கண்டிலேநேர்
மிடலிங்கவர்வெந்தொழிற்கொப்புரைவேறுகாணுய். (௪௦)

ஊகங்களினயகர்வெங்கணுமிழ்ந்ததீயால்
மேகங்களெரிந்தனவெற்புமெரிந்தகிக்கின்
நாகங்கணடுங்கினநானிலமுங்குலேந்த
மாகங்களேநண்ணியவிண்ணவர்போய்மறைந்தார். (௪௧)

விண்மேலினரோநெடுவெற்பின்முகட்டினரோ
மண்மேலினரோபுரமாதிரவீதியாரோ
கண்மேலினரோவெனயாவருங்காணநின்ருர்
புண்மேலிரத்தம்பொடிப்பக்கடிப்பார்புடைப்பார். (௪௨)

எழொத்துடனுந்திசையெட்டொடிரண்டுமுட்டும்
ஆழிக்கிளரார்கலிக்கைம்மடங்கார்ப்பினேசைப்

பாழித்தடந்தோளினுமார்பினுங்கைகள்பாய
ஊழிக்கிளர்காரிடியொத்ததுருத்துமோதை. (௪௩)

வெவ்வாயெயிற்றுன்மிடல்வீரர்கடிப்பமீச்சென்
றவ்வாயெழுசோரியதாசைகடோறும்வீச
எவ்வாயுமெழுந்தகொழுஞ்சுடர்மீன்களியாவும்
செவ்வாயையிகர்த்தனசெக்கரையொத்தமேகம். (௪௪)

வேறு.

வெந்தவல்லிரும்பிடைநெடுங்கூடங்கள்வீழ்ப்பச்
சிந்தியெங்கணுஞ்சிதறுவபோற்பொறிதெறிப்ப
இந்திரன்மகன்புயங்களுமிரவிசேயனும்
சந்தவன்னெடுந்தடக்கைகடாக்கவிற்றகர்வ. (௪௫)

உரத்தினூன்மடுத்துத்துவர்பாதமிட்டுதைப்பர்
கரத்தினால்விசைத்தெற்றுவர்கடிப்பர்நின்றிடிப்பர்
மரத்தினாலடித்தார்ப்புவர்பொருப்பினம்வாங்கிச்
சிரத்தின்மேலெறிந்துறக்குவர்தெழிப்பர்தீவிழிப்பர். (௪௬)

எடுப்பர்பற்றியுற்றொருவரையொருவர்விட்டெறிவர்
கொடிப்பர்வந்தூங்குத்துவர்கைத்தலங்குளிப்பக்
கடுப்பினிற்பெருங்கறங்கெனச்சாரியையிறங்கத்
தடிப்பர்பின்றுவரொன்றுவர்தழுவுவர்விழுவர். (௪௭)

வாலினுலுரம்வரிந்தனர்நெருந்துகவலிப்பர்
காலினுனெடுங்கால்பிடித்துடற்றுவர்கழல்வர்
வேலினுலறவெறிந்தெனவிறல்வலியுகிரால்
தோலினுடுடனேவாமுழையெனத்துளைப்பர். (௪௮)

மண்ணகத்தனமலைகளுமரங்களுமற்றுங்
கண்ணகத்தினிற்றோன்றியயாவையுங்கையால்
எண்ணகப்பறித்தெறிதலினெற்றலினிற்ற
விண்ணகத்தினைமறைத்தனமறிகடல்வீழ்ந்த. (௪௯)

வெருவிச்சாய்ந்தனர்விண்ணவர்வேறென்னைவிளம்பின்
ஒருவர்க்காண்டமரொருவருந்தோற்றிலருடன்று
செருவிற்றுய்த்தலிற்செங்கனல்வெண்மயிர்ச்செல்ல
முரியுற்கானிடையெரிபரந்தனவெனமுனைவர். (௫௰)

அன்னதன்மையராற்றலினமர்புரிபொழுதின்
வன்னெடுந்தடந்திரள்புயத்தடுதிறல்வாலி
சொன்னதம்பியைத்தும்பியையரிதொலைத்தென்ன
கொன்னகங்களிற்கரங்களிற்குலைந்துகலைந்தான். (௫௧)

மலைந்தபோதிளைத்திரவிசேயையயல்மாடணுகி
உலைந்தசிந்தையோடணங்கினன்வணங்கிடவுள்ளம்
குலைந்திடேலுமைவேற்றுமைதெரிந்திலங்கொடிப்பூ
மிலைந்துசெல்கெனவிடுத்தனனெதிர்த்தனன்மீட்டும். (௫௨

தயங்குதாரகைநிரைதொடுத்தணிந்தெனவெண்பூ
வயங்குசென்னியன்வயப்புலியேறனான்வரைகள்
உயங்குமார்ப்பினனெல்லைவந்தடுதிறல்வாலி
பயங்கொளப்புடைத்தெற்றினன்குத்தினனபலகால். (௫௩

அயிர்த்தசிந்தையனந்தகன்குலைகுலைந்தஞ்சச்
செயிர்த்துநோக்கினன்சினத்தொடுசிறுநகைசெய்யா
வயிர்த்தகையினுங்காலினுங்கதிர்மகன்மயங்க
உயிர்த்தலந்தொறும்புடைத்தனனடித்தனனுதைத்தான். (௫௪

கக்கினானுயிருயிர்ப்பொடுஞ்செவிகளிற்கண்ணில்
உக்கதாங்கெரிப்படலையோடுதிரத்தினொழுக்கம்
திக்குநோக்கினன்செங்கதிரோன்மகன்செருக்கிப்
புக்குமீக்கொடுநெருக்கினனிந்திரன்புதல்வன். (௫௫

எடுத்துப்பாரிடையெற்றுவென்பற்றியென்றிளவல்
கடித்தலத்தினுங்கழுத்தினுந்தன்னிருகரங்கள்
மடுத்துமீக்கொண்டவாலிமேற்கோலொன்றுவாங்கித்
தொடுத்துநாணொடுதோளிறுத்திராகவன்றுரந்தான். (௫௬)

காரண்வார்சுவைக்கதலியின்கனியினைக்கழியச்
சேருமூசியிற்சென்றதுநின்றதென்செப்பின்
நீருநீர்தருநெருப்புவன்காற்றுங்கீழ்நிரந்த
பாருஞ்சார்வலிபடைத்தவனுரத்தையப்பகழி. (௫௭)

அலங்குதோள்வலியழிந்தனன்றம்பியையடர்ந்து
வலங்கொள்பாரிடையெற்றுவானுற்றபோர்வாலி
கலங்கியவ்விசைக்கால்கிளர்ந்தெறிவுறக்கடைக்கால்
விலங்கன்மேருவும்வேர்பறிந்தாமெனவீழ்ந்தான். (௫௮)

சையம்வேரொடுமுருமுறச்சாய்ந்தெனச்சாய்ந்தான்
வையமீதிடைக்கிடந்தபோரடுதிறல்வாலி
வெய்யவன்றருமதலையைமிடல்கொடுகவரும்
கைநெகிழ்ந்தனனெகிழ்ந்திலன்கடுங்கணைகவர்தல். (௫௯)

வெற்றிவீரனதடுகணையவன்மிடலுரத்தூ
டுற்றதப்புறத்துருதழுனுறுவலிக்காத்தாற்

பற்றிவாலினுங்காலினும்பிணித்தகப்படுத்தான்
கொற்றவெங்கொடுமறலியுஞ்சிரந்தனைக்குனித்தான். (௬௰)

எழுந்துவான்முகடிடித்துகப்படுப்பனென்றிவரும்
உழுந்துபேருமுன்றிசைதிரிந்தொருப்பனென்றுறுக்கும்
எழுந்துபாரினைவேரொடும்பறிப்பனென்றேரும்
அழுந்துமிச்சரமெய்தவனார்கொலென்றயிர்க்கும். (௬௧)

எற்றுங்கையினைநிலத்தொடுமெரிப்பொறிபறக்கச்
சுற்றுநோக்குறுஞ்சுடுசரத்தைத்துணைக்கரத்தாற்
பற்றிவாலினுங்காலினும்வலியுறப்பறிப்பான்
உற்றுருமையினுலைவுறுமலையெனவுருளும். (௬௨)

தேவரோவெனவயிர்க்குமத்தேவரிச்செயலுக்
காவரோவவர்க்காற்றலுண்டோவெனுமயலோர்
யாவரோவெனநகைசெயுமொருவனேயிறைவர்
மூவரோடுமொப்பான்செயலாமெனமொழியும். (௬௩)

நேமிதான்கொலோநீலகண்டன்னெடுஞ்சூலம்
ஆமிதாங்கொலோவறுமுகனயில்கொலோவன்றேல்
நாமவிந்திரன்வச்சிரப்படையுமென்னடுவட்
போமெனுந்துணைபோதுமோயாதெனப்புழுங்கும். (௬௪)

வில்லினாற்றுரப்பரிதிவெஞ்சரமெனவியக்குஞ்
சொல்லினானெடுமுனிவரோதூண்டினானொன்னும்
பல்லினாற்கடிப்புறும்பலகாலுந்தன்னுரத்தைக்
கல்லியார்ப்பொடும்பறிக்குமப்பகழியைக்கண்டான். (௬௫)

சரமெனும்படிதெரிந்ததுபலபடச்சலித்தென்
உரமெனும்பதமுயிரொடுமுருவியவொன்னறக்
கரமிரண்டினும்வாலினுங்காலினுங்கழற்றிப்
பரமனன்னவன்பெயரறிவேனெனப்பறிப்பான். (௬௬)

ஓங்கரும்பெருந்திறலுடைமனத்தினனுரவோன்
வாங்கினான்மற்றவ்வாளியையாளிபோல்வாலி
ஆங்குநோக்கினரமரருமவுணரும்பிறரும்
வீங்கினார்கடோள்வீரனையார்வியவாதார். (௬௭)

மோடுதென்றிரைமுரிதருகடலெனமுழங்கி
ஈடுபேருலகிறந்துளதாமெனற்கெளிதோ
காடுமாநெடுவிலங்கல்கள்கடந்ததக்கடலின்
ஊடுபோதலுற்றதனைபொத்துயர்ந்துளதுதிரம். (௬௮)

வாசத்தாரவன்மார்பெனுமலைவழங்கருவி
ஓசைச்சோரியைநோக்கினனுடன்பிறப்பென்னும்
பாசத்தாற்பிணிப்புண்டவத்தம்பியும்பசுங்கண்
நேசத்தாரைகள்சொரிதரநெடுநிலஞ்சேர்ந்தான். (௬௯)

பறித்தவாளியைப்பருவலித்தடக்கையாற்பற்றி
இறுப்பனென்றுகொண்டெழுந்தனன்மேருவையிறுப்போன்
முறிப்பனென்னினுமுறிவதன்றாமெனமொழியாப்
பொறித்தநாமத்தையறிகுவானோக்கினன்புகழோன். (௭௦)

வேறு.

மும்மைசாலுலகுக்கெல்லாமூலமந்திரத்தைமுற்றும்
தம்மையேதமர்க்குநல்குந்தனிப்பெரும்பதத்தைத்தானே
இம்மையேயெழுமைநோய்க்குமருந்தினையிராமனென்னும்
செம்மைசேர்நாமந்தன்னைக்கண்களிற்றெரியக்கண்டான். (௭௧)

இல்லறந்துறந்தநம்பியெங்களுக்காகத்தங்கள்
வில்லறந்துறந்தவீரன்றோன்றலால்வேதநூலின்
சொல்லறந்துறந்திலாதசூரியன்மரபுந்தொல்லை
நல்லறந்துறந்ததென்னாநகைவரநாணுட்கொண்டான். (௭௨)

வெள்கிடமகுடஞ்சாய்க்கும்வெடிபடச்சிரிக்குமீட்டும்
உள்கிடுமிதுவுந்தானோரோங்கறமோவென்றுன்னும்
முள்கிடுங்குழியிற்புக்கமூரிவெங்களிறல்லியானை
தோள்கொடுங்கிடந்ததென்னத்துயருழன்றழிந்துசோர்வான்.()

இறைதிறம்பினனாலென்னேயிழிந்துளோரியற்கையென்ன
முறைதிறம்பினனாலென்றுமொழிகின்றமுகத்தான்முன்னர்
மறைதிறம்பாதவாய்மைமன்னர்க்குமுன்னஞ்சொல்லும்
துறைதிறம்பாமற்காக்கத்தோன்றினான்வந்துதோன்ற. (௭௪)

கண்ணுற்றான்வாலிநீலக்கார்முகில்கமலம்பூத்து
மண்ணுற்றுவரிவிலேந்திவருவதேபோலுமாலைப்
புண்ணுற்றதனையசோரிப்பொறியொடும்பொடிப்பநோக்கி,
எண்ணுற்றாயென்செய்தாயென்றேசுவானியம்பலுற்றான் (௭௫)

வாய்மையுமரபுங்காத்துமன்னுயிர்துறந்தவள்ளற்
றூயவன்மைந்தனேநீபரதன்முன்றோன்றினாயே
தீமைதான்பிறரைக்காத்துத்தான்செய்தாற்றீங்கன்றாமோ
தாய்மையுமன்றிநட்புந்தருமமுந்தழுவிநின்றாய். (௭௬)

குலமிதுகல்வியீதுகொற்றமீதுற்றுநின்ற
நலமிதுபுவனமூன்றுநாயகமுன்னதன்றே

வலியதிவ்வுலகந்தாங்கும்வன்மைமீதென்னேநின்மை
அலமரச்செய்யலாமோவறிந்திருந்தயர்ந்துளார்போல். (௭௭)

கோவியற்றருமமுங்கள்குலத்துதித்தோர்கட்கெல்லாம்
ஓவியத்தெழுதவொண்ணாவுருவத்தாயுடைமையன்றோ
ஆவியைச்சனகன்பெற்றவன்னத்தையமிழ்தின்வந்த
தேவியைப்பிரிந்தபின்புதிகைத்தனைபோலுஞ்செய்கை. (௭௮)

அரக்கரோரழிவுசெய்துகழிவரேலதற்குவேறோர்
குரக்கினத்தரசைக்கொல்லமனுநெறிகூறிற்றுண்டோ
இரக்கமெங்குகுத்தாயென்பாலெப்பிழைகண்டாயப்பா
பரக்கழியிதுநீபூண்டாற்புகழையார்பரிக்கற்பாலார். (௭௯)

ஒலிகடலுலகந்தன்னினூர்தருகுரங்கின்மாடே
கலியதுகாலம்வந்துபரந்ததோகருணைவள்ளல்
மெலியவர்பாலதேயோவொழுக்கமும்விழுப்பந்தானும்
வலியவரழிவுசெய்தாற்புகழன்றிவசையுமுண்டோ. (௮௦)

கூட்டொருவரையும்வேண்டாக்கொற்றவபெற்றதாதை
பூட்டியசெல்வமாங்கேதம்பிக்குக்கொடுத்துப்போந்து
நாட்டொருகருமஞ்செய்தாயெம்பிக்கிவ்வரசைநல்கிக்
காட்டொருகருமஞ்செய்தாய்கருமந்தானிதன்மேலுண்டோ.()

அறைகழலலங்கல்வீரராயவர்புரிவதாண்மைத்
துறையெனலாயிற்றன்றேதொன்மையினன்னூற்கெல்லாம்
இறைவநீயென்னைச்செய்ததீதெனிலிலங்கைவேந்தன்
முறையலசெய்தானென்றுமுனிதியோமுனிவிலாதாய். (௮௨)

இருவர்போரெதிருங்காலையிருவருநல்லுற்றாரோ
ஒருவர்மேற்கருணைதூண்டியொருவர்மேலொளித்துநின்று
வரிசிலைகுழையவாங்கிவாயம்புமருமத்தெய்தல்
தருமமோபிறிதொன்றாமோதருகிலதென்னும்பக்கம். (௮௩)

வேறு.

வீரமன்றுவிதியன்றுமெய்ம்மையின்
வாரமன்றுநின்மண்ணினுக்கென்னுடல்
பாரமன்றுபகையன்றுபண்பொழிந்
தீரமன்றிதுவென்செய்தவாறுநீ. (௮௪)

இருமைநோக்கிநின்றியாவர்க்குமொக்கின்ற
அருமையாற்றலன்றோவறங்காக்கின்ற
பெருமையென்பதிதென்பிழைநோக்கல்விட்
டொருமைநீக்கியொருவற்குதவலே. (௮௫)

செயலைச்செற்றபகைதெறுவான்றெரிந்
தயலைப்பற்றித்துணையமைந்தாயெனில்
புயலைப்பற்றுமப்பொங்கரிபோக்கியோர்
முயலைப்பற்றுவதென்னமுயற்சியோ. (அரு)

காரியன்றகளங்கநிறத்தொன்மை
ஊரியன்றமதிக்குளதாமென்ப
சூரியன்மரபுக்குமோர்தொன்மறு
ஆரியன்பிறந்தாக்கினையாமரோ. (அஎ)

மற்றொருத்தன்வலிந்தறைகூறவந்
துற்றவென்னையொளித்துயிருண்டநீ
இற்றையிற்பிறர்க்கும்மிகலேறென
நிற்றிபோலுங்கிடந்தநிலத்தரோ. (அஅ)

தூலியற்கையுநுங்குலத்துந்தையர்
போலியற்கையுஞ்சீலமும்போற்றலை
வாலியைப்படுத்தாயலைமன்னற
வேலியைப்பிரித்தாய்விறல்வீரனே. (அகூ)

தாரமற்றொருவன்கொளத்தன்கையில்
பாரவெஞ்சிலைவீரப்பரிப்பதென்
நேருமன்றுமறைந்துநிராயுதன்
மார்பினெய்யவோவில்லிகல்வல்லதே. (கூ0)

என்றுதானுமெயிறுபொடிபடத்
தின்றுகாந்திவிழிவழித்தீயுக
அன்றவாலியனையனகூறினன்
நின்றவீரனினையநிகழ்த்தினன். (கூக)

பிலப்புக்காய்நெடுநாள்பெயராயெனப்
புலம்புற்றுன்வழிபோதலுற்றான்றனைக்
குலப்புக்கான்றமுதியர்குறிக்கொணீ
அலப்பொற்றாரவனேயரசென்றலும். (கூஉ)

வானமாளவென்றம்முனைவைத்தவன்
தானுமாளக்கிளையினிறத்தடிந்
தியானுமாள்வனிருந்தரசாள்கிலேன்
ஊனமானவுணாபகர்ந்தீனெ. (கூரு)

பற்றியான்றபடைத்தலைவீரரு
முற்றுணர்ந்தமுதியருமுன்பரும்

எற்றுநும்மரசெய்துவையாமெனக்
கொற்றநன்முடிகொண்டதக்கோதிலான். (கூச)

வற்றவுன்னைவணங்கிமகிழ்ந்தனன்
எற்றையென்கண்ணினைத்தவராற்றலில்
நற்றவன்னரசென்றுதருக்கிலான்
முற்றையுற்றதுசொற்றமுனிந்துநீ. (கூரு)

கொல்லலுற்றனையும்பியைக்கோதவற்
றில்லையென்பதுணர்ந்துமிரங்கலை
அல்லல்செய்யலுனக்கபயம்பிழை
புல்லலென்னவும்புல்லலைபொங்கினாய். (கூசா)

ஊற்றமுற்றுடையானுனக்காரமர்
தோற்றேனென்றுதொழுதுயர்கையனைக்
கூற்றமுண்ணக்கொடுப்பனென்றெண்ணினாய்
நாற்றிசைக்கும்புறத்தையுநண்ணினான். (கூஎ)

அன்னதன்மையறிந்துமருளலை
பின்னவனிவனென்பதும்பேணலை
வன்னிதானிடுசாபவரம்புடைப்
பொன்மலைக்கவனண்ணலிற்போகலை. (கூஅ)

ஈரமாவதுமிற்பிறப்பாவதும்
வீரமாவதுங்கல்வியின்மெய்ந்நெறி
வாரமாவதுமற்றொருவன்புணர்
தாரமாவதைத்தாங்குந்தருக்கதோ. (கூகூ)

மறந்திறம்பல்வலியமெனமனம்
புறந்திறம்பலெளியவர்ப்பொங்குதல்
அறந்திறம்பலருங்கடிமங்கையர்
திறந்திறம்பறெளிவுடையோர்க்கெலாம். (க00)

தருமமின்னதெனுந்தகைத்தன்மையும்
இருமையுந்தெரிந்தெண்ணலையெண்ணிநல்
அருமையும்பிதன்னாருயிர்த்தேவியைப்
பெருமைநீங்கினையெய்தப்பெறுதியோ. (க0க)

ஆதலாலுமவனெனக்காருயிர்க்
காதலானெனலாலுநிற்கட்டனன்
ஏதிலாருமெளியரென்றாலுயும்
தீதுதீர்ப்பதென்சிந்தைக்கருத்தரோ. (க0உ)

பிழைத்ததன்மையி துவெனப்பேரெழில்
தழைத்தவீர னுரைசெயத்தக்கிலா
திழைத்தவாலியியல்பெனக்கித் துணை
விழைத்திறத்தொழிலென்னவிளம்புவான். (கoரு)

ஐய நுங்களருங்குலக்கற்பினப்
பொய்யின்மங்கையர்க்கேய்ந்தபுணர்ச்சிபோல்
செய்திலன்னெமைத்தேமலர்மேலவன்
எய்தினெய்தியதாகவியற்றினன். (கoசு)

மணமுமில்லைமறைநெறிவந்தன
குணமுமில்லைக்குலமுதற்கொத்தன
உணர்வுசென்றுழிச்செல்லுமொழுக்கலால்
நிணமுநெய்யுமிணங்கியநேமியாய். (கoஎ)

பெற்றிமற்றிதுபெற்றதொர்பெற்றியிற்
குற்றமுற்றிலனீய துகோடியால்
வெற்றியுற்றதொர்வெற்றியினையெனச்
சொற்றசொற்றனையுற்ற துசொல்லுவான். (கoஅ)

நலங்கொடேவரிற்றோன்றிநவையறக்
கலங்கலாவறநன்னெறிகாண்டலின்
விலங்கலாமைவிளங்கியதாதலால்
அலங்கலார்க்கீதடுப்பதன்றாமரோ. (கoஎ)

பொறியின்யாக்கையதோபுலனாகிய
அறிவின்மேலதன்றோவறத்தாறுதான்
நெறியுநோன்மையுநேர்நின்றுணர்ந்ததீ
பெறுதியோபிழையுற்றுறுபெற்றிதான். (கoஅ)

மாடுபற்றியிடங்கர்வலித்திடக்
கோடுபற்றியகொற்றவற்கூயதோர்
பாடுபெற்றவுணர்வின்பயத்தினால்
வீடுபெற்றவிலங்கும்விலங்கதோ. (கoகூ)

சிந்தைநல்லறத்தின்வழிச்சேர்த்தலால்
பைந்தொடித்திருவின்பரிவாற்றுவான்
வெந்தொழிற்றிறல்வீடுபெற்றெய்திய
எந்தையும்மெருவைக்கரசல்லனோ. (ககo)

நன்றுதீதென்றியநெறிநல்லறி
வின்றிவாழ்வதன்றோவிலங்கின்னியல்

நின்றநன்னெறிநியதியாநெறி
ஒன்றுமின்மையுன்வாய்மைபுணர்த்துமால். (௧௧௧)

தக்கவின்னதகாதனவின்னவென்
றொக்கவுன்னலராயினுயர்ந்துள
மக்களும்விலங்கேமனுவின்னெறி
புக்கவேலவ்விலங்கும்புத்தேளிரே. (௧௧௨)

காலனூற்றல்கடிந்தகணிச்சியான்
யாலினூற்றியபத்தியயத்தலால்
மாலினூற்றருவன்பெரும்பூதங்கள்
நாலினூற்றலுமாற்றலநண்ணினாய். (௧௧௩)

மேவருந்தருமத்துறைமேவினார்
எவரும்பவத்தாலிழிந்தோர்களும்
தாவரும்பலநன்மையரீறுசால்
தேவரும்முளர்தீமைதிருந்தினார். (௧௧௪)

இனையதாதலினெக்குலத்தியாவர்க்கும்
வினையினால்வருமேன்மையுங்கீழ்மையும்
அனையதன்மையறிந்துமழித்தனை
மனையின்மாட்சியென்றான்மனுநீதியான். (௧௧௫)

வேறு.

அவ்வுரையமையக்கேட்டவரிகுலத்தரசுமாண்ட
செவ்வியோயனையதாகச்செருக்களத்தெதிர்தெய்யாதே
வெவ்வியபுளினொன்னவிலங்கியேமறைந்துவில்லால்
எவ்வியதென்னையென்றானிலக்குவனியம்பலுற்றான். (௧௧௬)

முன்புநின்றம்பிவந்துசரண்புகமுறையிலோயைத்
தென்புலத்துய்ப்பனென்றுசெப்பினன்செருவினீயும்
அன்பினையுயிருக்காகியடைக்கலமியானுமென்பாய்
என்பதுகருதியண்ணல்மறைந்துநின்றெய்ததென்றான். (௧௧௭)

கவிகுலத்தரசுமன்னன்கட்டுரைமனத்திற்கொண்டான்
அவியுறுமனத்தனாகியறத்திறனழியச்செய்யான்
புவியிடையண்ணலென்பதெண்ணினன்பொருந்திமுன்னே
செவியுறக்கேள்விச்செல்வன்சென்னியினிறைஞ்சிச்சொன்னான்.

தாயெனவுயிர்க்குநல்கித்தருமமுந்தகவுஞ்சால்பும்
நீயெனநின்றநம்பிநெறியினைநோக்கினேர்மை
நாயெனநின்றவெம்பானவையறவுணரலாமே
தீயனபொறுத்தியென்றான்சிறியனசிந்தியாதான். (௧௧௯)

இரந்தனல்பின்னுமெந்தையாவதுமெண்ணமேற்றுக்
குரங்கெனக்கருதிநாயேன்கூறியமனத்திற்கொள்ளேல்
அரந்தைவெம்பிறவியென்னேய்க்கருமருந்தனையவையா
வரந்தருவள்ளலொன்றுகேளெனமறுத்துஞ்சொல்வான். (கஉ0)

வேறு.

ஏவுகூர்வாளியாலெய்துநாயடியனேன்
ஆவிபோம்வேலைவாயறிவுதந்தருளினாய்
மூவர்நீமுதல்வனீமுற்றுநீமற்றுநீ
பாவநீதருமநீபகையுநீயுறவுநீ. (கஉக)

புரமெலாமெரிசெய்தோன்முதலினோர்பொருவிலா
வரமெலாமுருவியென்வசையிலாவலிமைசால்
உரமெலாமுருவியென்னுயிரொலாநுகருநின்
சரமலாற்பிறிதுவேறுளதரோதருமமே. (கஉஉ)

யாவருமெவையுமாயிருதுவும்பயனுமாய்ப்
பூவுதல்வெறியுமொத்தொருவரும்பொதுமையாய்
யாவுனீயாவதென்றறிவினாருளினார்
தாவரும்பதமெனக்கருமையோதனிமையோய். (கஉங)

உண்டெனுந்தருமமேயுருவமாயுடையநிற்
கண்டுகொண்டேனினிக்காணவென்கடவனே
பண்டொடின்றளவுமேயென்பெரும்பழைமையாய்த்
தண்டமேயடியனேற்குறுபதந்தருவதே. (கஉச)

வேறு.

மற்றினியுதவியுண்டோவானினுமுயர்ந்தமானக்
கொற்றவநின்னையென்னைக்கொல்லியகொணர்ந்துதொல்லைச்
சிற்றினக்குரங்கினோடுந்தெரிவுறச்செய்தசெய்கை
வெற்றரசெய்தியெம்பிவீட்டரசெனக்குவிட்டான். (கஉரு)

ஓவியவுருவநாயேனுளதொன்றுபெறுவதுன்பாற்
பூவியனறவமாந்திப்புந்திவேறுற்றபோதில்
தீவினையியற்றுமேனுமெம்பிமேற்சீறியென்மேல்
ஏவியபகழியென்னுங்கூற்றினையேவலென்றான். (கஉகா)

இன்னமொன்றிரப்பதுண்டாலெம்பியையும்பிமார்கள்
தன்முனைக்கொல்வித்தானென்றிகழ்வரோற்றடுத்திதக்கோய்
முன்னமேமொழிந்தாயன்றேயிவன்குறைமுடிப்பதைய
பின்னிவன்வினையின்செய்கையதனையும்பிழைக்கலாமோ. (கஉஎ)

மற்றிலேனெனினுமாயவரக்கனைவாலிற்பற்றிக்
கொற்றவநின்கட்டந்துரக்கியதற்றெழிலுங்காட்டப்
பெற்றிலன்கடந்தசொல்லிற்பயனிலைபிறிதொன்றேனு
முற்றதுசெய்கென்றானுமுரியனிவ்வனுமனென்றான். (கஉஅ)

அனுமனென்பவனையாழியையநின்செய்யசெங்கைத்
தனுவெனநினைதிமற்றென்றம்பிநின்றம்பியாக
நினைதியோர்துணைவரின்றேனையவரிலைநீயீண்டவ்
வனிதையைநாடிக்கோடிவாணினுமுயர்ந்ததோளாய். (கஉகூ)

என்றவர்க்கியம்பிப்பின்னரிருந்தன்னிளவறன்னை
வன்றுணைத்தடக்கைநீட்டிவாங்கினன்றழுவிமைந்த
ஒன்றுனக்குரைப்பதுண்டாலுறுதியதுணர்ந்துகோடி
குன்றினுமுயர்ந்ததோளாய்வருந்தலையென்றுகூறும். (கங0)

மறைகளுமுனிவர்யாருமலர்மிசையயனுமற்றைத்
துறைகளின்முடிவுஞ்சொல்லுந்துணிபொருடுணிவிற்றூக்கி
அறைகழலிராமனாகியறநெறிநிறுத்தவந்த
இறையொருசங்கையின்றியெண்ணுதியெண்ணமிக்கோய். ()

நிற்கின்றசெல்வம்வென்றிநெறிநின்றபொருள்களெல்லாம்
கற்கின்றவிவன்றன்னாமங்கருதுவவிவனைக்கண்டாய்
பொற்குன்றமனையதோளாய்பொதுநின்றநிலைமைநோக்கின்
எற்கொன்றவலியேசாலுமிதற்கொன்றுமேதுவேண்டா. (கஙஉ

கைதவமியற்றியாண்டுங்கழிப்பருங்கணக்கிறீமை
வைகலும்புரிந்துளாரும்வானுயர்நிலையைவள்ளல்
எய்தவர்பெறுவரொன்றோவிணையடியிறைஞ்சியேவல்
செய்தவர்பெறுவதையாசெப்பலாஞ்சீர்மைத்தாமோ. (கஙங)

அருமையென்விதியினாரேயுதவுவானமைந்தகாலை
இருமையுமெய்தினாய்மற்றினிச்செயற்பாலதெண்ணில்
திருமறுமார்பனேவல்சென்னியிற்சேர்த்திச்சிந்தை
ஒருமையினிறுவிமும்மையுலகினுமுயர்தியன்றே. (கஙச)

மகவியற்குரக்குச்செய்கைமயர்வொடுமாற்றிவள்ளல்
உதவியையுன்னியாவியுற்றிடத்துதவுகிற்றி
பதவியையெவர்க்குநல்கும்பண்ணவன்பணித்தயாவுஞ்
சிதைவிலசெய்துநொய்திற்றீர்வரும்பிறவிதீர்தி. (கஙரு)

அரசியற்பாரம்பூரித்தயர்த்தனையிகழாதையன்
மாமலர்ப்பாதநீங்காவாழுதிமன்னரொன்பார்

எரியனற்குரியானென்றேயெண்ணுதியெண்ணம்யாவும்
புரிதிசிற்றடிமைகுற்றம்பொறுப்பனென்றெண்ணவேண்டாம்.

என்னவித்தகையவாயவுறுதிகளியாவுமேங்கும்
பின்னவற்கியம்பிநின்றபேரெழிலானைநோக்கி
மன்னவர்க்கரசன்மைந்தமற்றிவல்சுற்றத்தோடும்
உன்னடைக்கலமென்றாய்த்தேயுயர்கரமுச்சிவைத்தான். (கஙஎ)

வைத்தபின்றுரிமைத்தம்பிமாமுகநோக்கிவல்லை
உய்த்தனைகொணர்தியுன்றன்சேய்ங்கருமகனையன்ன
அத்தலையவனையேவியழைத்தலினணைந்தானென்ப
கைத்தலத்துவரிநீராக்கலக்கினான்பயந்தகாளை. (கஙஅ)

சுடருடைமதியமென்னத்தோன்றினன்றோன்றியாண்டும்
இடருடையுள்ளத்தோனையெண்ணினுமுணர்ந்திலாதான்
மடலுடைநறுமென்சேக்கைமலையவீழ்ந்துதிரவாரிக்
கடலிடைக்கிடந்தகாதற்றாதையைக்கண்ணிற்கண்டான். (கஙக)

கண்டனன்கலுழிநீரிற்குருதிபுங்காலமாலை
குண்டலமலம்புகின்றகுவவுத்தோட்குரிசிறிங்கள்
மண்டலமுலகில்வந்துகிடந்ததம்மதியின்மீதா
விண்டலந்தன்னினின்றோர்மீன்விழுந்தென்னவீழ்ந்தான் (கசо

எந்தையேயெந்தையேயிவ்வெழுதிரைவளாகத்தியார்க்கும்
சிந்தையாற்செய்கையாலோர்தீவினைசெய்திலாதாய்
நொந்தனையதுதானிற்கநின்முகநோக்கிக்கூற்றம்
வந்ததேயன்றேவஞ்சாதாரதன்வலியைத்தீர்ப்பார். (கசக)

தறையடித்ததுபோற்றீராத்தகையவித்திசைகடாங்கும்
கறையடிக்கழிவுசெய்தகண்டகனெஞ்சமூன்ற
நிறையடிக்கோலவாலினிலைமையையுன்னுந்தோறும்
பறையடிக்கின்றவந்தப்பயமறப்பறந்ததன்றே. (கசஉ)

குலவரைநேமிக்குன்றமென்றுவானுயர்ந்தகோட்டின்
தலைகளுநின்பொற்றோளிற்றழும்பினிற்றவிர்ந்தவன்றே
மலைகளுமரவுமற்றுமதியமும்பலவுந்தாங்கி
அலைகடல்கடையவேண்டினாரினிக்கடவையா. (கசங)

பஞ்சின்மெல்லடியாள்பாகன்பாதுகமல்லாதியாவு
அஞ்சலித்தறியாச்செங்கையாணையாயமரரியாரும்
எஞ்சலரிருந்தாருன்னலின்னமிர்தீந்தநீயோ
துஞ்சினைவள்ளியோர்கணின்னில்யார்சொலற்பாலார். (கசச)

ஆயனபலவும்பன்னியழுங்கினன்புழுங்கிநோக்கத்
தீயுறுமெழுகிற்சிந்தையலமருஞ்செங்கண்வாலி
தீயினியயர்வாயல்லையென்றுதன்னெஞ்சிற்புல்லி
நாயகனிராமன்செய்தநல்வினைப்பயனிதென்றான். (கசரு)

தோன்றலுமிறத்தலுந்துகளறத்துணிந்துநோக்கின்
மூன்றுலகத்தினோர்க்குமுலத்தேமுடிந்தவன்றே
யான்றவமுடைமையாலிவ்விறுதிவந்திசைந்ததியார்க்கும்
சான்றெனநின்றவீரன்றான்வந்துவீடுதந்தான். (கசசா)

பாலமைதவிர்நீயென்சொற்பற்றுதியாயிற்றன்னின்
மேலொருபொருளுமில்லாமெய்ப்பொருள்வில்லுந்தாங்கிக்
கால்தரைதோயநின்றுகண்ணுக்குமெளியனானான்
மால்தரும்பிறவிநோய்க்குமருந்தெனவணங்குமைந்த. (கசஎ)

என்றுயிர்க்கிறுதிசெய்தானெனப்பதையிறையுமெண்ணா
துன்றுயிர்க்குறுதிசெய்தியிவற்கமருற்றதுண்டேல்
பொன்றுயிர்த்தொளிரும்பூணாய்போதுதிநிலைமைநோக்கி
மன்றுயிர்க்குறுதிசெய்வான்மலரடிசுமந்துவாழ்தி. (கசஅ)

என்றனனினையவாயவுறுதிகளியாவுஞ்சொல்லித்
தன்றுணைத்தடக்கையாரத்தனயனைத்தழுவிச்சாலக்
குன்றினுமுயர்ந்ததிண்டோட்குரக்கினத்தரசன்கொற்றப்
பொன்றினிவைரப்பைம்பூண்புரவலன்றன்னைநோக்கி. (கசகூ)

நெய்யடைநெடுவேற்றானைநீனிறநிருதரொன்றுந்
துய்யடைகனலியன்னதோளினன்றொழிலுந்தூயன்
பொய்யடையுள்ளத்தார்க்குப்புலப்படாப்புலவமற்றுன்
கையடையாகுமென்றவ்விராமற்குக்காட்டுங்காலை. (கருo)

தன்னடிதாழ்தலோடுந்தாமரைத்தடங்கணானும்
பொன்னுடைவாளைநீட்டிநீயிதுபொறுத்தியென்றான்
என்னலுமுலகமேழுமேத்தினவிறந்துவாலி
அந்நிலைதுறந்துவானுக்கப்புறத்துலகனானான். (கருக)

கையவனெகிழ்த்தலோடுங்கடுங்கணைகாலவாலி
வெய்யமார்பகத்துட்டங்காதுருவிமேக்குயரமீட்போய்த்
தூயநீர்க்கடலுட்டோய்ந்துதூய்மலரமரர்சூட்ட
ஐயன்வெந்விடாதகொற்றத்தாவம்வந்தடைந்ததன்றே. (கருஉ)

வாலிவதைப்படலமுற்றிற்று ஆ படலம் எ௰

திருவிருத்தம் ஙகூ

# அ-வது-அரசியற்படலம்.

வாலியுமேகினான்விண்வரம்பிலாவாற்றலோடும்
பாலியாமுன்னர்நின்றபரிதிச்சேய்செங்கைபற்றி
ஆலிலைப்பள்ளியானுமங்கதனோடும்போனான்
வேல்விழித்தாரைகேட்டாள்வந்தவன்மேலின்வீழ்ந்தாள். (௧)

குங்குமங்கோட்டியென்னகுவிமுலைக்குவட்டுக்கொத்த [ள்
பொங்குவெங்குருதிபோர்ப்பப் புரிகுழல்சிவப்பப்பொற்றோ
அங்கவனலங்கன்மார்பிற்புரண்டனளகன்றசெக்கர்
வெங்கதிர்விசும்பிற்றோன்றுமின்னெனத்திகழுமெய்யாள். (௨)

வேய்ங்குழல்விளிகொணல்லியாழ்வீணையென்றினையநாண
எங்கினளிரங்கிவிம்மியுருகினளிருகைகூப்பித்
தாங்கினடலையிற்சோர்ந்துசரிந்துதாழ்குழல்கடள்ளி
ஓங்கியகுரலாற்பல்விமினையனவுரைக்கலுற்றாள். (௩)

வேறு.

வளைசேர்தோளிடைநாளும்வைகுவேன்
களைசேராவிடர்வேலைகாண்கிலேன்
உளைசேராருயிரோயெனுள்ளமே
அரசேயாணிதுகாணவஞ்சினேன். (௪)

துயராலேதொலையாதவென்னையும்
பயிராயோபகையாதபண்பினோய்
செயிர்தீராய்விதியானதெய்வமே
உயிர்போனாலுடலாருமுய்வரோ. (௫)

நமிதாநல்லமிர்துண்ணநல்கலிற்
பிறியாவின்னுயிர்பெற்றபெற்றிதாம்
அறியாரோநமனாரதன்றெனின்
சிறியாரோவுபகாரஞ்சிந்தியார். (௬)

அணங்கார்பாகனையாசைதோறுமுற்
றுணங்காவொண்மலர்கொண்டுளன்பொடு
மிணங்காக்காலமிரண்டொடொன்றினும்
வணங்காதித்துணைவைகவல்லையோ. (௭)

வளையார்தோள்பொடியாடவைகுவாய்
தளைமேலாயுறுதன்மையீதெனக்
களையாதேனிடுபூசல்கண்டுமொன்
றுளையாயென்வயினூனமியாவதோ. (௮)

நையாநின்றனனிருந்திங்ஙன்
மெய்வானோர்திருநாடுமேவினாய்

ஐயாநீயெனதாவியென்பதும்
பொய்யோபொய்யுரையாதபுண்ணியா. (௯)

செருவார்தோளநின்சிந்தையேனெனின்
மருவார்வெஞ்சரமெனையும்வய்வுமால்
ஒருவேனுள்ளுருளையாகினுய்தியால்
இருவேமுள்ளிருவேமிருந்திலேம். (௧0)

எந்தாய்நீயயிர்நீயயாமெலாம்
உய்ந்தோமென்றுபகாரமுன்னுவார்
நந்தாநாண்மலர்சிந்திநண்பொடு
வந்தாரோவெதிர்வானுளோரெலாம். (௧௧)

ஓயாவாளியொளித்துநின்றெய்வான்
ஏயாவந்தவிராமனென்றுளான்
வாயாலேயினனென்னின்வாழ்வெலாம்
ஈயாயோவயிர்தேயுமீகுவாய். (௧௨)

சொற்றேன்முந்துறவன்னசொற்கொளாய்
அற்றானன்னதுசெய்கலானென
உற்றாயும்பியையூழிகாணுநீ
இற்றாய்நானுனையென்றுகாண்பெனே. (௧௩)

நீறாமேருவுநீநெருக்கினால்
மாறோர்வாளியுன்மார்பையீர்வதோ
தேறேன்யானிதுதேவர்மாயமோ
வேறோர்வாலிகொலாம்விளிந்துளான். (௧௪)

நகைநேர்வண்புகழ்நின்றதப்பியார்
பகைநேர்வாருளரானபண்பினால்
உகநேர்சிந்தியுலர்ந்தழிந்தவால்
மகனேகண்டிலையோநம்வாழ்வெலாம். (௧௫)

அருமந்தற்றமகற்றும்வில்லியார்
ஒருமைத்தற்குமடாததுன்னினார்
தருமம்பற்றியதக்கவர்க்கெலாய்
கருமங்கட்டளையென்றல்கட்டதோ. (௧௬)

என்றாளின்னனபன்னியின்னலோ
டொன்றாவுணர்வேதுமுற்றிலாள்
நின்றானந்நிலைநோக்கிநீதிசால்
வன்றோண்மால்வரையன்னமாருதி. (௧௭)

மடவாராலமடந்தைமுன்னர்வாழ்
இடமேவும்படியேவிவாலிபால்
கடன்யாவுங்கடைகண்டுகண்ணனோ
டேனையுற்றவெலாமுணர்த்தலும். (௧௮)

அகம்வேரற்றகவீசருக்கனார்
புகமேலைக்கிரிபுக்கபோழ்தினில்
நகமேயொத்தகுரக்குநாயகன்
முகமேயொத்ததுமூரிமண்டலம். (௧௯)

மறைந்தான்மாலையருக்கன்வள்ளியோன்
உறைந்தான்மங்கைநிறத்தையுன்னுவான்
குறைந்தானெஞ்சுகுழைந்தழுங்குவான்
நிறைத்தார்கங்குலின்வேலைநீந்தினான். (௨0)

புதல்வன்பொன்மகுடம்பொறுக்கலால்
முதல்வன்பேருவகைக்குமுந்துவான்
உதவும்பூமகள்சேரவொண்மலர்க்
கதவஞ்செய்யகரத்தினீக்கினான். (௨௧)

அதிகாலத்துவருட்குநாயகன்
மதிசாம்பியையவல்லையேவினான்
கதிரோன்மைந்தனையையகைகளால்
விதியான்மௌலிமிலைச்சுவாயெனா. (௨௨)

அப்போதேயருணின்றவண்ணலும்
மெய்ப்போர்மாருதிதன்னைவீரநீ
இப்போதேகொணரின்னசெய்வினைக்
கொப்பாமியாவையுமென்றுணர்த்தலும். (௨௩)

மண்ணுநீர்முதன்மங்கலங்களும்
என்னும்பொன்முடிமுதலயாவையும்
நண்ணும்வேலையினம்பிதம்பியும்
திண்ணஞ்செய்வனசெய்துசெம்மலை. (௨௪)

மறையோராசிவழங்கவானுளோர்
நறைதோய்நாண்மலர்தூவநன்னெறிக்
கிறையோன்றன்னிளையோனவ்வேந்தலைத்
துறையோர்நூன்முறைமௌலிசூட்டினான். (௨௫)

பொன்மாமவுலிபுனைந்துபொய்யிலான்
தன்மானக்கழலுறுவேலையில்

நன்மார்பிற்றழுவுற்றநாயகன்
சொல்லுன்முற்றியசொல்லினெல்லையான். (௨௬)

வேறு.

ஈண்டுநின்றேகிநீநின்னியல்பமையிருக்கையெய்தி
வேண்டுவமாயினெண்ணிவிதிமுறையியற்றிவீர
பூண்டபோரசுக்கேற்றயாவையும்புரிந்துபோரில்
மாண்டவன்மைந்தனோடும்வாழ்திநந்திருவின்வைகி. (௨௭)

வாய்மைசாலறிவின்வாய்ந்தமந்திரமாந்தரோடும்
தீமைதீரொழுக்கின்வந்ததிறத்தொழின்மறவரோடும்
தூய்மைசால்புணர்ச்சிபேணித்துகளறுதொழிலையாகிச்
சேய்மையோடணிமையின்றித்தேவரிற்றெரியநிற்றி. (௨௮)

புகையுடைத்தென்னினுண்டுபொங்கனலங்கென்றுன்னும்
மிகையுடைத்துலகநூலோர்வினயமும்வேண்டற்பாற்றே
பகையுடைச்சிந்தையார்க்கும்பயனுறுபண்பிற்றீரா
நகையுடைமுகத்தையாகியின்னுரைநல்குநாவால். (௨௯)

தேவரும்வெஃகற்கொத்தசெயிரறுசெல்வமெய்தின்
காவலுக்குரியதெல்லாங்கருதிக்காண்டி
ஏவருமினியநண்பரயலவர்விரவாரென்றிம்
மூவகையியல்பிற்றருமுனைவர்க்குமுலகமூன்றின். (௩௰)

செய்வனசெய்தலியாண்டுந்தீயனசிந்தியாமல்
வைவனவந்தபோதும்வசையிலவினியகூறல்
பொய்யெனவழங்கலியாவுமேவினவெஃகலின்மை
உய்வனவாக்கத்தம்மோடுயர்வறவுயர்ந்ததோளாய். (௩௧)

சிறியரென்றிகழ்ந்துநோவுசெய்வனசெய்யன்மற்றிந்
நெறியிகழ்ந்தியானோர்தீமையிழைத்தலாலுணர்ச்சிநீண்டு
குறியதாமேனியாயகூனியாற்குவவுத்தோளாய்
வெறியனவெய்திநொய்தின்வெந்துயர்க்கடலின்வீழ்ந்தேன். ()

மங்கையர்பொருட்டாலெய்துமாந்தர்க்குமரணமென்றல்
சங்கையின்றுணர்திவாலிசெய்கையாற்சாலுமின்னும்
அங்கவர்திறத்தினாலேயல்லலும்பழியுமாதல்
எங்களிற்காண்டியன்றேயிதற்குவேறுவமையுண்டோ. (௩௩)

நாயகனல்லனம்மைநனிபயந்தெடுத்துநல்குந்
தாயெனவினிதுபேணித்தாங்குதிதாங்குவாரை
ஆயதன்மையேனுமறம்வரம்பிகவாவண்ணந்
தீயனவந்தபோதுசுடுதியாற்றீமையோரை. (௩௪)

இறத்தலும்பிறத்தறானுமென்பனவிரண்டுமியாண்டுந்
திறத்துளிநோக்கிற்செய்தவினைதரத்தெரிந்தவன்றே
புறத்தினியுரைப்பதென்னேபூவின்மேற்புனிதற்கேனும்
அறத்தினைத்திறம்பிவாழ்நாட்கிறுதியதுறுதியென்ப. (௩௫)

ஆக்கமுங்கேடுந்தாஞ்செய்யறத்தொடுபாவமாய
போக்கிவேறுண்மைதேறார்பொருவரும்புலமைநூலோர்
தாக்கினைவொல்லேறுடொன்றுதருக்குறாஞ்செருவிற்றக்கோய்
பாக்கியமன்றிமற்றப்பாவத்தைப்பற்றலாமோ. (௩௬)

இன்னவைதகைமையென்பவியல்புளிமரபினெண்ணி
டமன்னரசியற்றியென்கண்வருவழிபாரிக்காலம்
பின்னுறமுறையினுன்றன்பெருங்கடற்சேனையோடும்
துன்னுதிபோதியென்றான்சுத்தரனவனுஞ்சொல்வான். (௩௭)

குரங்குறையிருக்கையென்னுங்குற்றமேகுற்றமல்லால்
அரங்கெழுநறக்கநாட்டிக்கரசெனலாயதன்றே
மரங்கிளரருவிக்குன்றம்வள்ளனீமனத்தினெய்மை
இரங்கியபணியாமெய்தவிருத்தியாத்திலநாளெப்பால். (௩௮)

அரிந்தமநின்னையன்னியருனக்குரியராகிப்
பிரிந்துவேறெய்துஞ்செல்வம்வெறுமையிற்பிறிதொன்றுமா
கருந்தடங்கண்ணினாளைநாடலாங்காலங்காறும்
இருந்தருடருதியெம்மோடென்றடியிணையின்வீழ்ந்தான். (௩௯)

எந்தலுமிதனைக்கேளாவிளமுறுவலுற
வேந்தரினிருக்கையெப்போல்விரதியர்விழைதற்கொவ்வா
போந்தவனிருப்பினெம்மைப்போற்றவேபொழுதுபோமால்
தேர்ந்தினிதியற்றுமுன்றனரசியற்றருமத்தீர்த்தி. (௪0)

எழிரண்டாண்டுநான்போந்தெரிவனத்திருக்கச்சென்றேன்
வாழியாயரசர்வைகும்வளநகர்வைகமாட்டேன்
பாழியந்தடந்தோள்வீரபார்த்திலைபோலுமன்றே
யாழிசைமொழியோடன்றியாலுறையிற்பமென்றே. (௪௧)

தேவியேயரக்கன்வைத்தசேமத்துளிருக்கத்தான்றன்
ஆவிபோற்றுணைவரோடுமளவிடற்கரியவின்பம்
மேவினனிராமனென்றாலையவிவ்வெய்யமாற்றம்
மூவகையுலகமுற்றுங்காலத்துமுற்றவற்றோ. (௪௨

இல்லறந்துறந்திலாதோரியற்கையையிழந்துபோரின்
வில்லறத்துறந்துவாழ்வேற்கின்னமேன்மையில்லாச்

இல்லறம்புரிந்திலின்றதீமைகடீருமாறு
நல்லறந்தொடர்ந்தநோன்பினவையறநோற்பனென்றான். (சங)

ஆசியற்குரியயாவுமாற்றுழியாற்றியான்ற
நிரைசெயற்குரியசேனைக்கடலொடுந்திங்களொன்றின்
விரசுகவெம்பானின்னைவேண்டினன்வீரவென்றான்
உரைசெயத்தெளிதுமாகியரிதுமாயொழுகிநின்றான். (சச)

மறித்தொருமாற்றங்கூறான்வானுயர்கொற்றத்தன்றான்
குறிப்பறிந்தொழுகன்மாதோகோதிலாராதலென்று
நெறிப்படர்கண்கள்பொங்கிநீர்வரநெடிதுதாழ்ந்து
பொறிப்பருந்துன்பமுன்றாக்கவிகுலத்தரசன்போனான். (சரு)

வாலிகாதலனுமாண்டுமலரடிவணங்கினானை
நீலமாமேகமன்னநெடியவனருளினோக்கிச்
சீலநீயுடையையாதலிவன்சிறுதாதையென்று
மூலமேதந்தநுந்தையாமெனமுறையினிற்றி. (சசா)

என்னமற்றினையகூறியேகவற்றொடரவென்றான்
பொன்னடிவணங்கிமற்றப்புகழுடைக்குரிசில்போனான்
பின்னர்மாருதியைநோக்கிப்பேரொழில்வீரநீயும்
அன்னவனரசுக்கேற்றதாற்றுதியறிவினென்றான். (சஎ)

பொய்த்தலிலுள்ளத்தன்புபொழிகின்றபுணர்ச்சியானும்
இத்தலையிருந்துநாயேனேயினைவெனக்குத்தக்க
கைத்தொழில்செய்வனென்றுகழலிணைவணங்குங்காலை
மெய்த்தலைநின்றவீரனிவ்வுரைவிளம்பிவிட்டான். (சஅ)

நிரம்பினனொருவன்காத்தநிறையரசுறுதிநின்ற
வரம்பிலாததனைமற்றோர்தலைமகன்வலிதிற்கொண்டால்
அரும்புவதலனுந்தீங்குமாதலினையநின்போற்
பெரும்பொறையறிவினோரனிலையினைப்பெறுவதம்மா. (சகூ)

ஆன்றவற்குரியதானவரசினைநிறுவியப்பால்
என்றெனக்குரியதானகருமமுமியற்றற்கொத்த
சான்றவர்நின்னினில்லையாதலாற்றருமத்தானே
போன்றநீயானேவேண்டவத்தலைபோதியென்றான். (ருO)

ஆழியானனையகூறவாணைநீதாயினஃதே
வாழியாய்புரிவனென்றுவணங்கிமாருதியும்போனான்
சூழியாலியானையன்னதம்பியுந்தானுந்தொல்லை
ஊழிநாயகனும்வேற்றுருபர்தடங்குன்றமுற்றார். (ருக)

ஆரியனருளிற்போயவகன்மலையகத்தனான
சூரியன்மகனுமானத்துணைவருங்கிளையுஞ்சுற்றத்
தாரையைவணங்கியன்றேதாயெனத்தந்தைமுந்தைச்
சீரியர்சொல்லேயென்னச்செவ்விதினரசுசெய்தான். (௫௨)

வளவரசெய்திமற்றைவானரவீரர்யாரும்
கிளைஞரினுதவவாலிகிளர்திரையளப்பக்கேளோ
டளவிலவாற்றலாண்மையங்கதனறங்கொள்செல்வத்
திளவரசியற்றவேவியினிதினிருந்தானிட்பால். (௫௩)

வள்ளலுமவணின்றேகிமதங்கனதிருக்கையான
வெள்ளவான்குடுமிக்குன்றத்தொருசிறைமேவிமெய்ம்மை
அள்ளுறுகாதற்றம்பியன்பினாலமைக்கப்பட்ட
எள்ளலில்சாலையெய்தியினிதினிருந்தகாலை. (௫௪)

அரசியற்படலமுற்றும் ஆ. படலம் ௮இ திருவிருத்தம்-௪௫ 0



## ௯-வது-கார்காலப்படலம்.

மாவியல்வடதிசைநின்றுவானவன்
ஓவியமேயெனவொளிக்கவின்குலாய்
தேவியைநாடியமுந்தித்தென்றிசைக்
கேவியதூதெனவிரவியேகினான். (௧)

மையணைப்பஃறலைப்பாந்தளேந்திய
மொய்நிலத்தகழியின்முழங்குநீர்நெயின்
வெய்யவன்விளக்கமாமேருப்பொன்றிரி
மையெடுத்தொத்ததுமழைத்தவானமே. (௨)

நண்ணுதலருங்கடனஞ்சருங்கிய
கண்ணுதல்கண்டத்தின்காட்சிகாணலாய்
விண்ணகமிருண்டதுவெயிலின்வெங்கதிர்
தண்ணியமெலிந்தனதழைத்தமேகமே. (௩)

நஞ்சினினளிர்நெடுங்கடலினங்கையர்
அஞ்சனநயனத்தினவிழ்ந்தகூந்தலின்
வஞ்சனையரக்கர்தம்வடிவிற்செய்கையின்
நெஞ்சினினிருண்டதுநீலவானமே. (௪)

நாட்களினளிர்கடனாநாவுற
வேட்கையிற்பருகியமேகமின்னுவ

வாட்கணைபயங்கியசெருவின்வாரிமதப்
புட்கைகணிறைந்தடுவிழந்தப்பிபோயினவே. (௫)

நீலிறப்பெருங்கிரிநிரைத்தநீர்த்திரளைச்
சுனிறமுறிற்றுலத்துவண்டீர்த்துறுநிலா
மாவிறநெடுங்கடல்வாரிமேய்யான்
மேனிநாத்தனமெனமுழக்கமிக்கதே. (௬)

அரிப்பெரும்பெயரவன்முதலினோரணி
விரிப்பவுமொத்தனவெற்புமீதி
எரிப்பவுமொத்தனவேவிலாசைகள்
சிரிப்பவுமொத்தனதெரித்தமின்னெலாம். (௭)

மாதிரக்கருமகன்மாரிக்கார்மழை
யாதிருமிருண்டவிண்ணிருந்தைக்குப்பையின்
கூதிர்வெங்கானெடுந்துருத்திகோளமைத்
ஊதுவெங்கனலுமிழ்வதுமொத்ததே. (௮)

பிரிந்துறைமகளிருப்பிலத்தபாத்தரும்
எரித்துயிர்நடுங்கிடவிரவியிற்கதிர்
அரித்தனவாமெனவசனிநாவென
விரித்தனதிசைதொறுமிசையின்மின்னெலாம். (௯)

சூடினமணிமுடித்துகளின்விஞ்சையர்
கூடுறைநீக்கியகுருதிவாட்களும்
ஆடவர்பெயர்தொறுமாசையானையின்
ஓடைகளொளிபிறழ்வனவுமொத்ததே. (௰)

எண்வகைநாகங்கடிசைகளெட்டையு
நண்ணினநாவிளர்த்தனையமின்னகல்
கண்ணுதன்மிடறெனக்கருகிக்கார்விசும்
புண்ணிறையுயிர்ப்பெனவூதைபொங்கவே. (௧௧)

தலைமையுங்கீழ்மையுந்தவிர்தலின்றியே
மலையினுமரத்தினுமற்றுமுற்றினும்
விலைநினைந்துளவழிவிலங்கும்வேசையர்
உலைவுறுமனமெனவுலாயதூதையே. (௧௨)

அழுங்குறுமகளிர்தமன்பர்த்தீர்ந்தவர்
புழுங்குறுபுணர்முலைகொதிப்பப்புக்குலாய்க்
கொழுங்குறைத்தசையெனவீர்ந்துகொண்டது
விழுங்குறுபேயெனவாடைவீங்கிற்றே. (௧௩)

ஆர்த்தெழுதுகள்விசும்படைத்தலானுமின்
கூர்த்தெழுவாளெனப்பிறழுங்கொட்பினும்
தார்ப்பெரும்பணையின்விண்டயங்கலானுமப்
போர்ப்பெருங்களமெனப்பொலிந்ததும்பரே. (கச

இன்னகைச்சனகியைப்பிரிந்தவேந்தன்மேன்
மன்மதன்மலர்க்கணைவழங்கினானெனப்
பொன்னெடுங்குன்றின்மேற்பொழிந்ததாரைகள்
மின்னெடுந்துவன்றினமேகராசியே. (கரு)

கல்லிடைப்படுந்துளித்திவலைகாரிடி
வில்லிடைச்சரமெனவிசையின்வீழ்ந்தன
செல்லிடைப்பிறந்தசெங்கனல்கள்சிந்தின
எல்லிடைமணிசிறந்தழலியற்றல்போல். (கசு)

மள்ளர்கண்மறுபடைமானயானைமேல்
வெள்ளிவேலெறிவனபோன்றமேகங்கள்
தள்ளருந்துளிபடத்தகர்ந்துசாய்கிரி
புள்ளிவெங்கடகரிபுரள்வபோன்றவே. (கஎ)

வானிடுதனுநெடுங்கருப்புவின்மழை
மீனெடுங்கொடியவன்பகழிவீழ்துளி
தானெடுஞ்சார்துணைபிரிந்ததன்மையர்
ஊனுடையுடம்பெலாமுருக்கலொத்தவே. (கஅ)

தீர்த்தனுங்கவிகளுஞ்செறிந்துநம்பகை
பேர்த்தனரினியெனப்பேசிவானவர்
ஆர்த்தெனவார்த்தனமேகமாய்மலர்
தூர்த்தனவொத்தனதுள்ளிவெள்ளமே. (ககூ)

வண்ணவிற்கரதலத்தரக்கன்வாளினன்
விண்ணிடைக்கடிதுகொண்டேகும்வேலையில்
பெண்ணினிற்கருங்கலமனையபெய்வளை
கண்ணெனப்பொழிந்ததுகால்மாரியே. (உ0)

பரஞ்சுடர்ப்பண்ணவன்பண்டுவிண்டொடர்
புரஞ்சுடவிடுசரம்புரையுமின்னினம்
அரஞ்சுடப்பொறிதிமிரயிலிருடவர்
உரஞ்சுடவுலைந்தனபிரிந்துளோர்க்கெலாம். (உக)

பொருடரப்போயினர்ப்பிரிந்தபொய்யுடற்
குருடருதேர்மிசையுயிர்கொண்டுய்த்தலான்

மருடருபிரிவினோய்மாசணங்கெடக்
கருடனைப்பொருவினகாலமாரியே. (௨௨)

முழங்கினமுறைமுறைமுரிமேகநீர்
வழங்கினமிடைவனமானயானைகள்
தழங்கினபொழிமதத்திவலைதாழ்தரப்
புழுங்கினவெதிரெதிர்பொருவபோன்றவே. (௨௩)

விழைவுறுபொருடாப்பிரிந்தவேந்தர்வந்
துழையுறவுயிருறவுயிர்க்குமாதரின்
மழையுறமாமுகமலர்ந்துதோன்றின
குழையுறப்பொலிந்தனவல்லைக்கொம்பெலாம். (௨௪)

வேறு.

பாடலம்வறுமைகூரப்பகலவன்பசுமைகூரக்
கோடல்கள்பெருமைகூரக்குவலயஞ்சிறுமைகூர
ஆடினமயில்கள்பேசாதடங்கினகுயில்கள்பார்த்
தேடுறத்தளர்ந்தார்போன்றுந்திருவுறக்கிளர்ந்தார்போன்றும் ()

நாணிறச்சுரும்பும்வண்டுநன்மணியணியிற்சாரத்
தேனுகமலர்ந்துசாய்ந்தசெயிதழ்க்காந்தட்செம்பூ
வேனிலைவென்றதம்மாகாரெனவியந்துநோக்கி
மாநிலக்கிழத்திகைகண்மறித்தனபோன்றமன்றே. (௨௬)

வாளெயிற்றரவம்போலவான்றலைதோன்றவார்ந்த
தாளுடைக்கோடறம்மிற்றழீஇயினகாதறங்க
மீளலவாகிமென்னவிழைவனவுணர்வுவீந்த
கோளரவென்னப்பின்னியவற்றொடுங்குழைந்துசாய்ந்த. (௨௭)

எள்ளிடவிடமின்றியெழுந்தனவிலங்குகோபத்
தள்ளுறத்தலைவர்தம்மைப்பிரிந்தவர்த்தழீஇயதூமக்
கள்ளுடையோதியார்தங்கலவியிற்பலகாற்கான்ற
வெள்ளடைத்தம்பற்குப்பைசிதர்ந்தெனவிரிந்தமாதோ. (௨௮)

ஓங்கனிநாவலோங்குஞ்சேணுயர்குன்றின்செம்பொன்
வாங்கினகொண்டுபோரின்மண்டுமாலியாறுமான
வேங்கையின்மலருங்கொன்றைவிரிந்தனவீயுமீர்த்துத்
தாங்கினகலுழிசென்றுதலைமயக்குறுவதம்மில். (௨௯)

நன்னெடுங்காந்தட்போதினறைவிரிகடுக்கைமென்பூ
துன்னியகோபத்தோடுந்தோன்றியதோற்றந்துய்ப்பி
இன்னிசைமுரல்வநோக்கியிருநிலப்பெண்கையேந்திப்
பொன்னெடுங்காசையீட்டிக்கொடுப்பதேபோன்றவன்றே. ()

கிளைத்துணைமழலைவண்டுகின்னரநிகர்த்தமின்னும்
துளிக்குரன்மேகம்வள்வார்த்தூரியந்துவைப்பபோன்ற
வளைக்கையர்போன்றமஞ்ஞைதோன்றிகளரங்கின்மாடே
விளக்கினமொத்தகாண்போர்விழிகருவிளையையொத்த. (௩௧)

பேடையுஞ்சிறும்பாயப்பெயர்வுழிப்பிறக்குமோசை
ஊடுறத்தாக்குந்தோறுமொல்லொலிபிறப்பதல்லார்
ஆடியற்பாணிக்கொக்குமாரியவமிர்தப்பாடற்
கோடியதாளங்கொட்டன்மலர்ந்தகூதாளமொத்த. (௩௨)

வழைதுறுகானயாறுமாநிலக்கிழத்திமக்கட்
குழைதருமலைமாக்கொங்கைசுரந்தபாலொழுக்கையொத்த
விழைவுறுவேட்கையோடும்வேண்டினர்க்குதவவேண்டிக்
குழைதொறுங்கனகந்தூங்குங்கற்பகநிகர்த்தகொன்றை. (௩௩)

பூவியற்புறவமெங்கும்பொறிவரிவண்டுபோர்ப்பத்
தீவியகளியவாகிச்செருக்கியகாமச்செவ்வி
ஏவியமான்கடோறுமுளைத்தறவுரிஞ்சியொண்கேழ்
நாவியசெவ்விநாறக்கலையொடும்புலர்ந்தநவ்வி. (௩௪)

வேறு.

தேரினன்னெடுந்திசைசெலச்செருக்கழிந்தொடுங்கும்
கூரயிற்றருங்கண்ணெனக்குவிந்தனகுவளை
மாரனன்னவர்வரவுகண்டுவக்கின்றமகளிர்
மூரன்மென்குறுமுறுவலொத்தரும்பினமுல்லை. (௩௫)

களிக்குமஞ்ஞையைக்கண்ணுளரினமெனக்கண்ணுற்
றளிக்குமன்னரிற்பொன்மழைவழங்கினவருவி
வெளிக்கண்வந்தகார்விருந்தெனவிருந்துகண்டுள்ளங்
களிக்குமங்கையர்முகமெனப்பொலிந்தனகமலம். (௩௬)

சரதநாண்மலரியாவையுங்குடைந்தனதடவிச்
சுரதநூற்றெறிவிடானத்தேன்கொண்டுதொகுப்ப
பரதநூன்முறைநாடகம்பயனுறப்பகுப்பான்
இரதமீட்டுறுங்கவிஞரைப்பொருவினதேனீ. (௩௭)

நோக்கிணைமைநோக்கழிகண்டநுண்மருங்குல்
தாக்கணங்கருஞ்சீதைக்குத்தாங்கருந்துன்பம்
ஆக்கினைமதருவின்னென்றரும்பெறலுவகை
வாக்கினாலுரையாமெனக்களித்தனமான்கள். (௩௮)

நீடுநெஞ்சுறுநேயத்தானெடிதுறப்பிரிந்து
வாடுகின்றனமருளுறுகாதலின்மயங்கிக்

கூடுரல்னதித்தடந்தொறுங்குடைந்தனபடிவுற்
றுமிகில்றனகொழுநனாப்பொருவினவன்னம். (௩௯)

காரொடும்பெயர்க்கரியவன்மார்பினிற்கதிர்முத்
தாரமென்னவும்பொலிந்தனவளப்பருமளக்கர்
நீர்முகந்தமாமேகத்தினருகுறநிரைத்துக்
கூரும்வெண்ணிறத்திரையெனப்பறப்பனகுரண்டம். (௪௦

பருவிநீங்கல்செல்லாதெடுமாலையவானிற்
பருவமேகத்தினருகுறக்குருகினம்பறப்ப
திருவினாயகனிவனெனத்தேமறைதெரிக்கும்
ஒருவன்மார்பினுத்தரீயத்தையுமொத்த. (௪௧)

உறவெதுப்புறுங்கொடுந்தொழில்வேனிலானொழியத்
திறநினைப்பருங்காரொடுஞ்செவ்வியோன்சேர
நிறைமனத்துறுகுளிர்ப்பினினெடுநிலமடந்தை
புறமயிர்த்தலம்பொடித்தனபோன்றனபசும்புல். (௪௨)

தேனவாமலர்த்திசைமுகன்முதலினர்தெளிந்தோர்
ஞானநாயகனவையுறநோக்கினநல்கக்
கானமியாவையும்பரப்பியகண்ணெனச்சனகன்
மானைநாடிநின்றழைப்பனபோன்றனமஞ்ஞை. (௪௩)

செஞ்செவேலவர்செறிசிலைக்குரிசிலிருண்ட
குஞ்சிசேயொளிகதுவுறப்புதுநிறங்கொடுக்கும்
பஞ்சிபோர்த்தமெல்லடியெனப்பொலிந்தனபதுமம்
வஞ்சிபோலியர்மருங்கெனநுடங்கினவல்லி. (௪௪)

நீயிரன்னவர்குதலையராதலினேடிப்
போயதையலைத்தருதியொன்றிராகவன்புகலத்
தேயமெங்கணுந்திரிந்தனபோந்திடைதேடிக்
கூயவாய்க்குரல்குறைந்தபோற்குறைந்தனகுயில்கள். ௪௫

பொழிந்தமாநிலம்புற்றரக்குமட்டியபுனிற்று
எழுந்தவாம்பிகளிடறினசெறிதயிரோய்த்த
மொழிந்ததேனுடைமுகிழ்முலையாய்ச்சியர்முழவிற்
பிழிந்தபால்வழிநுரையெனப்பொருவுவபிடவம். (௪௬)

வேங்கைநாறினகொடிச்சியர்வெடிக்குழல்விழைவண்
டேங்கநாகமுநாறினநுளைச்சியராம்பால்
ஓங்குநாண்முல்லைநாறினவாய்ச்சியரோதி
ஞாங்கருற்பலமுடைத்தியர்பித்தையினறு. (௪௭)

தோகைக்கொண்டபோல்குலாடிருமுகங்காணுன்
ஊனைக்கண்டுயிராற்றுவானலனுணர்வழிந்தான்
மாரற்கெண்ணில்பல்லாயிரமலர்க்கணைவகுத்த
கானைக்கண்டனன்வெந்துயர்க்கொருகரைகாணுன். (௪௮)

அளவில்காரெனுமப்பெரும்பருவம்வந்தணைந்தால்
தளர்வரென்பதுதவம்புரிவோர்கட்குந்தகுமால்
கிளவிதேனினுமமிர்தினுங்கிடைத்தவெள்வளைத்தோள்
வளவியுண்டவன்வருந்துமென்றலதுவருந்தோ. (௪௯)

காவியுங்கருங்குவளையுநெய்தலுங்காயாம்
பூவையும்பொருவானவன்புலம்பினன்றளர்வான்
ஆவியுஞ்சிறிதுண்டுகொலாமெனவயிர்ப்பான்
தூவியன்னமன்னாடிறத்திவையிவைசொல்லும். (௫௦)

வேறு.

வாரோர்முலையாளைமறைக்குநர்வாழ்
ஊரோயறியேனுயிரோடுழல்வேன்
நீரோயுடையாயருணின்னிலையோ
காரோயெனதாவிகலக்குதியோ. (௫௧)

வெப்பார்நெடுமின்னினையிற்றின்வெகுண்
டெப்பாலும்விசும்பினிருண்டெழுவாய்
அப்பாதகவஞ்சவரக்கனையே
ஒப்பாயுயிர்கொண்டலதோவலையோ. (௫௨)

அயிலேவிழியார்விளையாரமுதின்
குயிலேமொழியார்கொணராய்கொடியாய்
துயிலேனொருவேனுயிர்சோர்வுணர்வாய்
மயிலேயெனைநீவலியாடுதியோ. (௫௩)

மழைவாடையொடாடிவலித்துயிர்மேல்
நுழைவாய்மலர்வாய்தொடியாய்கொடியே
இழைவாணுதலாளிடைபோலிடையே
குழைவாயெனதாவிகுழைக்குதியோ. (௫௪)

விழையேன்விழைவானவைமென்மையினின்
றிழையேனுணர்வேனவையின்மையினுற்
பிழையேனுயிரோடுபிரிந்தனரால்
உழையேயவரொவ்வழையாருளையாய். (௫௫)

பயில்பாடகமெல்லடிபஞ்சணையார்
செயிரோதுமிலாரொடுநீருதியோ

அபிராமனுடனேயகல்வாயலையோ
உயிர்போகெடுவாயுறவோரிலையோ. (௫௬)

ஒன்றைப்பகராய்குழலுக்குடையாய்
வன்றைப்புறுநீள்வயிரத்தினையே
கொன்றைக்கொடியாய்கொணர்கின்றிலையே.
என்றைக்குறவாகவிருந்தனையே. (௫௭)

வேறு.

குராவரும்பனையகூர்வாளெயிற்றுவெங்குருளைநாகம்
விராவுவெங்கடுவிற்கொல்லுமெல்லிணர்முல்லையென்றும்
உராவருந்துயரமூட்டியோய்வறமலைவதொன்றோ
இராவணன்கோபத்திற்கவிந்திரகோபமென்னோ. (௫௮)

ஒடைவாணுதலினனையொளிக்கலாமுபாயமுன்னி
நாடிமாரீசனுமோராடகதவ்வியானார்
வாடையாக்கூற்றினுருமுருவினைமாற்றிவந்தார்
கேடுசூழ்வார்க்குவேண்டுமுருக்கொளக்கிடந்தவன்றே. (௫௯)

அருவினையரக்கனொன்னவந்தரமதனில்யாவும்
வெருவாமுழங்குகின்றமேகமேயின்னுகின்றாய்
தருவனென்றிரங்கினாயோதாமரைமறந்தவையல்
உருவினைக்காட்டிக்காட்டியொளிக்கின்றாயொளிக்கின்றாயால். ()

உண்ணிறைந்துயிர்க்கும்வெம்மையுயிர்சுடவலையுமுள்ளம்
புண்ணுறவாளிதூர்த்தல்பழுதினிப்போதிமார
என்னுறுமகல்விபுள்ளத்திளையவனின்னேயுன்னைக்
கண்ணுறுமாயிற்பின்னையாரவன்சீற்றங்காப்பார். (௬௧)

வில்லும்வெங்கணையும்வீரர்வெஞ்சமத்தஞ்சினார்மேற்
புல்லுவவல்லவாற்றல்போற்றலர்குறித்தல்போலாம்
அல்லுநன்பகலுநிங்காயனங்கநீயருளிற்றீர்ந்தாய்
செல்லுமென்றெளிவந்தோமேற்செலுத்தலுஞ்சீர்மைத்தாமோ

என்னவித்தகையபன்னிமீட்டழிந்திரங்குகின்ற
தன்னையொப்பானைநோக்கித்தகையழிந்தயர்ந்ததம்பி
நின்னையித்தகையையாகநினைந்தனைநெடியோயென்னச்
செல்லியிற்சுமந்தகையன்றேற்றுவான்செப்பலுற்றான். (௬௩)

வேறு.

காலநீளிதகாருமாரியும்வந்ததென்றகவற்சியோ
நீலமேனியரக்கர்வீரநினைந்தழுங்கியநேர்மையோ
வாலிசேனைமடந்தைவைகிடநாடவாரலதாமையோ
சாலுநல்லுணர்கேள்விவீரதளர்ந்ததென்னைதவத்தினாய். (௬௪)

மறைதுளங்கினுமதிதுளங்கினுமவ்வாறுமாழ்கடல்வையமும்
நிறைதுளங்கினுநிலைதுளங்குறுநின்னைமாநின்வயினிற்குமோ
பிறைதுளங்குவவனையபேரொயிறுடையபேதையர்பெருமையின்
இறைதுளங்குறுபுருவமென்சிலையிடைதுளங்குறவிசையுமோ. )

அனுமனென்பவனளவறிந்தனமறிஞணங்கதனுநியோர்
எனையரொன்பதொரிறுதிகண்டிலமெழுபதென்றெணுமியல்பினார்
வினையின்வெந்துயர்விரவுதிங்களுநம்விரைவுசெல்றனவெளி தினி
தனுவெனுந்திருநதலியந்தனள்சரதம்வன்றுயர்தவிர்தியே. [ன்

மறையறிந்தவர்வரவுகண்டுமைவலியும்வஞ்சகர்வழியொடும்
குறையவெல்திடர்களைவனென்றனைகுறைமுடிந்ததுவிதியினால்
இறைவவங்கவரிறுதிகண்டினிதிசைபுனைந்திமையவர்கடாம்
உறையுமும்பருமுதவிநின்றருளுணர்வழித்திடலுறுதியோ. ()

காதுகொற்றநினக்கலாதுபிறர்க்கெவ்வாறுகலக்குமோ
வேதனைக்கிடமாதல்வீரமதன்றுபேதைமையாமரோ
போதுபிற்படலுண்டிதோர்பொருளன்றியின்றுபுணர்த்தியேல்
யாதுனக்கியலாததெந்தைவருந்தலென்னவியம்பினான். (௬௮)

சொற்றதம்பியுணர்க்குணர்ந்துயிர்சோர்வொடுங்கியதொல்லையா
இற்றவின்னலியக்கமெய்திடவைகல்பற்பலவேகமேல் [ன்
உற்றுநின்றவினைக்கொடும்பிணியொன்றின்மேலுட னொன்றுறா
மற்றும்வெம்பிணிபற்றினாலெனவந்தெதிர்ந்ததுமாரியே. [ய்

வேறு.

நிறைந்தனநெடுங்குளநெருங்கினதரங்கம்
குறைந்தனகருங்குயில்குளிர்ந்தவுயர்குன்றம்
மறைந்தனதடந்திசைவருந்தினர்பிரிந்தார்
உறைந்தனவகன்றிலுடனன்றியுயிரொன்றி. (௭0)

பாசிழைமடந்தையர்பழிப்பிலகலல்குற்
றூசுதொடலுஞ்சனிவெம்மைதொடர்வுற்றே
வீசியதுவாடையெரிவெந்தவிரிபுண்வீழ்
ஆசிலயில்வாளியெனவாசைபுரிவார்மேல். (௭௧)

வேலைநிறைவுற்றனவெயிற்கதிர்வெதும்பும்
சீலமழிவுற்றபுனலுற்றுருவுசெப்பிற்
காலமறிவுற்றுணர்தல்கன்னலளவல்லால்
மாலைபகலுற்றதெனவோர்வரிதுமாதோ. (௭௨)

நெற்கிழியநெற்பொதிதிரம்பினதிரம்பாச்
சொற்கிழியநற்கிளிகடோகையவர்தூய்மென்

பற்கிழிமணிப்படர்திரைப்பரதர்முன்றிற்
பொற்கிழிவிரித்தெனசினைப்பொதுள்வபுன்னை. (எ௩

திறங்கருகுகங்குல்பகனின்றதிலைநீங்கா
அறங்கருதுசிந்தைமுனியந்தணரினொலிப்
பிறங்கருநெடுந்துளிபடப்பெயர்வில்குன்றின்
உறங்கலில்விலங்கலிலநின்றவுயர்வேழம். (எ௪)

சந்தினிடையிற்படலைவேதிகைதடந்தோ
றந்தியிடகிற்புகைநுழைந்தகுளிரன்னம்
மந்திதுயிலுற்றமுழைவன்கடுவனங்கத்
திந்தியமவித்ததனியோகரிலிருத்த. (எ௫)

ஆசில்சுனைவாலருவியாயிழையரைம்பால்
வாசமணநாறலிலவானமணிவன்கால்
ஊசல்வறிதானவிதவொண்மணிகள்விண்மேல்
வீசலிலவானினெடுமாரிதுளிவீச. (எ௬)

கருந்தகையதண்சினையகைதைமடல்காலத்
தருந்தகையபோதுசினையிற்புடைதயங்கப்
பெருந்தகையபொற்சிறையொடுக்கியுடல்பேரா
திருந்தகுருகின்பெடைபிரிந்தவர்களென்ன. (எ௭)

பதங்கமுழவொத்தவிசைபன்ஞிமிறுபன்ன
விதங்களினடந்திடுவிகற்பவழிமேவும்
மதங்கியனையொத்தமயில்வைகுமரமூலத்
தொதுங்கினவுழைக்குலமழைக்குலமுழக்க. (எ௮)

விளக்கொளியகிற்புகை விழுங்கமளிமென்கொம்
பிளக்குமிடைமங்கையருமைந்தர்களுமேறத்
தளத்தருமலர்த்தவிசிகந்துநகுசந்தின்
துளைத்தயிலுவந்துதுயில்வுற்றகுளிர்தும்பி. (எ௯)

தாமரைமலர்த்தவிசிகந்துதகையன்னம்
மாமரநிரைத்தொகுபொதும்பருழைவைகத்
தேமரனடுக்கிதணிடைச்செறிகுரம்பைத்
தாமருவெயிற்றியரொடன்பர்துயில்வுற்றார். (அ0)

வள்ளிபுடைசுற்றியுயர்சிற்றிலைமரந்தோ
றெள்ளருமறிக்குருளொடண்டர்களிருந்தார்
கள்ளரினொளித்துழ னெடுங்கழுதொடுங்கி
முள்ளெயிறுதின்றுபசிமுழ்கிடவிருந்த. (அக)

சரம்பயினெடுந் துளிதிமிர்ந்தபுயல்சாரல்
உரம்பெயர்வில்வன்கரிகரந்துறவொடுங்கா
வரம்பறனெடும்பிரசம்வைகல்பலவைகும்
முரம்பினினிரம்பலமுழைஞ்சிடைநுழைந்த. (அஉ)

இத்தகையமாரியிடைதுன்னியிருளெய்த
மைத்தகுமணிக்குழன்மலர்ச்சனகன்மான்மேல்
உய்த்தவுணர்வித்தினநெருப்பிடையுயிர்ப்பான்
வித்தகனிலக்குவனைமுன்னினன்விளம்பும். (அ௩)

வேறு.

மழைக்கருமின்னெயிற்றரக்கன்வஞ்சனை
இழைப்பருங்கொங்கையுமெதிரவுற்றிலள்
உழைத்தனளுலந்துயிருலக்குமொன்றினும்
பிழைப்பரிதெனக்குமிதென்னபெற்றியோ. (அ௪)

தூநிறச்சுடுசரந்தூணிதூங்கிட
வானுறப்பிறங்கியவயிரத்தோளொடும்
யானுறக்கடவதேயிதுவுமிந்நில
வேனிறத்துற்றதொத்துழியும்வீகிலேன். (அ௫)

தெரிகணைமலரொடுந்திறந்தநெஞ்சொடும்
அரியவன்றுயரொடும்யானும்வைகுவேன்
எரியுமின்மினிமணிவிளக்கினில்றுணைக்
குரீஇயினம்பெடையொடுந்துயில்வகூட்டினுள். (அ௬)

வானகமின்னினுமழைமுழங்கினும்
யானகமெலிகுவனெயிற்றராவெனக்
கானகம்புகுந்துநான்முடித்தகாரியம்
மேனகுங்கீழ்நகுமினியென்வேண்டுமோ. (அ௭)

மறந்திருந்துய்கிலேன்மாரியீதெனின்
இறந்துவிண்சேர்வதுசரதமிப்பழி
பிறந்துபின்தீர்வனோபின்னரன்னது
துறந்துசென்றுறுவனோதுயரின்வைகுவேன். (அ௮)

ஈண்டுநின்றரக்கர்தம்மிருக்கையாமினிக்
காண்டலிற்பற்பலகாலங்காண்டுமால்
வேண்டுவதன்றிதுவீரநோய்தெற
மாண்டனனென்பதுமாட்சிப்பாலதாம். (அ௯)

செப்புருக்கனையவிம்மாரிச்சீகரம்
வெப்புறப்புரஞ்சுடவெந்துவீவனே

அப்புருக்கொண்டவாணெடுங்கணாயிழை
துப்புருக்குமுதவாய்நுகர்ந்துதுய்த்தயான். (௬௦)

நெய்யடைதீயெதிர்நிறுவிநிற்கவள்
கையடையென்றவச்சனகன்கட்டுரை
பொய்யடையாக்கியபொறியிலேனொடு
மெய்யடையாதினிவிளிதனன்றரோ. (௬௧)

தேற்றுவாய்நீயுளையாகத்தேறிநின்
றாற்றமேவுறுதுணையாகவாய்வினை
தோற்றுவாளல்லளித்துன்பமாரினி
மாற்றுவார்துயர்க்கொருவரம்புண்டாகுமோ. (௬௨)

விட்டபோர்வாளிகள்விரிஞ்சன்விண்ணையும்
சுட்டபோதிமையவர்முதலதொல்லையோர்
பட்டபோதுலகமுமுயிரும்பற்றறக்
கட்டபோதல்லதுமயிலைக்காண்குமோ. (௬௩)

தருமமென்றொருபொருடன்னையஞ்சியான்
தெருமருகின்றதுசெறுநர்தேவரோ
டருமையின்வித்தனொன்றுமஃதலால்
உருமெனவொலிபடுமுரவிலோயென்றான். (௬௪)

இளவலுமுனைசெய்வானென்றுநாளினும்
உளவலகூதிருமிறுதியுற்றதாற்
களவுசெய்தவருறைகாணுங்காலமீ
தளவியலாகியதாணையாழியாய். (௬௫)

தினைசெயத்தின்கடலமிர்தஞ்செங்கணான்
உலைசெயத்தரினுமத்தொழிலுவந்திலன்
வளைமுதற்கலப்பைகண்மாடுநாட்டித்தன்
குளைமலர்த்தடக்கையாற்கடைந்துகொண்டனன் ()

மனத்தினிலுலகெலாம்வகுத்துவாய்ப்பெயும்
நினைப்பினனாயினுநேமியோனெடும்
எனைப்பலபடைக்கலமேந்தியாயும்
வினைப்பெருஞ்சூட்சியிற்பொருதுவெல்லுமால். ()

கண்ணுடைநுதலினன்கணிச்சிவானவன்
விண்ணிடைப்புரஞ்சுடவெகுண்டமேலைநாள்
எண்ணியசூழ்ச்சியுமீட்டிக்கொண்டவும்
அண்ணலேயொருவராலறியற்பாலதோ. (௬௮)

ஆகுநர்யாரையுந்துணைவராக்கிப்பின்
ஏகுறுநாளிடையெய்தியெண்ணுவ
சேகறப்பல்முறைதெருட்டிச்செய்தபின்
வாகையென்றொருபொருள்வழுவற்பாலதோ. (௯௯)

அறத்துறைதிறம்பினரரக்கராற்றலா
மறத்துறைநமக்கெனவலிக்கும்வன்மையோர்
திறத்துறைநன்னெறிதிறம்பலுண்டெனில்
புறத்தினியார்திறம்புகழும்வாகையும். (௧௦௦)

பைந்தொடிக்கிடர்களைபருவம்பையவே
வந்தடுத்துளதினிவருத்தநீங்குவாய்
அந்தணர்க்காமறமரக்கர்க்காகுமோ
சுந்தரத்தனுவலாய்சொல்லுநீயென்றான். (௧௦௧)

உறுதியஃதேயெனவுணர்ந்தவூழியான்
இறுதியுண்டேகொலிம்மாரிக்கென்பதோர்
தெறுதுயருழன்றனன்றேயத்தேய்வுசென்
றறுதியையடைந்ததப்பருவமாண்டுபோய். (௧௦௨)

மள்கலிற்பெருங்கொடைமருவிமன்னுளோர்
உள்கியபொருளெலாமுதவியற்றபோ
தெள்கலிலிரவலர்க்கீவதின்மையால்
வெள்கியமாந்தரின்வெளுத்தமேகமே. (௧௦௩)

தீவினைநல்வினையென்னத்தேற்றிய
பேர்வினைப்பொருடனையறிந்துபெற்றதோர்
ஆய்வினைமெய்யுணர்வணுகவாசறும்
மாயையின்மாய்ந்ததுமாரிப்பேரிருள். (௧௦௪)

மூளமர்தொலைவுறமுரசவிந்தபோற்
கோளமைகொண்முகில்குமுறலோவின
நீளடுகணையெனத்துளியுநீங்கின
வாளுறையுற்றெனமறைந்தமின்னெலாம். (௧௦௫)

தடுத்ததாணெடுந்தடங்கிரிகடாழ்வரை
அடுத்தநீரொழிந்தனவருவிதூங்கின
எடுத்தநூலுத்தரீயத்தோடெய்திநின்
றுடுத்தவானிறத்துகிலொழிந்தபோலுமே. (௧௦௬)

மேகமாமலைகளின்புறத்துவீதலால்
மாகயாறியாவையும்வாரியற்றன

வாகையாற்றகவிழந்தழுவினல்பொருள்
போகவாறெழுகலான்செல்வம்போலவே. (க0எ)

கடந்திறந்தெழுகளிறனையகார்முகில்
இடந்திறந்தேகலிற்பொலிந்தழிந்துவும்
நடந்திறநவில்வுறுதங்கைமார்முகம்
படந்திறந்தருவலிற்பொலியும்பான்மைபோல். (க0அ)

பாசிழைமடந்தையர்பகட்டுவெம்முலை
பூசியசந்தனப்புழுகுகுங்குமம்
மூசினமுயங்குமேசெறிழியமொண்டுற
வீசினநறும்பொடிவிண்டுவாடையே. (க0கூ)

மன்னவன்றலைமகன்வருத்தமாற்றுவான்
அந்நெறிப்பருவம்வந்தணுகிற்றுதலாற்
பொன்னினைநாடியபோதுமென்பபோல்
அன்னமுந்திசைதிசையகன்றவின்னின்வாய். (கக0)

தஞ்சிறையொடுக்கினதழுவுமின்னல
நெஞ்சுறுபயனிலநினைப்புநீண்டன
மஞ்சுறுநெடுமழைபிரிந்தமாமயில்
அஞ்சினமிதலைநாட்டன்னமென்னவே. (ககக)

வஞ்சனைதீவினைமறந்தமாதவர்
நெஞ்செனத்தெளிந்தனநீரநீர்தொறும்
பஞ்செனச்சிவக்குமென்பாதப்பேதையர்
அஞ்சனக்கண்ணெனப்பிறழ்ந்தவாடன்மீன். (ககஉ)

ஊடியமடந்தையர்வதனமொத்தன
தாடொகமலர்ந்தனமுதிர்ந்ததாமரை
கூடினர்துவரிதழ்க்கோலங்கொண்டன
சேடுறுநறுமுகைவிரிந்தசெங்கிடை. (ககங)

கல்வியிற்றிகழ்கணக்காயர்கம்பலை
பல்விதச்சிறுவொனப்பகர்வபல்லரி
செல்விடத்தல்லதொன்றுணாத்தல்செய்கலா
தல்லிவாளரினவிந்தநாவெலாம். (ககச)

செறிபுனற்பூந்துகிற்றிரைக்கையாற்றிரைத்
துறுதுணைக்கான்மடுத்தோடியோதநீர்
எறுழ்வலிக்கணவனையெய்தியாறெலாம்
முறுவலிக்கின்றனபோன்றமுத்தெலாம். (ககரு)




சொல்லிறைகேள்வியிற்றொடாமைமாந்தரின்
இன்னிறப்பசலையுற்றிருந்தமாதரின்
நன்னிறம்பயப்பயநீங்கித்தந்நிறம்
பொன்னிறம்பொருந்தினபூகத்தாறெலாம். (௧௧௬)

பயின்றுடல்குளிர்ப்பவும்பழனநீத்தவண்
இயன்றனவிளவெயிலேய்ந்தமெய்யன
வயின்றொறும்வயின்றொறுமடித்தவாயன
துயின்றனவிடங்கர்மாதடங்கடோறுமே. (௧௧௭)

கொஞ்சுறுங்கிளிநெடுங்குதலைகூடின
அஞ்சிறையறுபதமளகமேவொளிய
எஞ்சலில்குழையனவிடைநுடங்குவ
வஞ்சிகள்பொலிந்தனமகளிர்மாலைபோல். (௧௧௮)

அளித்தனமுத்தினந்தோற்கமானனார்
இளிங்கெதிர்விழிக்கலமென்றுவெள்கியே
ஒளித்தனவாமெனவொடுங்குநீரிடைக்
குளித்தனவானிறக்கூனனந்தெலாம். (௧௧௯)

மழைபடப்பொதுளியமருதத்தாமரைத்
தழைபடப்பேரிலைப்புரையிற்றங்குவ
விழைபடுபெடையொடுமெள்ளநள்ளிகள்
புழையடுத்தொடுங்கினவச்சைமாக்கள்போல். (௧௨௦)

கார்காலப்படலமுற்றிற்று ஆ படலம்-௯ இ திருவிருத்தம்-௫௭௦

## கிட்கிந்தைப்படலம்.

அன்னகாலமகலுமளவினில்
முன்னைவீரனிளவலைமொய்ம்பினோய்
சொன்னவெல்லையினூங்குமத்தூங்கிய
மன்னன்வந்திலனென்செய்தவாறரோ. (௧)

பெறலருந்திருப்பெற்றுதவிப்பெருந்
திறநினைந்திலன்சீர்மையிற்றீர்ந்தனன்
அறமறந்தனனன்புகிடக்கநம்
மறனறிந்திலன்வாழ்வின்மயங்கினான். (௨)

நன்றிகொன்றருநட்பினைநாரறுத்
தொன்றுமெய்ம்மைசிதைத்துரைபொய்த்துளாற்
கொன்றுநீக்குதல்குற்றத்தினீங்குமால்
சென்றுமற்றவன்சிந்தையைத்தேர்குவாய் (௩)

வெம்புண்டகாவிண்டபுகவேரறத்
தீம்பர்நல்லறஞ்செய்யவெடுத்தவிற்
கொம்புமுண்டருங்கூற்றமுமுண்டுக்கள்
அம்புமுண்டென்றுசொல்லுநம்மானையே. (௪)

நஞ்சமன்னவரைநலிந்தாலது
வஞ்சமன்றுமனுவழக்காதலால்
அஞ்சிலைம்பதிலொன்றறியாதவன்
நெஞ்சினின்றுநிலாவநிறுத்துவாய். (௫)

ஊருமாறுமாசுறுசுற்றமும்
நீருமாறுமின்பறுநேர்ந்தநாள்
வாரும்வாரலிராமெனில்வானரப்
பேருமாறுமெனும்பொருள்பேசுவாய். (௬)

இன்றுநாடுநமிங்கிவர்க்கும்வலி
துன்னினாரெனத்துணிந்தானெனில்
உன்னைவெல்லவுலகொருமூன்றினும்
இன்னலாற்பிறரின்மைநிகழ்த்துவாய். (௭)

நீதியாதிநிகழ்த்திலைநின்றது
வேதியாதபொழுதுவெகுண்டவன்
சாதியாதவர்சொற்றரத்தக்கனே
போதியாதியென்றுன்புகழ்ப்பூணினான். (௮)

ஆணையாடியடிதொழுதாண்டிறை
பாணியாதுபடர்வெரிந்பாழ்படாத்
தூணிபூட்டித்தொடுசிலைதொட்டருஞ்
சேணினீங்கினலசிந்தையினீங்கலான். (௯)

மாறுநிற்றமராறுமலைகளும்
நீறுசென்றுநெடுநெறிநீங்கிட
வேறுசென்றனன்மென்மையனாயினும்
ஆறுசென்றிலனாணையினேகுவான். (௧௦)

விண்ணுறத்தொடர்மேருவின்சீர்வரை
மண்ணுறப்புக்கழுந்தினமாதிரம்
கண்ணுறத்தெரிவுற்றதுகட்செவி
உண்ணிறக்கழற்சேவடியூன்றலால். (௧௧)

வெம்பங்கானிடைப்போகின்றவேகத்தால்
உம்பர்தோயுமராமரத்தூடுசெல்

அப்பிற்சென்றனனன்றடல்வாலிதன்
தம்பிமேற்செலுமானவற்றம்பியே. (௧௨)

மாடுவென்றியொர்மாதிரயானையின்
சேடுசென்றுசெடிலொருதிக்கின்மா
நாடுகின்றதுநன்னியகால்பிடித்
தோடுகின்றதுமொத்துளனுயிரான். (௧௩)

உருக்கொளொண்கிரியொன்றினின்றொன்றினைப்
பொருக்கவெய்தினன்பொன்னொளிர்மேனியான்
அருக்கன்மாவுதயத்தினின்றத்தமாய்
பருப்பதத்தினையெய்தியபண்புபோல். (௧௪)

தன்றுணைத்தமயன்றனிவாளியிற்
சென்றுசேணுயர்கிட்கிந்தைசேர்ந்தவன்
குன்றினின்றொருகுன்றினிற்குப்புறும்
பொன்றுளங்குளைச்சீயமும்போன்றனன். (௧௫)

கண்டவானரர்காலனைக்காண்டல்போல்
மண்டியோடினர்வாலிமகற்கையா
கொண்டசீற்றத்திளையோன்குறுகினான்
சண்டவேகத்தினுலென்றுசாற்றலும். (௧௬)

அன்னதோன்றலுமாண்டொழிலான்வர
வின்னதென்றறிவான்மருங்கெய்தினான்
மன்னன்மைந்தன்மனக்கருத்தட்கொளாப்
பொன்னின்வார்கழற்றுதையிற்போயினான். (௧௭)

நளனியற்றியநாயகக்கோயிலுள்
தளமலர்த்தகட்பள்ளியிற்றாழ்குழல்
இளமுலைச்சியரோந்தடிதைவர
விளைதுயிற்குவிருந்துவிரும்புவான். (௧௮)

தெள்ளியோருதவப்பெருஞ்செல்வமாம்
கள்ளினலதிகங்களித்தான்கதிர்ப்
புள்ளிமாநெடும்பொன்வரைபுக்கதோர்
வெள்ளிமால்வரையென்னவிளங்குவான். (௧௯)

சிந்துவாரத்தருநறைதேக்ககில்
சந்தமாமயிற்சாயலர்தாழ்குழற்
கந்தமாமலர்க்காடுகடாவிய
மந்தமாருதம்வந்துறவைகுவான். (௨௦)

சித்தியாதின்றசெங்கிடைவாய்ச்சியர்
முத்தவாணகைமுள்ளெயிற்றாறுதேன்
பித்தமாலும்பிறவும்பெருக்கலால்
மத்தவாரணமென்னமயங்கினான். (உக)

மகுடகுண்டலமேமுதன்மண்டலத்
தருநெடுஞ்சுடர்க்கற்றையுலாவலாற்
பகலவன்சுடர்பாய்பனிமால்வரை
நகமலர்ந்துபொலிந்துதயங்குவான். (உஉ)

கிடந்தனன்கிடந்தானைக்கிடைத்தரு
நடங்கைகூப்பினன்றானாமுன்றாட்டந்த
மடங்கல்வீரனம்மாற்றம்விளம்புவான்
றொடங்கினனவனைத்துயினீக்குவான். (உங)

எந்தைகேளய்விராமற்கிளையவன்
சிந்தையுண்ணெடுஞ்சீற்றத்திருமுகந்
தந்தளிப்பத்தடுப்பரும்வேகத்தான்
வந்தனனுன்மனக்கருத்தியாதென்றான். (உச)

இனையமாற்றமிசைத்தனனென்பதோர்
நினைவிலானெடுஞ்செல்வநெருக்கவும்
நனைநறுந்தேளிநஞ்சுமயக்கவும்
நனையுணர்ந்திலன்மெல்லணைதங்கினான். (உரு)

ஆதலாலவ்வரசிளங்கோளரி
யாதுமுன்னின்றியற்றுவதின்மையால்
கோதில்சிந்தையனும்மனைக்கூவுவான்
போதமேயினன்போதகமேயனான். (உசா)

மந்திரத்தனிமாருதிதன்னொடும்
வெந்திறற்படைவீரர்விராய்வர
அந்தரத்தின்வந்தன்னைதன்கோயிலை
இந்திரற்குமகன்மகனெய்தினான். (உஎ)

எய்திமேற்செயத்தக்கதென்னென்றலும்
செய்திர்செய்தற்கருநெடுந்தீயன
நொய்திலன்னவைநீக்கவுநோக்குதிர்
உய்திர்போலுமுதவிகொன்றீரெனா. (உஅ)

மீட்டுமொன்றுவிளம்புகின்றான்படை
கூட்டுமென்றுமைக்கொற்றவல்கூறிய

நாட்டிறம்பினுந்நாட்டிறம்பும்மெனக்
கேட்டிவீரினிக்காண்டிர்கிடைத்திரால். (௪௯)

வாலியாருயிர்காலனும்வாங்கவிற்
கோலிவாலியசெல்வங்கொடுத்தவர்
போலுமாலும்புறத்திருப்பாரிது
சாலுமாலுங்கடன்மையினோர்க்கெலாம். (௫0)

தேவிநீங்கவத்தேவரிற்சீரியன்
ஆவிநீங்கினன்போல்யர்வானது
பாவியாருபருகுநீர்போலுநம்
காவிதாண்மலர்க்கண்ணியர்காதனீர். (௫௧)

திறம்பினீர்மெய்சிதைத்தீருதவியை
நிறம்பொலீர்ங்கடவினைநேர்ந்ததால்
மறஞ்செய்வானுறின்மானுநிர்மற்றினிப்
புறஞ்செய்தாவதென்னென்கின்றபோதின்வாய் (௫௨

கோளுறுத்தற்கரியகுரக்கினம்
நீளெழுத்தொடர்நெடுவாயிலைத்
தாளுறுத்தித்தடவரைதந்தனம்
மூளுறுத்தியடுக்கினமொய்ம்பினுல். (௫௩)

சிக்குறக்கடைசேமித்தசெய்கைய
தொக்குறுத்தமரத்தருவன்றின
புக்குறுக்கிப்புடைத்துமெனப்புறம்
மிக்கிறுத்தனவெற்புமிறுத்தன. (௫௪)

காக்கவோகருத்தென்றுகதத்தினுல்
பூக்கமூரற்புரவலர்ப்புங்கவன்
தாக்கணங்குறைதாமரைத்தாளினுல்
நூக்கினனக்கதவினைநொய்தினில். (௫௫)

காவன்மாமதிலுங்கதவுங்கடி
மேவும்வாயிலடுக்கியவெற்பொடும்
தேவுசேவடிதீண்டலுந்திண்டிறற்
பாவமாமெனப்பற்றழிந்திற்றவால். (௫௬)

நொய்திநேன்கதவும்முதுவாயிலும்
செய்தகன்மதிலுந்திசையோசனை
ஐயிரண்டினளவடியற்றுக
வெய்துநின்றகுரக்குவெருக்கொள. (௫௭)

பரியமாமதிலும்படர்வாயிலும்
சரியவீழ்ந்தவிடிப்பின்முடித்தலை
நெரியநெஞ்சுபிளக்கநெடுந்திசை
இரியலுற்றனவிற்றிலவின்னுயிர். (௩௮)

பகரவேயுமரிதுபரித்தெழு
புகரில்வானரமஞ்சியபூசலால்
சிகரமால்வரைசென்றுதிரிந்துழி
மகரவேலையையொத்ததுமாநகர். (௩௯)

வானரங்கள்வெருவிமலையொரீஇக்
கானொருங்குபடரவக்கார்வரை
மீநெருங்கியவானகமீனெலாம்
போனபின்பொலிவற்றதுபோன்றதே. (௪0)

அன்னகாலையிலாண்டகையாழியான்
பொன்னினன்னகர்வீதியிற்புக்கனன்
சொன்னதாரையைச்சுற்றினர்நின்றவர்
என்னசெய்குவதெய்தினனென்றனர். (௪௧)

அனையனுள்ளமுமாய்வளையாயலர்
மனையின்வாயில்வழியுமேமாற்றினால்
நினையும்வீரனந்நீணெறிநோக்கலன்
வினையமீதென்றனுமன்விளம்பினான். (௪௨)

நீரொலாமயனீங்குமினேர்ந்தியான்
வீரனுள்ளம்விளங்குவனென்றலும்
பேரநின்றனர்யாவரும்பேர்கலாத்
தாராசென்றனடார்குழலாரொடும். (௪௩)

உரைசெய்வானரவீரருவந்துறை
அரசர்வீதிகடந்தகன்கோயிலைப்
புரைசையானையன்னான்புகலோடுமவ்
விரைசெய்வார்குழற்றாரைவிலக்கினாள். (௪௪)

விலங்குமெல்லியல்வெண்ணகைவெண்மதி
இலங்குநுண்ணிடையேந்திளமென்முலைக்
குலங்கடோகைமகளிர்குழாத்தினால்
வலங்கொள்வீதிநெடுவழிமாற்றினாள். (௪௫)

வில்லும்வாளுமணிதொறுமின்னிட
மெல்லரிக்குரன்மேகலையார்த்தெழப்

பல்வகைப்புருவக்கொடிபம்பிட
வல்லியாயய்வலத்தினில்வந்ததே. (௪௬)

வேறு.

ஆர்க்குநூபுரங்கள்பேரியல்குலாந்தடந்தேர்சுற்றப்
போர்க்கண்வெம்புருவம்வில்லாமெல்லியர்வளைந்தபோது
பேர்க்கருஞ்சீற்றம்பேரமுகப்பெயர்ந்தொதுங்கிற்றல்லால்
பார்க்கவுமஞ்சினனப்பணையினுமுயர்ந்ததோளான். (௪௭)

தாமரைவதனஞ்சாய்த்துத்தனுநெடுந்தரையிலூன்றி
மாமியர்குழுவின்வந்தாளுமெனமைந்தனிற்பப்
பூமியிலணங்கனார்தம்பொதுவிடைப்புகுந்துபொற்றோள்
தாய்மனநெடுங்கட்டாரைநடுங்குவாளினையசொன்னாள். (௪௮)

அந்தமில்காலநோற்றவாற்றலுண்டாயினன்றி
இந்திரன்முதலினோராலெய்தலாமியல்பிற்றன்றே
மைந்தனின்பாதங்கொண்டெம்மனைவரப்பெற்றுவாழ்ந்தேம்
உய்ந்தனம்வினையுந்தீர்ந்தேமுறுதிவேறிதனினுண்டோ. (௪௯)

வெய்தினீவருதனோக்கிவெருவுறுஞ்சேனைவீர
செய்திதானுணர்கிலாதுதிருவுளந்தெரித்தியென்றாள்
ஐயநீயாழிவேந்தனடியிணைபிரிகலாதாய்
எய்தியதென்னையென்றாளிசையினுமினியசொல்லாள். (௫௦)

ஆர்கொலோவுரைசெய்தாரொன்றருள்வரச்சீற்றமங்கப்
பார்குலாமுழுவெண்டிங்கள்பகல்வந்தபடிவம்போலும்
ஏர்குலாமுகத்தினாளையிறைமுகமெடுத்துநோக்கித்
தார்குலாமலங்கன்மார்பன்றாயரைநினைந்துநைந்தான். (௫௧)

மங்கலவணியைநீக்கிமணியணிதுறந்துவாசக்
கொங்கலர்கோதைமாற்றிக்குங்குமஞ்சாந்தங்கோட்டாப்
பொங்குவெம்முலைகள்பூகக்கழுத்தொடுமறையப்போர்த்த
நங்கையைக்கண்டவள்ளனயனங்கள்பனிப்பநைந்தான். (௫௨)

இனையராமென்னையீன்றவிருவருமென்னவந்த
நினைவினனயர்ப்புச்சென்றநெஞ்சினனெடிதுநின்றான்
வினவினாட்கெதிரோர்மாற்றம்விளம்பவும்வேண்டுமென்றப்
புனைகுழலாட்குவந்தகாரியம்புகல்வதானான். (௫௩)

சேனையும்யானுந்தேடித்தேவியைத்தருவனென்று
மானவற்குரைத்தமாற்றமறந்தனனருக்கன்மைந்தன்
ஆனவனமைதிவல்லையறியெனவருளின்வந்தேன்
மேனிலையனையான்செய்கைவிளைந்தவாவிளையுமென்றான். (௫௪)

சீறுவாயல்லையயசிறியவர்தீமைசெய்தால்
ஆறுவாய்நீயலாய்மற்றுருளரயர்ந்தானல்லன்
வேறுவேறுலகமெங்குந்தூதரைவிடுத்தவெல்லை
ஊறுமாநோக்கித்தாழ்த்தானுதவிமாறுதவியுண்டோ. (ருரு)

ஆயிரங்கோடிதூதரரிக்கணமழைக்கவாணை
போயினர்புகுதநாளும்புகுந்ததுபுகல்புக்கோற்குத்
தாயினுநல்லநீரேதணிதிராற்றருமமஃதால்
தீயனசெய்யாராயின்யாவரோசெறுநராவார். (ருசு)

அடைந்தவர்க்கபயநீங்களருளியவளவிற்செல்வம் [றே
தொடர்ந்துறும்பணியிற்றீர்ந்தா லதுவும்வெந் தொழிலேயன்
மடந்தைதன்பொருட்டால்வந்தவாளமர்க்களத்துன்மாண்டு
கிடந்திலனென்னிற்பின்னுநிற்குமோகேண்மையம்மா. (ருஎ)

செம்மைசேருள்ளத்தீர்கள்செய்தபேருதவிநீரா
வெம்மைசேர்பகையுமாற்றியரசுவீற்றிருக்கவிட்டீர்
உம்மையேயிகழ்வனென்னிலெளிமையாயொழிவதொன்றே
இம்மையேவறுமையெய்தியிருமையுமிழப்பனன்றே. (ருஅ)

ஆண்டுபோர்வாலியாற்றன்மாற்றியதம்பொன்றன்றேல்
வேண்டுமோதுணைவர்நும்பால்வில்லினுமிக்கதுண்டோ
தேண்டுவார்த்தேடுகின்றீர்தேவியையதனைச்செவ்வே
பூண்டுநின்றுய்த்தற்பாலார்நுங்கழல்புகுந்துளோரோ. (ருகூ)

என்றவனுரைத்தமாற்றமியாவையுமினிதுகேட்டு
நன்றுணர்கேள்வியாளனருள்வரனுளுட்கொண்டான்
நின்றனனிற்றலோடுநீத்தனன்முனிவென்றன்னி
வன்றுணைவயிரத்திண்டோண்மாருதிமருங்குவந்தான். (சா0)

வந்தடிவணங்கிநின்றமாருதிவதனநோக்கி
அந்தமில்கேள்விநீயுமயாத்தனையாகுமன்றே
முந்தினசெய்கையென்றுன்முனிவினுமுளைக்குமன்பான்
எந்தைகேட்டருளுகென்னவியம்பினனியம்பவல்லான். (சாக)

சிதைவகல்காதற்றாயைத்தந்தையைக்குருவைத்தெய்வப்
பதவியந்தணரையாவைப்பாலரைப்பாவைமாரை
வதைபுரிகுநர்க்குமுண்டாமாற்றலாமாற்றன்மாயா
உதவிகொன்றார்க்கென்றேனுமொழிக்கலாமுபாயமுண்டோ. ()

ஐயநும்மோடுமெங்களரிகுலத்தரசனோடும்
மெய்யுறுகேண்மையாகமேலைநாள்விளைவதான

செய்லகயென்செய்கையன்றேவல்ன துசிதையுமாயின்
உய்வகையெவர்க்குமுண்டோவுணர்வுமாகுண்டதன்றே. (௬௩)

தேவருந்தவமுஞ்செய்யுநல்லறத்திறமுமற்றும்
யாவையுநீரோயென்பதென்வயிற்கிடந்ததெந்தாய்
ஆவதுமிற்கச்சேருமாறுண்டோவருளுண்டன்றேல்
மூவகையுலகுங்காக்குமொய்ம்பினீர்முனிவுண்டாறல். (௬௪)

மறந்திலன்கவியின்வேந்தன்வயப்படைவருவிப்பானாத்
திறந்திறமேவியன்னார்சேர்வதுபார்த்துத்தாழ்ந்தான்
அறந்துணைநமக்குத்தான்றன்வாய்மையையழிக்குமாயின்
பிறந்திலனன்றேயொன்றேநரகமும்பிழைப்பதன்றால். (௬௫)

உதவாமலொருவன்செய்தவுதவிக்குக்கைம்மாறாக
மதயானையனையமைந்தமற்றமுண்டாகவற்றே
சிதையாதசெருவிலன்றுன்முன்சென்றுசெறுநர்மார்பில்
உதையானேனுதையுண்டாவியுலையானேனுலகின்மன்றே. (௬௬)

ஈண்டினிநிற்றலென்பதினியதோரியல்பிற்றன்றால்
வேண்டலரறிவரோனுங்கேண்மைதீர்வினையிற்றுமால்
ஆண்டகையாளிமொய்ம்பினையநீயளித்தசெல்வம்
காண்டியானும்முன்வந்தகவிகுலக்கோறேனென்றான். (௬௭)

மாருதிமாற்றங்கேட்டமலைபுரைவயிரத்தோளான்
தீர்வினைசென்றுநின்றசீற்றத்தான்சிந்தைசெய்தான்
ஆரியனருளிற்றீர்ந்தாரல்லர்வந்தடுத்தசெல்வம்
பேரிதாகச்செய்தசிறுமையானென்னும்பெற்றி. (௬௮)

அனையதுகருதிப்பின்னரரிகுலத்தவனைநோக்கி
நினையொருமாற்றமின்னேநிகழ்த்துவதுளதுநின்பால்
இனையனவுரைத்தற்கேற்றவெண்ணுநீயிதனையென்று
வனைகழல்வயிரத்திண்டோண்மன்னிளங்குமரன்சொன்னான். ()

தேவியைக்குறித்துச்செற்றசீற்றமுமானத்தீயும்
ஆவியைக்குறித்துநின்றதையனையதனைக்கண்டேன்
கோவியற்றருமநீங்கக்கொடுமையோடுறவுகூடிப்
பாவியற்கேற்றசெய்கைகருதுவன்பழியும்பாரான். (௭௦)

ஆயினுமென்னைநானேயாற்றிநின்றுவியுற்று
நாயகன்றனையுந்தேற்றநாள்பலகழிந்ததன்றேல்
தீயுமிவ்வுலகமூன்றுந்தேவரும்வீவரொன்றே
வீயுநல்லறமும்போகாவிதியதுவிலக்கற்பாலார். (௭௧)

உன்னைக்கண்டுங்கோன்றன்னையுற்றிடத்துதவும்பெற்றி
என்னைக்கண்டனன்போற்கண்டந்நாளிடைநெடிதுவைகித்
தன்னைக்கொண்டிருந்தேதாழ்த்தானன்றெனிற்றனுவொன்றாலே
மின்னைக்கண்டனையாடன்னைநாடுதல்விலக்கற்பாற்றே. (எ௨)

ஒன்றுமோவானமன்றியுலகமும்பதினாலுள்ள
வென்றிமாக்கடலுமேழேழ்மலையுள்ளவென்னவேயாய்
நின்றதோரண்டத்துள்ளேயெனிலதுநெடியதொன்றோ
அன்றுநீர்சொன்னமாற்றந்தாழ்வித்ததருமமன்றால். (எ௩)

தாழ்வித்தீரல்லீர்பன்னாட்டருக்கியவரக்கர்தம்மை
வாழ்வித்தீரிமையோர்க்கின்னல்வருவித்தீர்மரபிற்றீராக்
கேள்வித்தீயாளர்தன்பங்கிளர்வித்தீர்பாவந்தன்னை
மூள்வித்தீர்முனியாதானைமுனிவித்தீர்முடிதியென்றான். (எ௪)

தோன்றலஃதுரைத்தலோடுமாருதிதொழுதுதொல்லை
ஆன்றநூலறிஞர்போனபொருண்மனத்தடைப்பாயல்லை
ஏன்றதுமுடியோமென்னினிறத்துயித்திறத்துக்கெல்லாம்
சான்றெனவறவோய்போந்துன்றன்முனைச்சார்தியென்றான். ()

மூன்றுநீசொல்விற்றன்றேமுயன்றதுமுயற்சிதானும்
இன்றுநீயிசைத்தசெய்வானியைந்தனமென்றுகூறி
அன்னதோரமைதியான்றனருள்சிறிதறியநோக்கிப்
பொன்னின்வார்சிலையிருனுமாருதியோடும்போனான். (எ௬)

அயில்விழிகுமுதச்செவ்வாய்சிலைநுதலன்னப்போக்கு
மயிலியற்கொடித்தோல்குன்மணிநகைதிணிவேய்மென்றோள்
குயின்மொழிகலசக்கொங்கைமின்னிடைகுமிழேர்மூக்குப்
புயலியற்கூந்தன்மாதர்குழாத்தொடுந்தாரைபோனாள். (எ௭)

வல்லமந்திரியரோடும்வாலிகாதலனுமைந்தன்
அல்லியங்கமலமன்னவடிபணிந்தச்சந்தீர்ந்தான்
வில்லியுமவனைநோக்கிவிரவினையென்வரவுவீர.
சொல்லுதிநுந்தைக்கென்றானன்றெனத்தொழுதுபோனான் (எ௮

போனபின்றூதகோயில்புக்கவன்பொலன்கொள்பாதம்
தானுறப்பற்றிமுற்றுந்தைவந்துதடக்கைவீர
மானவற்கிளையோன்வந்துன்வாசலின்புறத்தான்சீற்றம்
மீனுயர்வேலைமேலும்பெரிதுவிளைந்ததென்றான். (எ௯)

அறிவுற்றுமகளிர்வெள்ளமன்னவருமவனைப்பற்றிப்
பிறிவற்றமயக்கத்தான்முற்றுற்றதோர்பெற்றியோரான்

செறிபொற்றாரலங்கல்வீரசெய்திலங்குற்றநம்மைக்
கறுவுற்றபொருளுக்கென்னேகாரணங்கண்டதென்றான். (அ0)

இயைந்தநாளெல்லைநீசென்றெய்தலைசெல்வமெய்தி
வியந்தனையுதவிகொன்றாய்மெய்யிலையென்னவீங்கி
உயர்ந்ததுசீற்றமற்றதூற்றதுசெய்கைதானும்
நயந்தெரியனுமன்வேண்டநல்கினனம்மையினும். (அக)

வருகின்றவேகநோக்கிவானரவீரர்வானைப்
பொருகின்றநகரவாயிற்பொற்கதவடைத்துக்கார்க்குன்
றருகொன்றுமில்லாவண்ணம்வாங்கினரடுக்கிமற்றும்
தெரிகின்றசினத்தீபொங்கச்செருச்செய்வானமைந்துநின்றார்()

ஆண்டவையதனைநோக்கியம்மலர்க்கமலத்தாளில்
தீண்டினன்றீண்டாமுன்னந்தெற்கொடுவடக்குந்தெய்வ
நீண்டகன்மதிலுங்கொற்றவாயிலுநிலாத்தகுன்றும்
கீண்டனதகர்ந்துபின்னைப்பொடியொடுங்கெழீஇயவன்றே.(அ௩

அந்நிலைகண்டதிண்டோளரிகுலத்தனிகமம்மா
எந்நிலையுற்றதென்கேனியாண்டுபுக்கொளித்ததென்கேன்
இந்நிலைகண்டவன்னையேந்திழையாயத்தோடு
மின்னிலைவேலினானைவழியெதிர்விலக்கிநின்றாள். (அச)

மங்கையர்மேனிநோக்கான்மைந்தனுமனத்துவந்த
பொங்கியசீற்றம்பற்றிப்புகுந்திலன்பொருமிநின்றான்
நங்கையுமினிதுகூறிநாயகநடந்ததென்னே
எங்கள்பாலென்னச்சொன்னாளண்ணலுமினையசொன்னான்.(அரு

அதுபெரிதறிந்துவல்லையன்னவன்சீற்றமாற்றி
விதிமுறைமறந்தானல்லன்வெஞ்சினச்சேனைவெள்ளம்
கதுமெனக்கொணருந்தூதுகல்லதர்ச்செல்லவேவி
எதிர்முறையிருந்தானென்றாளிதுவிங்குப்புகுந்ததென்றான். ()

சொற்றலுமருக்கன்றோன்றல் சொல்லுவான்மண்ணின்விண்ணி
நிற்குரியார்களியாவரனையவர்சினத்திநேர்ந்தால் [ன்
விற்குரியாரித்தன்மைவெகுளியின்விளைவினெய்தின்
எற்குரையாதுநீரியற்றியதென்கொலென்றான். (அ௭)

உணர்த்தினேன்முன்னர்நீயதுணர்ந்திலையுணர்விற்றீர்ந்தாய்
புணர்ப்பதொன்றின்மைநோக்கிமாருதிக்குரைக்கப்போனேன்
இணர்த்தொகையீன்றபொற்றாரொறுழ்வலித்தடந்தோளெந்தாய்
கணத்திடையவனைநீயுங்காணுதல்கருமமென்றான். (அஅ)

உறவுண்டசித்தையானுமுனாசெய்வானொருவற்கின்னம்
பெறலுண்டேயவராலின்றியான்பெற்றபேருதவியுற்ற
திறலுண்டோவென்னிற்றீர்வானிருந்தபேரிடரையெல்லாம்
நறவுண்டுமறந்தேன்காணநானவைமைந்தவென்றான். (௮௯)

எயினவிநுவலான்மற்றேழைமைப்பாலதென்றே
தாயிவன்மனைவியென்னத்தெளிவன்றேற்றருமமென்னும்
தீவினையைத்திறென்றுமன்றியுந்திருக்குநீங்கா
மாயையின்மயங்குகின்றமயக்கின்மேன்மயக்கும்வைத்தாம். ()

தெளிந்துதீவினையைச்செற்றோர்பிறவியைத்தீர்வரென்ன
விளிந்திலாவுணர்விற்றோரும்வேதமும்விளம்பவேயும்
தெளிந்தனறபுமூவைநீக்கிநறவுண்டுதிகைகின்றேனால்
அளித்தகத்தெரியுந்தீயைநெய்யினாலவிக்கின்றாரின். (௯௧)

நல்லனத்தானுணர்த்திருந்தகையதுபிறவியென்ப
தென்னைத்தான்மறையுமற்றதுறைகளுமிசைத்தவெல்லாம்
முல்லைத்தான்றன்னையோராமுழுப்பிணியழுக்கின்மேலே
பின்னைத்தான்பெறுவதம்மாநறவுண்டுதிகைக்கும்பித்தோ. (௯௨)

அளித்தவராஞ்சநெஞ்சினடைந்தவாறிவுமழுங்கிக்
குளித்தவரின்பதுன்பங்குடைந்தவர்குடைந்தவேரி
ஒளித்தவருண்டுமீண்டிவ்வுலகெலாமுணரவோடிக்
களித்தவரெய்திநின்றகதியொன்றுகண்டதுண்டோ. (௯௩)

செற்றதும்பகைஞர்நட்டார்செய்தபேருதவிதானும்
கற்றதுங்கல்விகூடாகக்கண்டதுங்கலைவலாளர்
சொற்றதுமானம்வந்துதொடர்ந்ததும்படர்ந்ததுன்பம்
உற்றதுமுணராராயினுறுதிவேறிதனினுண்டோ. (௯௪)

வஞ்சமுங்களவும்பொய்யுமயக்கமுமரபில்கொட்பும்
தஞ்சமென்றோரைநீக்குந்தன்மையுங்களிப்புந்தாக்கும்
கஞ்சமெல்லணங்குந்தீருங்கள்ளினாலருந்தினாரை
நஞ்சமுங்கொல்வதல்லானரகினைநல்காதன்றே. (௯௫)

கேட்டனனறவாற்கேடுவருமெனக்கிடைத்தவச்சொல்
காட்டியதனுமன்னீதிக்கல்வியாற்கடந்ததல்லான்
மீட்டினிவுரைப்பதென்னேவினாவின்வந்தடைந்தவீரன்
மூட்டியவெகுளியானுமுடிவதற்கையமுண்டோ. (௯௬)

ஐயநானஞ்சினேனிந்நறவினினரியகேடு
கையினாலன்றியேயுங்கருதுதல்கருமமன்றால்

வெய்யதாமதுவையின்னம்விரும்பினேனென்னின்வீரன்
செய்யதாமரைகளன்னசேவடிசிதைக்கவென்றான். (கூஎ)

என்றுகொண்டியம்பியண்ணற் கெதிர்கொளற்கியைந்தவெல்லா
நன்றுகொண்டில்லனநீயேநணுகெனவவனையேவித் [ம்
தன்றுணைத்தேவிமாருந்தமரொடுந்தழுவத்தாறும்
நின்றனனெடியவாயிற்கடைத்தலைநிறைந்தசீரான். (கூஅ)

உரைத்தசெஞ்சாந்தும்பூவுஞ்சுண்ணமும்புகையுமூழின்
நிரைத்தபொற்குடமுந்தீபசாலமுநிகழ்ந்தமுத்தும்
குரைத்தெழுவிதானத்தோடுதொங்கலுங்கொடியுஞ்சங்கும்
இரைத்துமிழ்முரசுமுற்றுமியங்கினவீதியெல்லாம். (கூகூ)

தூயதின்பளிங்கிற்செய்தசுவர்களின்றலத்திற்சுற்றி
நாயகமணியிற்செய்தநனிநெடுந்தூணினுப்பண்
சாயைபுக்குறலாற்கண்டோரயர்வுறக்கைவிலோடும்
ஆயிரமைந்தர்வந்தாருளரெனப்பொலிந்ததவ்வூர். (க00)

அங்கதன்பெயர்த்தும்வந்தாண்டடியிணைதொழுதானைய
எங்கிருந்தாலுங்கோமானென்றலுமெதிர்கோளெண்ணி
மங்குலேய்கோயில்கொற்றக்கடைத்தலைமருங்குநின்றான்
சிங்கவேறனையவீரசெய்தவச்செல்வனென்றான். (க0க)

சுண்ணமுந்தூசும்வீசிச்சூடகத்தொடிக்கைமாதர்
கண்ணகன்கவரிக்கற்றைக்காலுறக்கலைவெண்டிங்கள்
விண்ணுறவளர்ந்ததென்னவெண்குடைவிளங்கவீர
வண்ணவிற்கரத்தான்முன்னர்கவிகுலத்தரசன்வந்தான். (க0உ)

அருக்கியமுதலவானவருச்சனைக்கமைந்தயாவும்
முருக்கிதழ்மகளிரேந்தமுரசினமுகிலினார்ப்ப
இருக்கினமுனிவரோதவிசைதிசையளப்பயாணர்
திருக்கிளர்செல்வநோக்கித்தேவருமருளச்சென்றான். (க0ங)

வெம்முலைமகளிர்வெள்ளமீனெனவிளங்கவிண்ணில்
சும்மைவான்மதியங்குன்றிற்றோன்றியதெனவுந்தோன்றிச்
செம்மலையெதிர்கோளெண்ணித்திருவொடுமலர்ந்தசெல்வன்
அம்மலையுதயஞ்செய்ததாதையுமனையனானான். (க0ச)

வேறு.

தோற்றியவரிகுலத்தரசைத்தோன்றலும்
ஏற்றெதிர்நோக்கினனெழுந்ததவ்வழிச்
சீற்றமங்கதுதனைத்தெளிந்தசிந்தையால்
ஆற்றினன்றருமத்தினமைதிபுன்னுவான். (க0ரு)

எழுவினுமலையினுமெழுந்ததோள்களால்
தழுவினரிருவருந்தழுவிநின்றயலார்
குழுவொடும்வீரர்தங்குழாத்தினோடும்புக்
கொழிவிலாப்பொற்குழாத்துறையுளெய்தினர். ()

அரியணையமைந்ததுகாட்டிடையயவிண்
டிருவெனக்கவிகுலத்தரசனேவலும்
திருமகடலைமகன்புல்லிற்சேரவெற்
குரியதோவிஃதெனமனத்தினுன்னுவான். (௧௦௭)

கல்லணைமனத்தினையுடக்கைகேசியால்
எல்லணைமணிமுடி துறந்தவெம்பிரான்
புல்லணைவைகயான்பொன்செய்பூந்தொடர்
மெல்லணைவைகவும்வேண்டுமேவென்றான். (௧௦௮)

என்றவனுரைத்தலுமிரவிகாதலன்
நின்றனன்விம்மினன்மலர்க்கணீருகக்
குன்றெனவுயர்ந்தவக்கோயிற்குட்டிம
வன்றலத்திருந்தனன்மறுவில்கோமகன். (௧௦௯)

மைந்தருமுதியருமகளிர்வெள்ளமும்
அந்தமிறேக்கினரழுதகண்ணினர்
இந்தியமவித்தவரெனவிருந்தனர்
நொந்தனர்தளர்ந்தனர்நுவல்வதோர்கிலார். (௧௧௦)

மஞ்சனவிதிமுறைமரபினாடியே
எஞ்சலினின்னுயிர்தருந்தின்யாமெலாம்
உஞ்சனமினியெனவரசுரைத்தலும்
அஞ்சனவள்ளலுக்கனுசன்கூறுமால். (௧௧௧)

வருத்தமும்பழியுமேவயிறுமீக்கொள
அருந்துமென்றலெமக்கினியதியாவதோர்
அருந்தியுண்டாயினுமவலத்தால்றழீஇக்
கருத்தினேவுற்றபினமிர்துங்கலக்குமால். (௧௧௨)

மூட்டியபழியெனுமுருங்குதீயவித்
தாட்டினைகங்கைநீரரசன்றேவியைக்
காட்டினையெனினெமைக்கடலினாரமிர்
தூட்டினையாற்பிறிதுயிருமில்லையால். (௧௧௩)

பச்சிலைகிழங்குகாய்பரமனுங்கிய
பிச்சிலேநுகர்வதுவேழுதாரென்று

நச்சிலேனச்சினேனுயினுபுண்ட
எச்சிலைநுகர்வதேனையயமில்லையால். (ககச)

அன்றியுமொன்றுளதையயானினிச்
சென்றனன்கொணர்ந்திடைதிருத்திறைலது
நன்றலைக்கோமகனுகர்வதாதலால்
இன்றிறைதாழ்த்தனுயினிதன்றுமென்றான். (ககரு)

வானரவேந்தனுமினிநின்னைவருதல்
மானவர்தலைமகனிடரின்வைகவே
யானதுகுராக்கினத்தெமர்கட்காமெனு
மேனிலையழிந்துயிர்விம்மினனரோ. (ககசு)

எழுந்தனன்பொருக்கெனவிரவிகான்முளை
விழுந்தகண்ணீரினன்வெருத்தவாழ்வினன்
அழிந்தயர்சிந்தையனனுமற்காண்டொன்று
மொழிந்தனன்வரன்முறைபோதன்முன்னுவான். ()

போயினதூதரிற்புகுதுஞ்சேனையை
நீயுடன்கொணருதிநெறிவலோயென
ஏயினனுமனையிருத்தியீண்டென
நாயகனிருந்துழிக்கடிதுநண்ணுவான். (ககஅ)

அங்கதனுடன்செலவரிகண்முன்செல
மங்கையருள்ளமும்வழியும்பின்செலச்
சங்கையிலிலக்குவற்றமுவித்தம்முனிற்
செங்கதிரோன்மகன்கடிதுசென்றனன். (ககசூ)

ஒன்பதினாயிரகோடியூகந்தன்
முன்செலப்பின்செலமருங்குமொய்ப்புற
மன்பெருங்கிளைஞருமருங்குசுற்றுற
மின்பொருபூணினன்செல்லும்வேலையில். (கஉ0)

கொடிவனமிடைந்தனகுமுறுபேரியின்
இடிவனமிடைந்தனபணிலமேங்கின
தடிவனமிடைந்தனதயங்குபூணொளி
பொடிவனமெழுந்தனவானம்போர்த்தவே. (கஉக)

பொன்னினின்முத்தினிற்புனைமென்றூசினின்
மின்னினமணியினிற்பளிங்கின்வெள்ளியிற்
பின்னினவிசும்பினும்பெரியபெட்புறத்
துன்னினசிவிகைவெண்கவிகைசுற்றின. (கஉஉ)

வீரனுக்கிளையவன்விரும்புசேவடி
பாரினிற்சேறலிற்பரிதிமைந்தனும்
தாரினிற்பொலன்கழுறழுங்கத்தாரணித்
தேரினிற்சென்றனன்சிவிகையின்செல. (௧௨௩)

எய்தினன்மானவனிருந்தமால்வரை
நொய்தினிற்சேனையின்பொழியநோன்கழல்
ஐயவிற்குமாரனுந்தாரனுமங்கதன்
கைதொடர்ந்தயல்செலக்காதன்முன்செல. (௧௨௪)

ஈண்ணியகணிப்பருஞ்செல்வக்காதல்விட்
டண்ணலையடிதொழவணையுமன்பினால்
நண்ணியகவிகுலத்தரசனாடொறும்
புண்ணியத்தொழுகறற்பாதன்போன்றனன். (௧௨௫)

பிரிவருந்தம்பியும்பிரியப்பேருல
கிறுதியிற்றானெனவிருந்தவேந்தலை
அறைமணித்தாரினோடாரம்பார்தொடச்
செறிமலர்ச்சேவடிமுடியிற்றீண்டினான். (௧௨௬)

தீண்டலுமார்பிடைத்திருவுநோவுற
நீண்டபொற்றடக்கையானெடிதுபுல்லினான்
மூண்டெழுவெகுளிபோயொளிப்பமுன்புபோல்
ஈண்டியகருணைதத்திருக்கையேவியே. (௧௨௭)

அயலினிதிருத்திநின்னரசுமாணையும்
இயல்பினினியைத்தவேவினிதின்வைகுமே
புயல்பொருதடக்கைநீபுரக்கும்பல்லுயிர்
வெயிலிலதேகுடையெனவிளம்பினான். (௧௨௮)

பொருளுடையவ்வுரைகேட்டபோழ்தவான்
உருளுடைத்தேரினான்புதல்வனாழியின்
இருளுடையுலகினுக்கிரவியன்னநின்
அருளுடையேற்கவையரியவோவென. (௧௨௯)

பின்னரும்விளம்புவான்பெருமையோய்நின
தின்னருளுதவியசெல்வமெய்தினேன்
மன்னவநின்பணிமறுத்துவைகியென்
புன்னிலைக்குரக்கியல்புதுக்கினேனென்றான். (௧௩௦)

பெருந்திசையனைத்தையும்பிசைந்துதேடினன்
தருந்தகையமைத்துமத்தன்மைசெய்திலேன்

திருந்திழைதிறத்தினுற்றெளிந்தசிந்தைநீ
வருந்தினையிருக்கயான்வாழ்வின்வைகினேன். (கருக)

இனையனயானுடையியல்புமெண்ணமும்
நினைவுமென்றலினினின்றநான்செயும்
வினையுநல்லாண்மையும்விளம்பவேண்டுமோ
வனைகழல்வரிசிலைவள்ளியோயென்றான். (கருஉ)

திருவுறைமார்பனுந்தீர்ந்ததேயும்வந்
தொருவருங்காலமுன்னுரிமையோருணா
தருவினைத்தாயைமிற்றாழ்வித்தாகுமோ
பரதனீயினையனபகரற்பாலையோ. (கருங)

ஆரியன்பின்னருமமைந்தநன்குணர்
யாருதியெவ்வழிமருவினுனென்ன
சூரியன்கான்முளைதோன்றுமாலயன்
நீரரும்பரவையினெடிதுசேனையான். (கருச)

கோடியோராயிரங்குறித்ததூதுவர்
ஓடினர்நெடும்படைகொணரவுற்றதால்
நாடரக்குறித்ததுமின்றுநாளையவ்
வாடலந்தானையோடவனுமெய்துமால். (கருரு)

ஒன்பதினாயிரகோடியுற்றது
நின்பெருஞ்சேனையந்நெடியசேனைக்கும்
நன்பெயரவதிநாணுளைநண்ணிய
பின்செயத்தக்கதும்பேசற்பாற்றென்றான். (கருசா)

விரும்பியவிராமனும்வீரநிற்கதோர்
அரும்பொருளாகுமோவமைதிநன்றெனுப்
பெரும்பகலிறந்ததுபெயர்திநின்படை
பொருந்துதியெனவவன்றொழுதுபோயினான். (கருஎ

அங்கதற்கினியனவருளியையபோய்த்
தங்குதியுந்தையோடென்றுதாமனாச்
செங்கணுன்றம்பியுந்தானுஞ்சிந்தையின்
மங்கையுமவ்வழியன்றுவைகினர். (கருஅ)

சேயுயர்கீர்த்தியான்கதிரின்செம்மல்பால்
போயதுமவ்வயிற்புகுந்தயாவையும்
ஓய்வுறுதுணர்த்தெனவுணர்த்தினனரோ
வாய்மையாயுணர்வுறுவலியமொய்ப்பினேன். (கருகூ

அன்றவனிருந்தனரலரிவீட்டிசை
பொன்றிணிநெடுவரைபொலிவுறுகமுன்
வன்றிறற்றூதுவர்கொணரவானரக்
குன்றுறழ்நெடும்படையடைந்தகூறுவாம். (௧௪௦)

கிட்கிந்தைப்படலமுற்றும் ஆ படலம்-௧௦-க்கு-விருத்தம். ௭௧௦

## ௧௧-வது-தானைகாண்படலம்.

—※—

ஆனையாயிரமாயிரத்தெறுவலியமைந்த
வானராதிபராயிரருடன்வரவகுத்த
கூனன்மாக்குரங்கையிரண்டாயிரகோடித்
தானையோடும்சதவலியென்பவன்சார்ந்தான். (௧)

ஊன்றிமேருவையெடுக்குறுமிடுக்கினுக்குரிய
தேன்றெரிந்துண்டுதெளிவுறும்வானரசேனை
ஆன்றபத்துநூறாயிரகோடியோடமையத்
தோன்றினன்வந்துசுசேடணனெனும்பெயர்த்தோன்றல். (௨)

கயில்வேலையையிமைப்புறுமளவினிற்கலக்கிச்
சேறுகாண்குறுந்திறல்கெழுவானரசேனை
ஆறெணாயிரகோடியதுடன்வரவயிர்த்த
மாறிலாமொழியுருமையைப்பயந்தவன்வந்தான். (௩)

ஐம்பதாயநூறாயிரகோடியெண்ணமைந்த
மொய்ம்புமால்வரைபுரைநெடுவானரமொய்ப்ப
இம்பர்ஞாலத்தும்வானத்துமெழுதியசீர்த்தி
நம்பனைத்தந்தகேசரிகடலெனநடந்தான். (௪)

மன்கொள்வாளெயிற்றெணத்தினவலியெனவயிரத்
தின்கொண்மால்வரைமயிர்ப்புறத்தனவெனத்திரண்ட
கண்கொளாயிரகோடியினிரட்டியிற்கணித்த
எண்கினீட்டங்கொண்டெறுழ்வலித்தூமிரனிருந்தான். (௫)

முனியுமாமெலினருக்கலைமுரணறமுருக்கும்
தனிமைதாங்கியவுலகையுஞ்சலம்வரிற்குமைக்கும்
இனியமாக்குரங்கிரண்டாயிரகோடி
அனிகமுன்வரவான்பெயர்க்கண்ணன்வந்தடைந்தான். (௬)

தனிவருந்தடங்கிரியெனப்பெரியவன்சலந்தால்
நிலையுநெஞ்சிறவுருமெனவுறக்குறுநிலயன்

பனசனென்பவன்பன்னிரண்டாயிரகோடிப்
புனிதவெஞ்சினவானரப்படைகொடுபுகுந்தான். (எ)

இடியுமாக்கடன்முழக்கமும்வெருக்கொளவிசைக்கும்
படிவிற்பேருறுக்குடையனவிசையனமுரணக்
கொடியகூற்றையுமொப்பனபதிற்றைந்துகோடி
நெடியவானரப்படைகொண்டுபுகுந்தனனீலன். (அ)

மாகரத்தனவுரத்தனவலியனநிலைய
வேகரத்தவெங்கண்ணுமிழ்வெயிலனமலையின்
ஆகரத்தினும்பெரியனவாறைந்துகோடி
சாகரத்தொடுததிமுகனெனபவன்சார்ந்தான். (கூ)

இளைத்துவேறொருமாநிலம்வேண்டுமென்றிரங்க
முளைத்தமுப்பதினாயிரகோடியின்முற்றும்
விளைத்தவெஞ்சினத்தரியினம்வெருவுறவிரிந்த
அளக்கரோடுமக்கயனெனும்பெயரன்வந்தடைந்தான். (க0)

ஆயிரத்தறுநூறுகோடியிற்கடையமைந்த
பாயிரப்பெரும்படைகொண்டுபரவையிற்றிணாயில்
தாயுருத்துடனேவரத்தடநெடுவரையை
வயுருட்புயச்சாம்பனென்பவனும்வந்திறுத்தான். (கக)

வகுத்ததாமரைமலரயனிசரர்வாணுள்
உகுத்ததீவினையொருவரும்பெருவலியுடையான்
பகுத்தபத்துநூறுயிரப்பத்தினிலிரட்டி
தொகுத்தகோடிவெம்படைகொண்டுதுன்முகன்றொடர்ந்தான்.

கோடிகோடிநூறுயிரமெண்ணெணக்குவிந்த
நீடுவெஞ்சினத்தரியினமிருபுடைநெருங்க
மூடுமும்பருமிம்பரும்பூழியின்மூழ்கத்
தோடலர்ந்ததார்க்கிரிபுனாதுமிந்தனுந்தொடர்ந்தான். (கங)

இயைந்தபத்துநூறுயிரப்பத்தெனுங்கோடி
உயர்ந்தவெஞ்சினவானரப்படையொடுமொருங்கே
சயந்தனக்கொருவடிவெனத்திறல்கொடுதழைத்த
மயிந்தன்மற்கசகோமுகன்றன்னெடும்வந்தான். (கச)

கறங்குபோலவன்காற்றினுங்கூற்றினுங்கடிய
பிறங்குதெண்டிரைக்கடல்புடைபெயர்ந்தெனப்பெயர்வ
மறங்கொள்வானரமொன்பதுகோடியெண்வகுத்த
திறங்கொள்வெஞ்சினப்படைகொடுகுமுதனுஞ்சேர்ந்தான். ()

ஏழினேழுநூறுயிரகோடியென்றிசைந்த
பாழிநன்னெடுந்தோள்கிளர்படைகொண்டுபரவை
ஊழிபேரினுமுலைவிலவலகினிலுயர்ந்த
பூழிவிண்புகப்பதுமுகனெனன்பவன்புகுந்தான். (கசு)

ஏழுமேழுமென்றுரைக்கின்றவுலகங்களவையும்
நாழுங்காலத்துந்தாழ்விலாத்தடவரைக்குலங்கள்
சூழுந்தோற்றத்தவலிகெழுதொளாயிரகோடிப்
பாழிவெம்புயத்தரியொடுமிடம்பனும்படர்ந்தான். (கஎ)

தீர்க்கபாதனும்வினதனுஞ்சரபனுந்திரைக்கும்
ஆர்கருங்கடற்குயர்ந்துளமைமுகத்தனீகம்
ஆர்க்குமென்னருங்கோடிகொண்டண்டமும்புறமும்
போர்க்கும்பூழியின்மறைதாமுறையினிற்புகுந்தார். (கஅ)

கையஞ்சாயுதமுடையவக்கடவுளைக்கண்டு
மெய்யஞ்சாதவன்மாதிரஞ்சிறிதெனவிரிந்த
வையஞ்சாய்தாத்திரிதருவானரசேனை
ஐயஞ்சாயிரகோடிகொண்டனுமன்வந்தடைந்தான். (ககூ)

தொய்திற்கூடியசேனைநூறுயிரகோடி
எய்தத்தேவருமென்கொலோமுடிவென்பதெண்ண
மையற்சிந்தையாலந்தகன்மறக்குற்றமயங்கத்
தெய்வத்தச்சன்மெய்த்திருநெடுங்காதலன்சேர்ந்தான். (உ0)

கும்பனுங்குலசங்கனுமுதலினர்குரங்கின்
தம்பெரும்படைத்தலைவர்கடாவந்ததானை
இம்பர்நின்றவர்க்கென்னரிதிராகவநாமத்
தம்பெனுந்துணைக்குரியமாறாைப்பரிதளவே. (உக)

தோயிலாழியோரேழுநீர்சுவறிவெண்டுகளாம்
சாயினண்டமுமேருவுமொருங்குடன்சாயும்
ஏயின்மண்டலமெள்ளிடமின்றிவிரியும்
காயின்வெங்கனற்கடவுளுமிரவியுங்கரியும். (உஉ)

எண்ணிறன்முகமொருபதினாயிரர்க்கியலா
உண்ணினண்டங்களோர்பிடிபுண்ணவுமுதவா
கண்ணினுக்குறிற்கண்ணுதலானையுங்கடக்கும்
மண்ணின்மேல்வந்தவானரசேனையின்வரம்பே. (உங)

ஒடிக்குமேல்வடமேருவைவேரொடுமொடிக்கும்
இடிக்குமேனவானகமுகட்டையுமிடிக்கும்

பிடிக்குமேற்பெருங்காற்றையுங்கூற்றையும்பிடிக்கும்
குடிக்குமேற்கடலேழையும்வறள்படக்குடிக்கும். (உ௪)

ஆறுபத்தெழுகோடியர்வானரர்க்கதிபர்
கூறுதற்கினுக்கப்புறங்குப்புறற்குரியார்
மாறில்கொற்றவனினைத்தனமுடிக்குறும்வலியர்
ஊறுமிப்பெருஞ்சேனைகொண்டெளிதில்வந்துற்றார். (உ௫)

ஏழுமாக்கடற்பரப்பினும்பரப்பெனவிசைக்கும்
சூழும்வானரப்படையொடுவீரருந்துவன்றி
ஆழிமாப்பரித்தேரவன்காதலனடியில்
வாழிவாழியென்றுரைத்தலர்தூவினர்வணங்கி. (உ௬)

அனையதாகியசேனைவந்திறுத்தலுமருக்கன்
தனயனெய்தினிற்றயரதன்புதல்வனைச்சார்ந்தான்
நினையுமுன்னம்வந்தடைந்ததுநின்பெருஞ்சேனை
வினையின்கூற்றுவகண்டருணீயெனவிளம்ப. (உ௭)

ஐயனும்முவந்தகமெனமுகமலர்ந்தருளித்
தையலாள்வரக்கண்டனனுமெனத்தளிர்ப்பான்
எய்தினனங்கொர்நெடுவரைச்சிகரத்தினிருக்கை
வெய்யவன்மகன்பெயர்த்துமச்சேனையின்மீண்டான். (உ௮)

அஞ்சொடையிரண்டியோசனையகலத்ததாகிச்
செஞ்செவேவடதிசைநின்றுந்தென்றிசைச்செல்ல
எஞ்சலில்பெருஞ்சேனையையெழுகெனவேவி
வெஞ்சினப்படைவீரரையுடன்கொண்டுமீண்டான். (உ௯)

மீண்டிராமனையடைந்திகல்வென்றிவேல்வீர
காண்டிநீயெனவரன்முறைதெரிவுறக்காட்டி
ஆண்டிருந்தவனுதரத்துவகையினூடி
ஈண்டுசேனைபாலெதிகட்னெறிபடர்ந்தென்ன. (௩0)

எட்டுத்திக்கையுமிருநிலப்பரப்பையுமிமையோர்
வட்டவிண்ணையுமறிகடலனைத்தையுமறையத்
தொட்டுமேலெழுந்தோங்கியதூளியின்பூழி
அட்டிச்செம்பியனிறைகுடமொத்ததவ்வண்டம். (௩௧)

அத்தியொப்பெனினன்னவையுணர்ந்தவருளரால்
வித்தகர்க்கினியுரைக்கலாமுவமைவேறியாதோ
பத்திரட்டிநன்பகலிரவொருவலர்பார்ப்பார்
எத்திறத்தினுநடுவுகாண்கிலர்முடிவெவனோ. (௩௨)

விண்ணிற்றென்கடலுலகத்திருகரில்வெற்றி
எண்ணிற்றானலதொப்பிலனெனநின்றவிராமன்
கண்ணிற்சிந்தையிற்கல்வியில்ஞானத்திற்கருதி
அண்ணற்றம்பியைநோக்கினனுரைசெய்வதானான். (௫௩)

அடல்கொண்டோங்கியசேனைக்குநாமுநம்மறிவால்
உடல்கண்டோமினிமுடிவுளகாணுமாறுளதோ
மடல்கொண்டோங்கியவலங்கலான்மண்ணிடைமாக்கள்
கடல்கண்டோமென்பரியாவரோமுடிவுறக்கண்டார். (௫௪)

ஈசன்மேனியைநோக்குதிசைகளையீண்டிய
வாசில்சேனையையைம்பெரும்பூதத்தையறிவைப்
பேசப்பேச்சினைச்சமயங்கள்பிணக்குறும்பிணக்கை
வாசமாலையாயாவரோமுடிவெண்ணவல்லார். (௫௫)

இன்னசேனையைமுடிவுறவிருந்திவணோக்கிப்
பின்னைக்காரியம்புரிதுமேனாள்பலபெயரும்
முன்னைச்செய்கைமேலொருப்படலுறுவதேயுறுதி
என்னவீரனைக்கைதொழுதிளையவனியம்பும். (௫௬)

யாவதெவ்வுலகத்தினினிங்கிவர்க்கியற்றல்
ஆவதாகுவதரியதொன்றுளதெனலாமே
தேவதேவியைத்தேடுவதென்பதுசிறிதால்
பாவத்தோற்றதுதருமமேவென்றதிப்படையால். (௫௭)

தாங்கநீரொழுதாமரைநான்முகன்றந்த
வாங்கொள்பேருலகத்தினின்மற்றைமன்னுயிர்கள்
உரங்கொண்மால்வரையுயிர்படைத்தெழுந்தனவொக்கும்
குரங்கின்மாப்படைக்குறையிடப்படைத்தனன்கொல்லாம். (௫௮)

ஈண்டுத்தாழ்க்கின்றதென்னினியெண்டிசைமருங்கும்
தேண்டுவார்களைவல்லையிற்செலுத்துவதல்லால்
நீண்டநூல்வலாயென்றனனிளையவனெடியோன்
பூண்டதேரவன்காதலற்கொருமொழிபுகலும். (௫௯)

தானைகாண்படலமுற்றும் ஆக படலம் - ௧௧ இ திருவிருத்தம் - ௭௪௧

## ௧௨-வது-நாடவிட்டபடலம்.

வகையுமானமுமாறெதிர்ந்தாற்றுறும்
பகையுமின்றிநிரைந்துபரந்தெழும்
தகைவில்சேனைக்கறுதிசமைத்ததோர்
தொகையுமுண்டுகொலோவெனச்சொல்லினான். (௧)

எற்றவெள்ளமெழுபதினிற்றவென்
றூற்றலாளரறிவினலமைத்ததோர்
மாற்றமுண்டதுவல்லதுமற்றுமோர்
தோற்றமென்றிதற்கெண்ணிமுன்சொல்வரோ. (௨)

ஆறுபத்தெழுகோடியனீகருக்
கேறுகொற்றத்தலைவரிவர்க்குமுன்
கூறுசேனைப்பதிகொடுங்கூற்றையும்
நீறுசெய்திடுநீலனென்றோதினான். (௩)

என்றுரைத்தவெரிகதிர்மைந்தனை
வென்றிவிற்கைவிராமன்விருப்பினால்
நின்றினிப்பலபேசியென்னோநெறி
சென்றிழைப்பனசிந்தனைசெய்கென்றான். (௪)

அவனுமன்னலனுமனையையநீ
பவனமூன்றுநின்றுதையிற்புக்குழல்
தவனவேகத்தையோர்கிலதாழ்த்தனை
கவனமாக்குரங்கின்செயல்காட்டியோ. (௫)

எகியேந்திழைதன்னையிருந்துழி
நாகநாடுகநானிலனுடுக
போகபூமிபொருந்திடவல்லநின்
வேகமீண்டுவெளிப்படவேண்டுமால். (௬)

தென்றிசைக்கணிராவணன்சேணகர்
என்றிசைக்கின்றதென்னறிவின்னணம்
வன்றிசைக்கினிமாருதிநீயலால்
வென்றிசைக்குரியார்பிறர்வேண்டுமோ. (௭)

வள்ளறேவியைவஞ்சித்துவெளவிய
கள்ளவாளரக்கன்செலக்கண்டது
தெள்ளியோயதுதென்றிசையென்பதோர்
உள்ளமும்மெனக்குண்டெனவுன்னுவாய். (௮)

தாரைமைந்தனுஞ்சாம்பனுந்தாமுதல்
வீரரியாவருமேம்படுமேன்மையாற்
சேர்கநின்னொடுந்திண்டிறற்சேனைகள்
பேர்கவெள்ளமிரண்டொடும்பெற்றியால். (௯)

குடதிசைக்கட்சுடேணன்குபேரன்வாழ்
வடதிசைக்கட்சதவலிவாசவன்

றுடைதிசைக்கண்வினதன்விறற்றரு
படையொடுந்துப்படர்கெனப்பன்னினான். (௧0)

பெற்றிவானரவெள்ளமிரண்டொடும்
சுற்றியோடித்துருவியொருமதி
முற்றுறுதமுன்முற்றுதிரிவிடைக்
கொற்றவாகையினீரெனக்கூறினான். (௧௧)

ஈண்டுநின்றிறந்தீரார்ந்துநூற்றெழில்
தாண்டுசோதிக்கொடுமுடிதோன்றலால்
நீண்டநேமிகொலாமெனநேர்தொழ
வேண்டும்விந்தமலையினைமேவுவீர். (௧௨)

தேடியவ்வரைத்தீர்ந்தபின்றேவரும்
ஆடுகின்றதறுபதமைந்தினை
பாடுகின்றதுபன்மணியாலிருள்
ஓடுகின்றநருமதையுன்னுவீர். (௧௩)

வாமமேகலைவானரமங்கையர்
காமப்பூசற்களியிசைக்கள்ளினால்
தாமமேனியகுணந்துயில்வுறும்
ஏமகூடமெனுமலையெய்துவீர். (௧௪)

நொய்தினம்மலைநீங்கிநுமரொடும்
பொய்கையின்கரைபிற்படப்போதிரால்
செய்யபெண்ணுக்கரியபெண்ணைச்சில
வைகநேடிக்கடிதுவழிக்கொள்வீர். (௧௫)

தாங்குமாரகிற்றன்னறுஞ்சந்தனம்
வீங்குவேலிவிதர்ப்பமுமெல்லென
நீங்கிநாடுநெடியனபிற்படத்
தேங்குவார்புனற்றண்டகஞ்சேர்திரால். (௧௬)

பண்டகத்தியன்வைகியதாய்பகர்
தண்டகத்ததாபதர்தம்மையுட்
கண்டகத்துயர்தீர்வதுகாண்டிரால்
முண்டகத்துறையென்றொருமொய்ப்பொழில். (௧௭)

ஞாலநல்லறத்தோருன்னுநற்பொருள்
போலநின்றுபொலிவதுபூம்பொழில்
சீலமங்கையர்வாயெனத்தீங்கனி
காலமின்றிக்கனிவதுகாண்டிரால். (௧௮)

நயனநல்கிமையார் துயிலார்நனி
அயனமில்லையருக்கனுக்கவ்வழி
சயனமாதர்கலவித்தலைத்தரும்
பயனுமின்பமுநீரும்பயக்குமால். (௧௯)

ஆண்டிறந்துபின்னந்தரத்திந்நவைத்
தீண்டுகின்றதுசெங்கதிர்ச்செல்வனும்
மீண்டுறைந்தலதேகலனென்பது
பாண்டுவின்மலையென்னுப்பருப்பதம். (௨௦)

வேறு

முத்தீர்த்தப்பொன்றிரட்டிமணியுருட்டிமுறுநீத்தமுன்றிலாயர்
மத்தீர்த்துமரனீர்த்துமலையீர்த்துமானீர்த்துவருவதுயார்க்கும்
புத்தீர்த்திட்டலையாமற்புலவர்நாடுதவுவதுபுனிதமான
அத்தீர்த்தமகன்கோதாவிரியென்பரம்மலையினருகிற்றம்மா. (௨௧

அவ்வாறுகடந்தப்பாலறத்தாறேயதுதெரிந்தவருளிறைனும், வெவ்வேறுமெனக்குளிர்த்துவெயிலியங்கா வகையியங்குவிரிபூஞ்சோலை, எவ்வாறுமுறத்துவன்றியிருளோடமணியிமைப்பநிமையோர்வேண்ட, தெவ்வாறுமுகத்தொருவன்றனிக்கிடந்தசுவணத்தைச்சேர்திர்மாதோ. (௨௨)

சுவணத்தைக்கடந்தப்பால் சூரியகாந்தமென்னத்தோன்றிமாதர், கவணுமிழ்கல்வெயிலியங்குங்கனவரையுஞ்சந்திரகாந்தமுமுன்காண்பீர், அவணவைநீத்தேகியபின்னகளும்பலகடந்தாலனந்தனென்பான், உவணபதிக்கொளித்துறையுங்கொங்கணமுங்குலிந்தமுஞ்சென்றுறுதிர்மாதோ. (௨௩)

அரனதிகனுலகளந்தவரியதிகனென்றுரைக்குமறிவிலார்க்குப் பரகதிசென்றடைவரியபரிசேபோற்புகலரியபண்பிற்றாமால், சுரநதியினயலதுவான்றோய்குடுமிச்சுடர்த்தொகையதொழுதோர்க்கெல்லாம், வரனதிகத்தருந்தகையவருந்ததியாநெடுமலையையவணங்கியப்பால். (௨௪)

அஞ்சிவரும்வெஞ்சுரனு மாறுமுகன்பெருஞ்சுனையுமகிலோங்கார, மஞ்சிவருநெடுங்கிரியும்வளநாடும் பிற்படப்போய்வழிமேற்சென்றால், நஞ்சுவருமிடற்றரவுக்கமிர்து தனிகொடுத்தாயைக்கலுழனண்ணும், எஞ்சினமாகதப்பொருப்பையிறைஞ்சியதன்புறஞ்சாரவேகிமாதோ. (௨௫)

வடசொற்குந்தென்சொற்கும் வரம்பாகுநான்மறையுமற்றைநூலும், இடைசொற்றபொருட்கெல்லாமெல்லையாய்நல்லறத்துக்கீறாய்வேறு, புடைசுற்றுந்துணையின்றிப்புகழ்பொதிந்தமெய்

யேபோற்றுக்குயின்ற, உடைசுற்றுத்தண்சாரலோங்கியவேங்கட
த்திற்செல்லுதிர்மாதோ. (உகூ)

இருவினையுமிடைவிடாவெவ் வினையுமியற்ருதேயிமையோரே
த்த,திருவினையுமிடுபதந்தேர்சிறுமையையு முறையொப்பத்தெ
ளிந்துநோக்கிக், கருவினையதிப்பிறவிக்கென்றுணர்ந்தங்கதுகளே
யுங்கடையின்ஞானத், தருவினையின்பெரும்பகைஞ ராண்டுளரீ
ரடிருத்துமடிவணங்கற்பாலர். (உஎ)

ருதகற்றுந்திருமறையோர் துறையாடு நிறையாருஞ் சுருதித்
தொன்னூல், மாதவத்தோருறையிடமுமமையுறங்கு மணித்தட
மும்வானமாதர், கீதமோத்தகின்னரங்களின்னரம்பு வருடுதொ
லங்கிளக்குமோதை, போதகத்தின்மழகன்றும்புலிப்பறழுமுற
ங்கிடமும்பொருத்துமம்மா. (உஅ)

கோடுறுமால்வரையதனைக்குறுகுதிரோலுந்நெடியகொடுமைநீ
ங்கி, வீடுறுதிராதலினால்விலங்குதிரப் புறத்துணீர்மேவுதொண்
டை, நாடுறுவிருத்தறதனைநாடியதற்பின்னரவைநளிர்நீர்ப்பொன்
னிச், சேடுறுதண்புனற்றெய்வத் திருநதியினிருகரையுஞ்சேர்திர்
மாதோ. (உகூ)

துறக்கமுற்றூர்மனமென்னத்துறைகெழுநீர்ச்சோணாடுகடந்தா
ற்றெல்லை, மறக்கமுற்றூரதனயலே மறைந்துறைவரய்வழிநீர்வ
ல்லையேகி, உறக்கமுற்றூர்கனவுற்றுரொனுமுணர்விஞெடுமொது
ங்கிமணியாலோங்கல், பிறக்கமுற்றமலைநாடுநாடியதன்றமிழ்நா
ட்டிற்பெயர்திர்மாதோ. (ஙூ)

தென்றமிழ்நாட்டகன்பொதியிற்றிருமுனிவன்றமிழ்ச்சங்கஞ்சே
ருதிற்பிர், என்றுமவனுறைவிடமாமாதலாலம்மலையையிடத்திட்
டேகிப், பொன்றிணிந்தபுனற்பெருகும்பொருநையெனுந்திரு
நதியின்பொழியநாகக்,கன்றுவளர்தடஞ்சாரன்மயேந்திரமாதெ
டுவரையுங்கடலுங்காண்பிர். (ஙக)

அண்டுகடந்தப்புறத்துமெப்புறத்துமொருதிங்களவதியாகத்
தேண்டியிவண்வந்தடைதிர்விடைகோடீர் கடிதென்னச்செப்பு
ம்வேலே, நீண்டவனுமாருதியைநிறையருளாலுறநோக்கிநீதிவல்
லோய், காண்டியெனிற்குறிகேட்டியெனவேறு கொண்டிருந்து
சுழறலுற்றான். (ஙஉ)

வேறு.

பாற்கடற்பிறந்தசெய்யபவளத்தைப்பஞ்சியூட்டி
மேற்படமதியஞ்சூட்டிவிளங்குறநிரைத்தநொய்ய
காற்றலைகவிரல்களையகமலமும்பிறவுங்கண்ட
வேற்பிலவெல்பவன்றியிணையடிக்குவமையுண்டோ. (ஙங)

நீமெய்யாயுணர்தியையநிரைவளைமகளிர்க்கெல்லாம்
வாய்மையாருவமையாகமதியறிபுலவர்வைத்த
தூமையாமென்றபோதுமல்லணிசொல்லினுநும்
யாமையாமழலையாடன்புறவடிக்கிழுக்கமன்றே. (௫௪)

வினைவராலரியகோதைப்பேதைமெல்கலைக்கான்வெய்ய
நினைவராலரியவின்னநேர்படப்புலவர்போற்றுஞ்
சினைவராற்பகழியாவநெற்சினையென்னுஞ்செப்பம்
எனைவராற்பகருமீட்டமியானுரைத்திடல்பமென்றே. (௫௫)

அரம்பையென்றற்குமாதர்குறங்கினுக்கமைந்தவொப்பின்
அரம்பையுங்கடந்தபோதுமற்றுளவெருக்கலாமோ
நரம்பையுமமிர்தநாறுநறவையுநலிவீர்ப்பண்ணைக்
கரும்பையுங்கடந்தசொல்லாள்கவாற்கிதுகருதுகண்டாய். (௫௬)

வாராழிக்கலசக்கொங்கைவஞ்சிபோன்மருங்குலாடன்
தாராழிக்கலைசாரல்குற்றடங்கடற்குவமைதக்கோய்
பாராழிபிடரிற்றாங்கும்பாந்தளும்பணியென்றேங்கும்
ஓராழித்தேருங்கண்டவுனக்குநானுரைப்பதென்னே. (௫௭)

சட்டகந்தலைநோக்கியாளையுஞ்சலமக்கத்தக்காள்
இட்டிடையிருக்குந்தன்மையியம்புக்கேட்டுணர்தியென்னில்
கட்டுரைத்துவமைகாட்டக்கட்பொறிகதுவாக்கையில்
தொட்டவெற்குணரலாமற்றுண்டெனுஞ்சொல்லுமில்லை. (௫௮)

ஆலிலைப்படிவந்தீட்டுமையநுண்பலகைநொய்ய
பால்நிறத்தட்டம்வட்டக்கண்ணடிபலவுமின்ன [ன்
போலுமென்றுரைத்தபோதும் புனைந்துரைபொதுமைபார்க்கி
வலுமென்றிசைக்கினேலாவிதுவயிற்றியற்கையின்னும். (௫௯)

சிங்கலிற்சிறுகட்டாளிநந்தியின்றிரட்பூச்சேர்ந்த
பொங்குபொற்றுளையென்றாலும்புல்லிதுபுதுமைத்தாமால்
அங்கவளுந்தியொக்குஞ்சுழியெனக்கணித்ததுண்டேல்
கங்கையைநோக்கிச்சேறிகடலினுநெடிதுகற்றோய். (௬௰)

மயிரொழுக்கென்வொன்றுண்டவ்வல்லிசேர்வயிற்றின்மற்றென்
உயிரொழுக்கற்குவேண்டுமுவமையொன்றுரைக்கவேண்டின்
செயிரில்சிற்றிடையாயுற்றசிறுகொடிநடக்கந்தீரக்
குயிலுறுத்தமையவைத்தகொழுகொம்பென்றுணர்ந்துகோடி. (

அல்லியூன்றிடுமென்றஞ்சியரவிந்தந்துறந்தாட்கம்பொன்
வல்லிமுன்றுளவாற்கோல்வயிற்றின்மற்றவையுமார

விற்பிழன்றலகின்வாழுமாதருத்தோற்றமெய்ம்மை
சொல்லிழுன்றியவாம்வெற்றிவளாயெணத்தோன்றமன்றே.(௪௨

செப்பென்பன்கலசமென்பன்செவ்விளநீருந்தேர்வன் [த்
துப்பொன்றுதிரள்சூதென்பன் சொல்லுவன்றும்பிக்கொம்பை
தப்பின்றிப்பகலின்வந்தசக்கரவாகமென்பன்
ஒப்பொன்றுமுலைக்காணேன்பலநினைந்துலைவனின்னும். (௪௩)

கரும்புகண்டாலுமாலைக்காம்புகண்டாலுமாவி
அரும்புகண்டாலாஞ்சோரவழுங்குவேனறிவதுண்டோ
சுரும்புகண்டாலுங்கோதைதோளினைத்துவமைசொல்ல
இருப்புகண்டனையநெஞ்சமெனக்கில்லையிசைப்பதென்றே(௪௪

மூங்கையேயொப்பதொன்றுமுண்டுமூன்றுலகத்துள்ளும்
வங்கையேயிழக்கமன்றேயியம்பினுங்காந்தளென்றல்
வல்லையாழ்மணிக்கையென்றல்மற்றொன்றையுணர்த்தலன்றி
நன்கையாடடக்கைக்காமோநலத்தின்மேனலமுண்டாமோ. ()

ஏலக்கொண்டன்றபிண்டியிளந்தளிர்கிடக்கயாணர்க்
கோலக்கற்பகத்தின்காமர்குழைநறுங்கமலமென்பூ
நாலொக்குமருங்குலாடனூபுரம்புலம்புங்கோலக்
காலுக்குத்தொலையுமென்றாற்கைக்கொப்புவைக்கலாமோ (௪௬)

வெள்ளியமுறுவல்செவ்வாய்விளங்கிழையிளம்பொற்கொம்பின்
வள்ளுகிர்க்குவமைநம்மான்மயர்வறவகுக்கலாமோ
எள்ளுநிர்நிரோழுக்கையென்றுகொண்டிவறிப்பின்னும்
இன்னைகண்முருக்கின்பூவைக்கிழிக்குமேனுணக்கலாமோ. (௪௭)

அங்கைப்புமடியுங்கண்டாலரவிந்தநினைதியம்பொற்
செங்கதிர்சிதறிநீலஞ்செருக்கியதெய்வவாட்கண்
மங்கைதன்கழுத்தைநோக்கின்வளரிளங்கமுகும்வாரிச்
சங்கமுநினைதியாயினலைவயென்றுதுணிதிதக்கோய். (௪௮)

பவளமுங்கிடையுங்கொவ்வைப் பழனும்பைங்குமுதப்போதும்
துவளிலவங்கங்கோபமுருக்கென்றித்தொடக்கஞ்சாலத்
தவளமென்றுரைக்கும்வண்ணஞ்சிவந்துதேன்றதும்புமாயின்
குவளையுண்கண்ணிவண்ணவாயதற்குறியுமன்றே. (௪௯)

சிவந்ததோரமிர்தமில்லைதேனில்லையுளவென்றாலும்
கவர்ந்தபோதன்றியுள்ளநினைப்பவோர்களிப்புநல்கா
பவர்ந்தவாறுதலிறுடல்பவளவாய்க்குவமைபாவித்
துவந்தபோதுவந்தவண்ணமுரைத்தபோதுரைத்ததாமோ. (௫௦

முல்லையுமுருந்துமுத்துமுறுவலென்றுரைத்தபோது
சொல்லையுமமிர்தும்பாலுந்தேனுமென்றுரைத்ததொன்றும்
அல்லதொன்றுவதில்லையயிற்றிற்குமுவமையுண்டோ
வல்லையேலறிந்துகோடிமாறிலாவாறுசான்றோய். (௫௧)

ஓதிடுமெள்ளுந்தொள்ளைக்குமிருமூக்கொக்குமென்றால்
சோதிசெய்பொன்னுமின்னுமணியும்போற்றுளங்கித்தோன்று
ஏதுவுமில்லவல்லாமொழுதுவார்க்கெழுதவொண்ணா
நீதியைநோக்கிநீயேநினைதியானெடிதுகாண்பாய். (௫௨)

வள்ளைகத்தரிகையாகுமயிர்வினைக்கருவியென்னப்
பிள்ளைகளுரைத்தவொப்பைப்பெரியவருரைக்கிற்பித்தாம்
வெள்ளிவெண்டோடுசெய்தவிழுத்தவம்விளைந்ததென்றே
உள்ளுதியுலகினெல்லாமுவமைக்குமுவமையுண்டோ. (௫௩)

பெரியவாய்ப்பரவயொவ்வாப்பிறிதொன்றுநினைந்துபேச
உரியவாயொருவருள்ளத்தொடுங்குவவல்லவுண்மை
தெரியவாயிரக்கானோக்கிற்றேவர்க்குந்தெய்வமென்னக்
கரியவாய்வெளியவாகும்வாட்டடங்கண்களம்மா. (௫௪)

கேளொக்குமன்றியொன்றுகிளத்தினுற்கீழ்மைத்தாமே
கோளொக்குமென்னினல்லாற்குறியொக்கக்கூறலாமோ
வாளொக்கும்வடிக்கணூடல்புருவத்துக்குவமைவைக்கில்
தாளொக்கவளைந்துநிற்பவிரண்டில்லையனங்கன்சாபம். (௫௫)

நந்நாளுநளினநாணுமுகத்தினைநுதலைநாடிப்
பன்னாளும்பன்னியாற்றுமதியெனும்பண்பதாகி
முன்னாளினிளவெண்டிங்கண்முறைநாளுங்குறைவேயாகி
எந்நாளும்வளர்ந்ததென்னினிறையொக்குமியல்பிற்றே (௫௬)

வனைபவரில்லையன்றேவனத்துளும்வந்தபின்னர்
அனையனவெனினுந்தத்தமழகுக்கோரழிவுண்டாகா
வினைசெயக்குழன்றவல்லவிதிசெயவிளைந்தநீலம்
புனைமணிப்பவளமின்னும்புதுமையாமுவமைபூணா. (௫௭)

கொண்டலின்குழலியாம்பல்குனிசிலைவள்ளைகொற்றக்
கெண்டையொண்டாளமென்றிக்கேண்மையகிடந்ததிங்கள்
மண்டலவதனமென்றுவைத்தனன்விதியேநீயப்
புண்டரீகத்தையுற்றபொழுதுபொருந்தித்தேர்வாய்., (௫௮)

காரினைக்கழித்துக்காட்டிக்கள்ளினோடளாவிக்காட்டிப்
பேரிருட்பிழம்புதோய்ந்துநெறிவுறீஇப்பிறங்குகற்றைச்

சோர்குழற்றொகுதிக்குழல்சும்மைசெய்தனையதம்மா
நேர்மையைப்பருமைசெய்திலைநறுங்கூந்தனீத்தம். (௫௯)

புல்லிதழ்கமலத்தெய்வப்பூவிற்குமுண்டுபொற்பின்
எல்லைகுறிமதிக்குமுண்டாங்களங்கமென்றுணாக்குமேதம்
அல்லவுஞ்சிறிதுகுற்றமகல்றிலவன்னமன்ன
நல்லியலாளுக்கெல்லாநலனன்றிப்பிறிதுண்டாமோ. (௬0).

மங்கையர்க்கோதிவைத்தவிலக்கணம்வண்ணவாசப்
பங்கயத்தவட்குமையாயிரம்பலபற்றிநோக்கில்
செங்கயற்கருங்கட்செவ்வாய்த்தேவரும்வணங்குந்தெய்வக்
கொங்கையக்குயிலுக்கொன்றுங்குறைவிலைகுறியுமஃதே. (௬௧)

குழல்படைத்தியாழைச்செய்துகுயிலொடுகிளியுங்கூட்டி
மழலையும்பிறவுந்தந்துவடித்தகைம்மலரின்மேலான்
இழைபொருமுலையினுடனின்சொற்களியையச்செய்தான்
பிழையிலனுவமைகாட்டப்பெற்றிலன்பெறுங்கொலின்னும். ()

வானின்றவுலகமூன்றும்வரம்பின்றிவளர்ந்தவேனும்
தானின்றசுவைமற்றொன்றேயமிர்தன்றிநல்லதில்லை
மீனின்றகண்ணினுடன்மென்மொழிக்குவமைவேண்டின்
தேனொன்றேயமிர்தமொன்றேயவைசெவிக்கின்பஞ்செய்யா()

பூவருமழலையன்னம்புனமடப்பிடியென்றின்ன
தேவருமருளத்தக்கசெலவினளெனவுந்தேறேன்
பாவருங்கிழமைத்தொன்மைப்பருணிதர்தொடுத்தபத்தி
நாவருங்கிளவிச்செவ்விநடைவருநடையனல்லோய். (௬௪)

எந்திறமுணாக்கேன்மாவினிளைதிறமுதிருமற்றைப்
பொன்னிறங்கருகுமென்றன்மணிதிறமுவமைபோதா
மின்னிறநாணியெங்கும்வெளிப்படாதொளிக்கும்வேண்டில்
தன்னிறத்தானேயொக்கு மலர்திறஞ்சமழ்க்குமன்றே. (௬௫)

மங்கையரிவளையொப்பார்மற்றுளரில்லையென்னும்
சங்கையினுள்ளந்தானேசான்றெனக்கொண்டுசான்றோய்
அங்கவணிலைமையெல்லாமளந்தறிந்தருகுசார்ந்து
திங்கள்வாள்முகத்தினட்குச்செப்பெனப்பின்னுஞ்செப்பும் ()

வேறு.

முல்லைநாண்முனியொடுமுதியநீர்மிதிலைவாய்ச்
செல்லிநீண்மாலையான் வேள்விகாணியசெல
அன்னமாடுந்துறைக்கருகுநின்றுளையக்
கன்னிமாடத்திடைக்கண்டதுங்கழறுவாய். (௬௭)

சூழிமாலியானையில் றுணைமருப்பிணையெனக்
கேழிலாவனமுலைக்கிரிசுமந்திடைவதோர்
வாழிவான்மின்னிளங்கொடியில்வந்தாளையன்
ருழியானரசவைக்கண்டதும்மறைகுவாய். (௬௮)

வளாசெய்தாள்வில்லிறுத்தவனமாமுனியொடும்
விரசினனல்லனேல்விடுவனானுயிரெனக்
களாசெயாவேலையிற்பெரியகற்பினடெரிந்
துளாசெய்தாளவையெலாமுணரநீயுளாசெய்வாய். (௬௯)

முன்புநானறிகிலாமுளிநெடுங்கானிலே
என்பினேபோதுவாய்நினைதியோவேழைநீ
இன்பமாயாருயிர்க்கினியையாயினையினித்
துன்பமாய்முடிதியோவென்றதுஞ்சொல்லுவாய். (௭௦)

ஆனபேரரசிழந்தடவிசேர்வாயுனக்
கியானலாதனவெலாமினியவோவினியெனு
மீனுலாநெடுமலர்க்கண்கணீர்விழவிழுந்
தூனிலாவுயிரின்வந்தயர்வதும்முளாசெய்வாய். (௭௧)

மல்லன்மாநகர்துறந்தேகுநாண்மதிதொடும்
கல்லின்மாமதின்மணிக்கடைகடந்திடுதன்முன்
எல்லைதீர்வரியவெங்கானமியாதோவெனச்
சொல்லினுளிவையெலாமுணரநீசொல்லுவாய். (௭௨)

இனையவாறுளாசெயாவினிதினேகுதியெனு
வனையுமாமணிநன்மோதிரமளித்தறிஞரின்
வினையெலாமுடிகெனுவிடைகொடுத்துதவலும்
புனையும்வார்கழலினுனருளொடும்போயினுன். (௭௩)

அங்கதக்குரிசிலோ டடுசினத்துழவராம்
வெங்கதத்தலைவரும் விரிகடற்படையொடும்
பொங்குவிற்றலைவளாத் தொழுதுமுன்போயினுர்
செங்கதிர்ச்செல்வனைப்பணிவுறுஞ்சென்னியார். (௭௪)

நாடவிட்டபடலமுற்றிற்று-ஆ படலம்-௧௨-க்கு.
திருவிருத்தம்-அ௨௩.

## ௧௩-வது-பிலநீங்குபடலம்.

போயினுர்போனபின்புறநெடுந்திசைகடோ
றேயினுனிரவிகாதலனுமேயின்பொருட்
காயினுரவளாயங்கன்னநாளவதியிற்
ருயினுருலகினைத்தகைநெடுந்தானையார். (௧)

குன்றிசைத்தனவெனக்குவவுதோள்வலியினார்
மின்றிகைத்திடுமிடைக்கொடியைநாடினர்விராய்
வன்றிசைப்படருமாறொழியவண்டமிழுடைத்
தென்றிசைச்சென்றுளார்திறனெடுத்துரைசெய்வாம். (௨)

சித்ராகத்தொடுந்திரண்மணிச்சுடர்செறிந்
தந்திவானத்தினின்றவிர்தலாலரவினோ
டுந்தியாறெய்தலாலிறைவன்மாமௌலிபோல்
வித்தநாகத்தின்மாடெய்தினார்வெய்திறல். (௩)

அந்நெடுங்குன்றமோடவிர்மணிச்சிகரமும்
பொன்னெடுங்கொடுமுடிப்புனைகளும்புடைகளும்
நன்னெடுத்தாழ்வரைநாடினார்நவையிலார்
பன்னெடுங்காலமாமென்னவோர்பகலிடை. (௪)

மல்லன்மாஞாலமோர்மறுவுறுவகையினைச்
சில்லலோர்ந்துயயிருந்துறைவிடந்தேடுவார்
புல்லிருளுலகினைப்பொதுவிலாவகையினால்
எல்லமாக்கடல்களேயாகுமாறெய்தினார். (௫)

விண்டுபோயிழிவர்மேனிமிர்வர்விண்படர்வர்வே
றுண்டமாமரனினம்மலையின்வாயுறையுநீர்
மண்டுபாரதனின்வாழுயிர்களம்மதியினார்
கண்டிலாதனவயன்கண்டிலாதனகொலாம். (௬)

வேறு.

ஏகினாரியோசனையேழொடேழுபார்
சேகறத்தென்றிசைக்கடிதுசெல்கின்றார்
மேகமாலையினெடும்விரவிமேதியின்
நாகுசேர்நருமதையாறுநண்ணினார். (௭)

அன்னமாடிடங்களுமமரர்நாடியர்
துன்னியாடிடங்களுந்துறக்கமேயவர்
முன்னியாடிடங்களுஞ்சுரும்புமூசுதேன்
பன்னியாடிடங்களும்பார்த்துசுற்றினார். (௮)

பெறலருந்தெரிவையைநாடும்பெற்றியார்
அறனருங்கூந்தலுமளகவண்டுகுந்
நிறைநறுந்தாமரைமுகமுநித்தில
முறுவலுங்காண்பரான்முழுதுங்காண்கிலார். (௯)

செருமதயாக்கையர்செருக்கில்சிந்தையர்
தருமதயாவிலவதழுவுந்தன்மையர்

பொருமதயானையும்பிடியும்புக்குழல்
தருமதையாமெனுநதியைநீங்கினர். (கഠ)

நாமகூடத்தினாத்தீர்த்தசங்கமும்
நாமகூடப்பெருந்திசையைநல்கிய
வாமகூடச்சுடர்மணிவயங்குறும்
ஏமகூடத்தடங்கிரியையெய்தினார். (கக)

மாடுறுகிரிகளுமரனுமற்றவும்
சூடுறுபொன்னெனப்பொலிந்ததோன்அறப்
பாடுறுசுடரொளிபரப்புகின்றது
வீடுறுமுலகினும்விளங்குமெய்யது. (கஉ)

பறவையும்பல்வகைவிலங்கும்பாடமைந்
துறைவனகனகநன்டுளிபோர்த்தலால்
நிறைநெடுமேருவைச்சேர்ந்தநீரவாய்ப்
பொறைநெடும்பொன்னொளிமுழுதும்போர்ப்பவே.

பாவியகனகநுண்பராகம்பாடுற
எரிசுடர்ச்செம்மணியீட்டத்தோடிழி
அருவியுநதிகளுமலங்குதீயிடை
உருகுபொன்பாய்தல்போன்றொழுகுகின்றவே. (கச)

விஞ்சையர்பாடலும்விசும்பின்வெள்வளைப்
பஞ்சின்மெல்லடியினராடற்பாணியும்
குஞ்சரமுழக்குமுங்குமுறுபேரியின்
மஞ்சினமுரற்றலும்மயங்குமாண்பது. (கரு)

அனையதுநோக்கினரயிர்தமாமயில்
வினையவனிராவணனிருக்கும்வெற்பெனும்
நினைவினருவந்துயர்ந்தோங்குநெஞ்சினர்
சினமிகக்கனற்பொறிசிந்துஞ்செங்கணார். (கசா)

இம்மலைகாணுதமேமைமானையச்
செம்மலைநீக்குதஞ்சிந்தைத்தீயினை
விம்மலுற்றுவகையின்விளங்குமுள்ளத்தார்
அம்மலையேறினரச்சநீங்கினர். (கஎ)

இரிந்தனகரிகளும்யாளியீட்டமும்
விரிந்தகோளரிகளும்வெருவிநீங்கின
திரிந்தனரெங்கணுந்திருவைக்காண்கிலார்
பிரிந்தனர்பிறிதெனப்பெயரும்பெற்றியார். (கஅ)

ஐம்பதிற்றிரட்டிக்காவதத்தினுலகன்
னம்பலாத்தொடுவதொத்துயர்விணோங்கிய
செம்பொனற்கிரியையோர்பகலிற்றேடினார்
கொம்பினைக்கண்டிலர்குப்புத்தேகினார். (௧௯)

வெள்ளமோரிரண்டெனவிரிந்தசேனையைத்
தெள்ளுநீருலகெலாந்தெரிந்துதேடிநீர்
எள்ளருமயேந்திரத்தெம்பிற்கூடுமென்
றுள்ளினாருயர்நெடுமோங்கநீங்கினார். (௨௦)

மாருதிமுதலியவயிரத்தோள்வயப்
போர்கெழுவீரரோகுழீஇப்போகின்றார்
நீரொனும்பெயருமந்நெறியினீங்கலாச்
சூரியன்வெருவுமோர்சுரத்தைநண்ணினார். (௨௧)

புள்ளடையாவிலங்கரியபுல்லொடும்
கள்ளடையாநிலங்கல்லுந்தீந்துருகும்
உள்ளிடையறவுநண்பொடியோடிய
வெள்ளிடையல்லதொன்றரிதவ்வெஞ்சுரம். (௨௨)

நன்புலனடுக்குறவுணர்வுநாமுறப்
பொன்பொலியாக்கைகள்புழுங்கிப்பொங்குவார்
தென்புலத்தங்கெரிநரகிற்சிந்திய
என்பில்பல்லுயிரெனவெம்மையெய்தினார். (௨௩)

நீட்டியநாவினர்நிலத்திற்றீண்டுதோ
ளாட்டியவெம்மையாலலையுங்காலரக்
காட்டினுங்காய்ந்துதங்காயந்தீதலால்
சூட்டகல்மேலெழுபொரியிற்றுள்ளினார். (௨௪)

ஓதுங்கலாநிழலினைக்காண்கிலாதுயிர்
பிதுங்கலாமுடலினர்முடிவில்பீழையர்
பதங்கமபருகிடப்பதைக்கின்றார்பல
விதங்கொளாநெடும்பிலவழியின்மேவினார். (௨௫)

மீச்செலவரிதினிவிளியினல்லது
நீச்செலவொழியவுந்தடுக்குந்திண்பில
வாய்ச்செலனன்றெனமனத்தினெண்ணினார்
போய்ச்சிலவழிதுமென்றதனிற்புக்கனர். (௨௬)

அக்கணத்தப்பிலமதனினெய்தினார்
திக்கினோடுலகுறச்செறிந்ததேங்கிருள்

எக்கியகதிரவற்கஞ்சியேமுறப்
புக்கதேயனையதோர்புனாபுக்கெய்தினார். (உஎ)

எழுகிலார்காலெடுத்தேகுமெண்ணிலார்
வழியுளதாமெனுமுணர்வுமாற்றினார்
இழுகியநெய்யெனுமிருட்பிழம்பினுள்
முழுகியமெய்யராயுயிர்ப்புமூட்டினார். (உஅ)

நின்றனர்செய்வதோர்நிலைமைநோக்கிலர்
பொன்றினராமெனப்பொருமுபுத்தியர்
வன்றிறன்மாருதிவல்லைநீயெமை
இன்றுதுகாக்கவென்றிரந்துகூறினார். (உகூ)

உய்யுறுத்துவன்மனமுலேயிருழின்வால்
மெய்யுறப்பற்றுதிர்விடுகிலீரென
ஐயனக்கணத்தினின்றகனுநீணெறி
கையினிற்றடவிவெங்காலினேகினான். (ஙo)

பன்னிரண்டியோசனைபடர்ந்தமெய்யினன்
மின்னிரண்டனையகுண்டலங்கள்வில்லிடத்
துன்னிருடுலைந்திடத்தருவியேகினான்
பொன்னெடுங்கிரிநிகர்பொலிந்ததோளினான். (ஙக)

கண்டனர்கடிநகர்கானத்தொண்கதிர்
மண்டலமறைந்துறைந்தனையமாண்பது
விண்டலநாணுறவிளங்குகின்றது
புண்டரீகத்தவள்வதனப்போன்றது. (ஙஉ)

கற்பகக்கானதுகமலக்காடது
பொற்பெருங்கோபுரப்புரிசைபுக்கது
அற்புதமமருமெய்தலாவது
சிற்பமும்மயன்மனம்வருந்திச்செய்தது. (ஙங)

இந்திரனகரமுநிகரிலாதது
மந்திரமணியினிற்பொன்னின்மண்ணினில்
அந்தரத்திழிசுடரவையின்றாயினும்
உந்தருமிருடீரந்தொளிரநின்றது. (ஙச)

புவிபுகழ்சென்னிபேரமலன்றேள்புகழ்
கவிகடமனையெனக்கனகராசியும்
சவியுடைத்தூசுமென்சாந்துமாலையும்
அவிரிழைக்குப்பையுமளவிலாதது. (ஙரு)

பயில்குரற்கிண்கிணிப்பதத்தபாவையர்
இயல்புடைமைந்தரொடியைவிலாமையால்
துயிலவுநோக்கவுந்துணையதன்றியே
உயிரிலாவோவியமென்னவொப்பது. (௩௬)

அயிர்த்தலையயினிலையமைத்தவுண்டியும்
தயிர்த்திகழ்தரமுறத்தணித்தண்டேறலும்
இயிர்க்கனிப்பிறக்கமும்பிறவுமின்னன
கமழ்வுறத்தோன்றியகணக்கிலகொட்பது. (௩௭)

வேறு.

கன்னிநெடுமாநகரமன்னதெதிர்கண்டார்
இந்நகரமாமிகல்ராவணனதாமென்
றுன்னியுறையாடினருவந்தனர்வியந்தார்
பொன்னினெடுவாயிலதனூடுநனிபுக்கார். (௩௮)

புக்கநகரத்திலிதுநாடினர்புகுந்தார்
மக்கள்கடைதேவர்தலைவானுலகின்வையத்
தொக்கவுறைவோருருவமோவியமலான்மற்
றெக்குறியிலுள்ளவுமெதிர்த்திலர்திரிந்தார்; (௩௯)

வாவியுளபொய்கையுளவாசமணநாறும்
காவுமுளகாவிவிழியார்மொழிகளென்னக்
கூவுமினமென்குயில்கள்பூவைகிளிகோலத்
தூவிமடவன்னமுளதோகையர்களில்லை. (௪௦)

ஆயநகரத்தினியல்புள்ளுறவறிந்தார்
மாயைகொலெனக்கருதிமற்றுநினைவுற்றார்
தீயபிலனுட்பிறவிசென்றவிஃதொன்றோ
தூயதுறக்கமெனநெஞ்சுதுணிவுற்றார். (௪௧)

இறந்திலமிதற்குரியதெண்ணியிலமேது
வறிந்திலமயிர்ப்பிறுடிமைப்புளதுறக்கம்
பிறந்தவர்செயற்குரியசெய்தல்பிழையின்றால்
இறந்தெரிவதென்னெனவிசைத்தனர்திகைத்தார். (௪௨)

சாம்பனவனென்றுரைசெய்வானெழுசலத்தால்
காம்பலையதோளியையொளித்தபடுகள்வன்
நாம்புகவமைத்தபொறிநன்றுமுடிவின்றால்
எம்பலினிமேலவிதியான்முடியுமென்றான். (௪௩)

இன்றுபிலமீதிடையினேறரிதெனிற்பார்
நின்றுசுரர்க்கதிகமாகின்னிசேறும்

அன்றதெனின்வஞ்சனையரக்கனையடங்கக்
கொன்றெழுதுமஞ்சலெனமாருதிகொதித்தான்.(சச)

மற்றவருமற்றதுமனக்கொளவலித்தார்
உற்றனாபுரத்திளிடையொண்சுடரினுள்ளோர்
நற்றவமனைத்துமுருநண்ணியொளிபெற்ற
கற்றைவிரிபொற்சடையிறைவனையெதிர்கண்டார்.(சரு)

மருங்கலயவற்கலைவரிந்துவரிவாளம்
பொருங்கலசமொக்குமுலைமாசுபுடைபூசப்
பெருங்கலைமதித்திருமுகத்துபிறழ்செங்கேழ்
கருங்கயல்களிற்பிறந்கண்மூக்கினுதிகாண. (சசு)

தோரணையவல்குல்செறிதிண்கதலிசெப்பும்
ஊருவினொடொப்புறவொடுக்கியுறவொல்கும்
நேரிடைசலிப்புறநிறுத்திநிமிர்கொங்கைப்
பாரமுளொடுக்கியவுயிர்ப்பிடைபரப்ப. (சஎ)

தாமரைமலர்க்குவமைசால்புறுதளிர்க்கைப்
பூமருவுபொற்செறிகுறங்கிடைபொருந்தக்
காமமுதலுற்றபலகைகாரளரவாசை
நாமமழியப்புலனுநல்லறிவுபுல்ல. (சஅ)

நெறிந்துநிமிர்கற்றைநிரையோதிநெடுநீலம்
செறிந்தசடையுற்றனதலத்தினெறிசெல்லப்
பறிந்துவினைபற்றறமனப்பெரியபாசம்
பிறிந்துபெயரக்கருணைகண்வழிபிறங்க. (சகூ)

இருந்தனளிருந்தவளையெய்தினரிறைஞ்சா
அருந்ததியெனத்தகையசீதையவளாகப்
பரிந்தனர்பதைத்தனர்பணித்தகுறிபண்பிற்
றெரிந்துணர்திமற்றிவள்கொறேவியென்லோடும். ()

எக்குறியொடெக்குணமெடுத்திவணுனாக்கேன்
இக்குறியுடைக்கொடியிராமன்மனையாளோ
அக்குவடமுத்தமணியாரவடநேர்நின்
றொக்குமெனிறொக்குமெனமாருதியுனாத்தான்(.ருக)

அன்னபொழுதின்கணவணங்குமறிவுற்றாள்
முன்னனையர்சேறன்முறையன்றெனமுனிந்தாள்
துன்னரியபொன்னகரியின்றுறைவிரல்லீர்
என்னவரவியாவருனாசெய்கெனவினைசத்தாள்.(ருஉ)

வேதனையரக்கரொருமாயைவிளைவித்தார்
சீதையையொளித்தனர்மறைத்தபுரைதேர்வுற்
றேதமிலறத்துறைநிறுத்தியவிராமன்
றூதருலகிற்றிரிதுமென்றுமுறைசொன்னார். (௫௩)

என்றலுமிருந்தவளெழுந்தனளிரங்கிக்
குன்றனையதாயதொருபெருவகைகொண்டாள்
நன்றுவரவாகநடனம்புரிவனென்று
நின்றனணெடுங்கணிணைநீர்கலுழிகொள்ள. (௫௪)

எவ்வுழையிருந்தனனிராமனெனயாணர்ச்
செவ்வுழைநெடுங்கணவள்செப்பிடுதலோடும்
அவ்வுழைநிகழ்ந்ததனையாதியினொடந்தம்
வெவ்விழைவில்சிந்தைநெடுமாருதிவிரித்தான். (௫௫)

கேட்டவளுமென்னுடையகேடிறவமின்னே
காட்டியதுவீடெனவிரும்பிதனிகானீர்
ஆட்டியமிர்தன்னசுவையின்னடிசிலன்போ
டூட்டிமனனுள்குளிரவின்னுரையுரைத்தாள். (௫௬)

மாருதியுமற்றவண்மலர்ச்சரண்வணங்கி
யாரிநகருக்கிறைவரியாதுநினியற்பேர்
பார்புகழ்தவத்தினைபணித்தருளுகென்றான்
சோர்குழலுமற்றவளெடுத்தபடிசொன்னாள். (௫௭)

நான்முகனளித்தநெறிநூறுவரதொய்தாய்
மேன்முகதிமிர்த்துவெயில்காலொடுவிழுங்கா
மான்முகநலத்தவள்மயல்செய்ததவத்தால்
நான்முகனளித்துளதிமாநகரநல்லோய். (௫௮)

அன்னகிளர்தானவனரம்பையருளாங்கோர்
நன்னுதலினுண்முலைநயந்தனனந்நல்லாள்
என்னுயிரனாளவளையானிவண்விடுப்பப்
பொன்னுலகினின்றியல்பிலத்திடைபுணர்ந்தாள். ()

புணர்ந்தவளுமன்னவனுமன்றில்விழைபோகத்
துணர்ந்திலர்நெடும்பகலிமாநகருறைந்தார்
கணங்குழையினுளொடுயிர்காதலொருவாதுற்
றிணங்கிவருமாசையுடையேனுடனிருந்தேன். (௬0)

இருந்துபலநாள்கழியுமெல்லையினினல்லோய்
திருந்திழையைநாடிவருதேவரிறைசிறிப்

பெருந்திறலினனையுயிருண்டபிழைமையெல்லாம்
முருந்துதிகழ்மொனகையாளையுமுனிந்தான். (௬௧)

முனிந்தவளையுற்றமுறைமுற்றுமொழியென்னக்
கனிந்ததுவர்வாயவளுமெல்லையிவள்கண்ணூல்
வனைந்தமுடிவுற்றவெனவண்ணலுமிவெல்லாம்
நினைந்திவணிருந்திநகர்காவலினதென்றான். (௬௨)

என்றனன்வணங்கியிருளேகுநெறியென்ன
ஒன்றுளாயெனக்குமுடிவென்றுளாசெயாமுன்
வன்றிறலவ்வானரமிராமனருள்வந்தால்
அன்றுமுடிவாகுமிடமொன்றவனகன்றான். (௬௩)

உண்ணவுளபூசவுளசூடவுளவன்றே
வண்ணமணியாடையுளமற்றுமுளபெற்றேன்
அண்ணலவைவிட்டுமையடைந்திடுதல்வேண்டி
எண்ணரியபல்பகலிருந்தவமிழைத்தேன். (௬௪)

ஐயிருபதோசனையமைந்தபிலமையா
மெய்யுளதுமேனுலகமேறுநெறிகூறு
உய்யுநெறியொன்றுதவுவீரொனினுபாயம்
செய்யும்வகையுண்டெனினினைத்திர்சிறிதென்றாள். -()

அன்னதுசுயம்பிரபைகூறவனுமானும்
மன்னுபுலம்வென்றுவருமாதவன்மலர்த்தாள்
சென்னியின்வணங்கிநனிவானவர்கள்சேரும்
பொன்னுலகமீகுவனினக்கெனல்புகன்றான்.| (௬௬)

முழைத்தலையிருட்கடலின்மூழ்கிமுடிவோமைப்
பிழைத்துயிருயிர்க்கவருள்செய்தபெரியோனே
இழைத்திசெயலானவினையென்றனரிரந்தார்
வழுத்தரியமாருதியுமன்னதுவலிப்பான். (௬௭)

நடுங்கன்மினெனச்சொலைநவின்றுநகைதாழ
மடங்கலினெழுந்துமழையேறரியவானத்
தொடுங்கலில்பிலந்தலைதிறந்துலகொடொன்ற
நெடுங்கைகள்பெயர்த்துநெடுவானுறநிமிர்ந்தான். ()

எருத்துயர்சுடர்ப்புயமிரண்டுமெயிறென்ன
மருத்துமகனிப்படியிடந்துறவளர்ந்தான்
கருத்தினிமிர்கண்ணினெதிர்கண்டவர்கலங்க
உருத்துலகெடுத்தகருமாவினையுமொத்தான். (௬௯)

மாவடிவுடைக்கமலநான்முகன்வருக்கும்
நாவடிவுடைச்சுடர்கொள்விண்டலநுனைக்கும்
மூவடிகுறித்தமுறையீரடிமுடித்தான்
பூவடிவுடைப்பொருவில்சேவடிபுனைந்தான். (எ0)

எழிருபதோசனையிடந்துபடியின்மேல்
ஊழுறவெழுந்தலையும்பருமொடுங்கப்
பாழிநெடுவன்பிலனுனின்றுவடமேல்பால்
ஆழியினெறிந்தனுமன்மேகமெனவார்த்தான். (எக)

இன்றுமுளமேல்கடலியக்கில்பிலநீவாய்
நின்றுநிலைபெற்றுளதுநீணுதலியோடும்
குன்றுபுரைதோளவரெழுந்துநெறிகொண்டார்
பொன்றிணிவிசும்பினிடைநன்னுதலிபோனாள். (எஉ)

மாருதிவலித்தகைமையேயிமறவோரும்
பாரிடைநடந்துபகலெல்லைபடரப்போய்
நீருடையபொய்கையெனுநேமியிடைநின்றார்
தேருடைநெடுந்தகையுமேலைமலைசென்றான். (எஙு)

பிலநீங்குபடலமுற்றிற்று-ஆ படலம்-கஙு-க்கு
திருவிருத்தம்-அகூரு.

## கச-வது-ஆறுசெல்படலம்.

கண்டார்பொய்கைக்கன்னகனன்னீர்கையார
உண்டார்தேனுமொண்கனிகாயுமொருசூழல்
கொண்டாரன்றேவின்றுயில்குன்றிற்குறியெய்தித்
தண்டார்வென்றித்தானவன்வந்தான்முனைவில்லான். (க)

மலையேபோல்வான்மாக்கடலொப்பான்மறமுற்றக்
கொலையேயொப்பான்கூற்றையுநிகர்ப்பான்கொடுமைக்கோர்
நிலையேபோல்வானீர்மையிலாதானிமிர்திங்கட்
கலையேபோலுங்காலவெயிற்றான்கனல்கண்ணான். (உ)

வேறு.

கருவிமாமழைக்குலைகடாவமீ
தருவமேனிசென்றுலவியொற்றவிற்
பொருவின்மாரியேபொழுகுபொற்பினால்
அருவிபாய்தருங்குன்றமேயனான். (ஙு)

வானவர்க்குமற்றவர்வலிக்குநேர்
தானவர்க்குமேயரியதன்மையான்
ஆனபுட்கலன்மகனொடாடவே
றேனையர்க்குமொன்றெண்ணவொண்ணுமோ. (௪)

பிறங்குபங்கியான்பெயரும்பெட்பினிற்
கறங்குபோன்றுளான்பிசையுங்கையினான்
அறங்கொள்சிந்தையார்நெறிசெலோய்விறல்
உறங்குவானவத்தொல்லையெய்தினான். (௫)

பொய்கையென்னதென்றுணர்ந்தும்புல்லியோர்
எய்தினார்களியாரிதுவெனாவெனா
ஐயனங்கதனலங்கன்மார்பினில்
கையின்மோதினான்காலனேயனான். (௬)

மற்றைமைந்தனுமுறக்கமாறினான்
இற்றிவன்கொலாமிலங்கைவேந்தெனா
எற்றினானைநேரொற்றினானவன்
முற்றினானிகற்காதிமூர்த்தியான். (௭)

இடியுண்டாங்கணேரோங்கலிற்றதொத்
தடியுண்டான்றளர்ந்தலறிவீழ்தலும்
தொடியினேரேள்விஃசத்தெழுந்துசுற்றினார்
பிடியுண்டானைத்துயிலும்பெற்றியார். (௮)

யார்கொலாமிவனிழைத்ததென்னெனாத்
தாரைசேயினைத்தனிவினாவினான்
மாருதேயன்மற்றவனும்வாய்மைசால்
ஆரியாதெரிந்தறிகிலேனென்றான். (௯)

யானிவன்றனைத்தெரியவெண்ணினேன்
தூநிவர்ந்தவேற்றுமிரனென்னும்பே
ரானிவ்வாழ்புனற்பொய்கையாளுமோர்
தானவன்னெனச்சாம்பன்சாற்றினான். (௧௦)

வேறுமெய்துவாருளர்கொலாமெனாத்
தேறியின்றுயிற்செலவுதிர்ந்துளார்
வீறுசெஞ்சுடர்க்கடவுள்வேலைவாய்
நாறுதாண்மலர்ப்பெண்ணைநாடுவான். (௧௧)

புண்ணைவெம்முலைப்புளினமேய்தடத்
துன்னவாம்பலின்னமிர்தமூறுவாய்

வண்ணவெண்ணகைத்தரளவாண்முகப்
பெண்ணைநண்ணினார்பெண்ணைநாடுவார். (கஉ)

துறையுந்தோகைநின்றாடுசூழலும்
குறையுஞ்சோலையுங்குளிர்ந்தசாரனீர்ச்
சிறையுந்தெள்ளருவித்தடமுந்தெண்பளிக்
கறையுந்தேடினாரறிவின்கேள்வியார். (கங)

அணிகொழித்தருவந்தெவருமாடினார்
பிணிகொழித்தவெம்பிறவிவேரின்வன்
றுணிகொழித்தருஞ்சுழிகடோறுநன்
மணிகொழித்திடுதுறையின்வைகினார். (கச)

ஆடுபெண்ணைநீராறுமேறினார்
காடுநண்ணினார்மலைகடந்துளார்
வீடுநண்ணுறாவெண்ணவீசுநீர்
நாடுநண்ணினார்நாடநண்ணினார். (கரு)

தசனவப்பெயர்ச்சரளசண்பகத்
தசனவப்பிறந்தகனறொடோரீஇ
உசனவப்பெயர்க்கவியுதித்தபேர்
இசைவிதர்ப்பநாடெளிதினெய்தினார். (கசா)

வைதருப்பநாடதனில்வந்துபுக்
கெய்தருப்பமத்தனையுமெய்தினார்
மெய்தருப்பைநூல்பிறழுமேனியார்
செய்தவத்துளார்வடிவிற்றேடினார். (கஎ)

அன்னதன்மையாலறிஞர்நாடியச்
செந்நெல்வேலிசூழ்சித்துநாடொரீஇத்
தன்மமென்றுமத்தகைபுகுத்துளார்
துன்றுதண்டகங்கடிதுதுன்னினார். (கஅ)

உண்டகத்துளாருறையுமைம்பொறிக்
கண்டகர்க்கருங்காலனாயினார்
தண்டகத்தையுந்தடவியேகினார்
முண்டகத்துறைகடிதுமுற்றினார். (ககூ)

அன்றனீரொலாமமரர்மாதரார்
கொள்ளைமாமுலைக்கலவைகோதையிற்
கன்றுநாறலிற்கமலவேலிவாழ்
புள்ளுமீனுறாப்புலவுதீர்தலால். (உ௦)

குஞ்சரங்களித்தோங்குகொல்லைவாய்
விஞ்சைமன்னர்பால்விற்குமங்கைமார்
நைஞ்சுவீணையினடத்துபாடலால்
அஞ்சுவார்கணீரருவியாறடே. (௨௧)

கழுகுவார்நெடுங்கணகலூசலிற்
குமுதவாயினார்குயிலையேசுவார்
சமுகவாளியுந்தனுவும்வாண்முகத்
தமுதபாடலார்மருவியாடுவார். (௨௨)

இனையவாயவொண்டுறையையெய்தினார்
நினையும்வேலைவாய்நெடிதுதேடுவார்
வினையவார்குழற்றிருவைமேவலார்
புனையுநோயினார்கடிதுபோயினார். (௨௩)

நீண்டமேனியானெடியதாளினின்
றீண்டுகங்கைவந்திழிவதென்னலாம்
பாண்டுவம்மலைபடர்விசும்பினைத்
தீண்டுகின்றதன்னசிகரமெய்தினார். (௨௪)

இருளறுத்துமீதெழுந்துதெண்ணிலா
மருளறுத்தவன்சுடர்வழங்கலால்
அருளுறுத்திலாவடலரக்கன்மேல்
உருளுறுத்ததிண்கயிலையொத்ததால். (௨௫)

வேறு.

விண்ணுறநிவந்தசோதிவெள்ளியகுன்றமேவிக்
கண்ணுறநோக்கலுற்றார்களியுறக்கனிந்தகாமப்
பண்ணுறுகிளவிச்செவ்வாய்ப்படையுறுநோக்கினாளை
எண்ணுறுதிறத்துங்காணாரிடருழுமனத்தரொய்த்தார். (௨௬)

ஊதைபோல்விசையின்வெங்கணுழுவைபோல்வயவரோங்க
லாதியையகன்றுசெல்வாரரக்கனால்வஞ்சிப்புண்ட
சீதைபோகின்றாள்கூந்தல்வழிவந்துபுவனஞ்சேர்ந்த
கோதைபோற்கிடந்தகோதாவிரியினைக்குறுகிச்சென்றார். (௨௭)

எழுகின்றகிரியிற்றாகியிழிகின்றமணிநீரியாறு
தொழுகின்றசனகன்வேள்விதொடங்கியசுருதிச்சொல்லால்
உழுகின்றபொழுதினீன்றவொருமகட்கிரங்கிஞாலம்
அழுகின்றகலுழிமாரியாமெனப்பொலிந்ததன்றே. (௨௮)

ஆசில்பேருலகிற்காண்பேரளவைநூலெனலுமாகிக்
காசொடுகனகந்தூவிக்கவினுறக்கிடந்தகான்யா

நேசில்போராக்கல்மார்பினிடைபதித்தெருவைவேந்தன்
பிரியவடகமீக்கோளிதெனவிளங்கித்தன்றே. (௪௯)

அந்தமுழுதுநாடியாய்வளைமயிலையாண்டும்
சந்திரியுற்றிலாதார்நெடிதுபின்றவிரச்சென்றார்
இன்னதிலாததீதென்றியாவையுமென்னுங்கோளார்
சொன்னதீவினைகடீர்க்குஞ்சுவணகத்துறையிற்புக்கார். (௫0)

கரும்பொடுதேனும்வண்டுமென்னமுந்துவன்றிப்புள்ளும்
கரும்பொடுசெந்நெற்காடுங்கமலவாவிகளுமல்கிப்,பெரும்புன்
னைமருதஞ்சூழ்ந்தவிடக்கையின்கிடக்கச்சென்றார் [டார்
குரும்பைநீர்முனைஞ்சுஞ்சோலைக் குலிந்தமும்புறத்துக்கொண்

கொங்கணமேழுநீங்கிக்குடகடற்றாளக்குப்பைச்
சங்கணியானனெய்த்தலன்புனறவிரவேகித்
திங்களின்கொழுந்துசுற்றுஞ்சிமயநீள்கோட்டுத்தேவர்
அங்கைகள்கூப்பநின்றவருந்ததிக்கருகானார். (௫௨)

அருந்ததிக்கருகுசென்றண்டமுகிறுக்கமருசெய்தாள்
இருந்ததிக்குணர்ந்திலாநாமோகினரிடையர்மாதர்
பெருந்ததிக்கருந்தேன்மாறுமரகதப்பெருங்குன்றெய்தி
இருந்தனிற்றீர்ந்துசென்றார்வேங்கடத்திறுத்தகாலை. (௫௩)

முனிவருமறைவலோருமுந்தைநாட்சிந்தையூண்ட
வினைவருநெறியைமாற்றுமெய்புணர்வோரும்விண்ணோர்
எனைவருமமரர்மாதரியாவருஞ்சித்தரென்போர்
அனைவருமருவிநன்னீர்நாளும்வந்தாடுகின்றார். (௫௪)

வேறு.

பெய்தவைம்பொறியும்பெருங்காமமும்
வைதவெஞ்சொலுமங்கையர்வாட்கணும்
எய்தவஞ்சகவாளியும்வென்றுநற்
செய்தவம்பலசெய்குநர்தேவரால். (௫௫)

வலங்கொணேமிமழைநிறவானவன்
அலங்குதாளிணைதாங்கியவம்மலை
விலங்கும்வீடுறுகிற்றனமெய்ந்நெறிப்
புலன்கொள்வார்கட்கனையதுபொய்க்குமோ. (௫௬)

ஆயகுன்றினையெய்தியருந்தவம்
மேயசெல்வனைமேவினர்மெய்ந்நெறி
நாயகன்றனைநாளும்வணங்கிய
தூயநற்றவர்பாதங்கள்சூடினார். (௫௭)

சூடியாண்டசுரிகுழற்றோகையைத்
தேடிவார்புனற்றெண்டிரைத்தண்டக
நாடுநண்ணுகின்றார்மறைநாவலர்
வேடமேயினர்வெண்டிருமேவுவார். (௫௮)

குன்றுசூழ்ந்தகடத்தொடுங்கோவலர்
முன்றில்சூழ்ந்தபடப்பையுமொய்ப்புனல்
சென்றுசூழ்ந்தகிடக்கையுந்தெண்டிரை
மன்றுசூழ்ந்தபரப்புமருங்கெலாம். (௫௯)

சூலடிப்பலவின்சுளைதூங்குதேன்
கோலடிப்பவெரீஇக்குலமள்ளரோர்ச்
சாலடித்தருஞ்சாலியின்வெண்முளை
தோலடிக்கிளையன்னந்துவைப்பன. (௬௰)

செருகுறுங்கணிற்றேங்குவளைக்குலம்
அருகுறங்கும்வயன்மருங்காய்ச்சியர்
இருகுறங்குபிறங்கியவாழையிற்
குருகுறங்குங்குயிலுந்துயிலுமால். (௬௧)

தெருவினார்ப்புறும்பல்லியந்தேர்மயில்
கருவிமாமழையென்றுகளிப்புறு
பொருநர்தண்ணுமைக்கன்னமும்போகலா
மருவினார்க்குமயக்கமுண்டாகுமோ. (௬௨)

தேரைவன்றலைத்தெங்கிளம்பாளையை
நாரையென்றிளங்கெண்டைநடுங்குவ
தாரைவன்றலைத்தண்ணிளவாம்பலைச்
சேரையென்றுபுலம்புவதேரையே. (௬௩)

நள்ளிவாங்குகடையிளநவ்வியர்
வெள்ளிவால்வளைவீசியவெண்மணி
புள்ளிநாரைச்சினைப்பொரியாகுமென்
றுள்ளியாமைமுதுகினுடைப்பரால். (௬௪)

சேட்டிளங்கடுவன்சிறுபுன்கையில்
கோட்டதேம்பலவின்கனிக்கூன்சுளை
தோட்டமைந்தபொதும்பரிற்றூங்குதேன்
ஈட்டமென்னச்சென்றீயினமொய்ப்பன. (௬௫)

செல்வரொன்றும்வடகலைதென்றமிழ்ச்
சொல்வரம்பினரொன்றுஞ்சுளிபடக்

கொல்வவொன்றுங்கொடுப்பவவொன்றுமிவ்
வில்வரம்பிலிறைவனையேத்துவார். (௪௬)

அன்னதண்டகநாடுகடந்தகன்
பொன்னிநாடுபொருவிலரெய்தினார்
செந்நெலுங்கரும்புங்கமுகுஞ்செறிந்
தின்னல்செய்யுநெறியரிதேகுவார். (௪௭)

கொடுறுதாங்கியவாய்க்குழுதாளைவாழ்
தடறுதாங்கியகூவிளந்தாழையின்
மிடறுதாங்கும்விருப்புடைத்திங்கனி
இடறுவார்நறுந்தேனினிழுக்குவார். (௪௮)

குழுவுமீன்வளர்குட்டமெனக்கொளா
எழுவுபாடலிமிழ்கருப்பேத்திரத்
தொழுகுசாறகன்கூனையினாழ்முறை
முழுகிநீர்க்கருங்காக்கைமுளைக்குமே. (௪௯)

பூநெருங்கியபுன்னறுஞ்சோலைகள்
தேநெருங்குசொரிதலிற்றேர்வில
மீனெருங்குறும்வெள்ளப்வெரீஇப்பல
வானரங்கண்மரங்களினவைகுமால். (௫0)

அனையபொன்னியகன்புனனாடொரீஇ
மனையின்மாட்சிகுலாமலைமண்டலம்
வினையினீங்கியபண்பினர்மேயினார்
இனையதென்றமிழ்நாடுசென்றெய்தினார். (௫௧)

அத்திருத்தகுநாட்டினையண்டர்நா
டொத்திருக்குமென்றுனாயொக்குமோ
எத்திறத்தினுமேழுலகும்புகழ்
முத்துமுத்தமிழுந்தந்தமுற்றலால். (௫௨)

என்றதென்றமிழ்நாட்டினையெங்கணும்
சென்றுநாடித்திரிந்துதிருந்தினார்
பொன்றுவாரிற்பொருந்தினர்போயினார்
துன்றலோதியைக்கண்டிலர்துன்பினார். (௫௩)

வன்றிசைக்களிறன்னமயேந்திரக்
குன்றிசைத்ததுவல்லையிற்கூடினார்
தென்றிசைக்கட்டுச்சிகாமாருதம்
நின்றிசைக்குநெடுநெறிநீங்கினார். (௫௪)

ஆறுசெல்படலமுற்றிற்று. ஆக படலம்-௧௪௰. விருத்தம் - ௯௫0

# கரு-வது-சம்பாதிப்படலம்

மழைத்தவின்னகமெனமுழங்கிவானுற
விழைத்தவெண்டிரைக்கரமெடுத்திலங்கையாள்
உழைத்தடங்கண்ணியென்றுழையென்றோடிவந்
தழைப்பதேகடுக்குமவ்வாழிநோக்கினார். (௧)

விரித்தநீரொண்டிசைமேவிமேன்மையால்
பொருத்துதிர்மயேத்திரத்தென்றுபோக்கிய
அருந்துணைக்கவிகளாமளவில்சேனையும்
பெருந்திரைக்கடலெனப்பெரிதுகூடிற்றே. (௨)

யாவருமவ்வையினெளிதினெய்தினார்
பூவருபொலங்குழற்பொருவில்கற்புடைத்
தேவியைக்காண்கிலார்செய்வதோர்கிலார்
நாவியல்குழறிடநவில்கின்றாரரோ. (௩)

அற்றைநாள்வரையவதியாட்சியும்
உற்றிலமிராகவனுயிரும்பொன்றுமால்
கொற்றவனுணையுங்குறித்துநின்றனம்
இற்றதுநஞ்செயலினியென்றெண்ணினார். (௪)

அருந்தவம்புரிதுமோவன்னதன்றெனின்
மருந்தருநெடுங்கடுவுண்டுமாய்துமோ
திருந்தியதியாததுசெய்துதீர்துமென்
றிருந்தனர்தம்முயிர்க்கிறுதியெண்ணுவார். (௫)

களைபொருகனைகடல்கனகமால்வரை
நிலைதுவன்றியவெனநெடிதிருந்தவர்க்
குலைசெயும்பொருளுளதெனவுணர்த்தினான்
அரசிளங்கோளரியயருஞ்சிந்தையான். (௬)

நாடிநாங்கொணருதுநளினத்தாளைவான்
மூடியவுலகினைமுற்றுமுட்டியென்
றுடவர்திலகனுக்கன்பினானெனப்
பாடவம்விளம்பினம்பழிபின்மூழ்குவான். (௭)

செய்துமென்றலைத்ததுசெய்துதீர்ந்திலம்
நொய்துசென்றுற்றதுநுவலகிற்றிலம்
எய்தும்வந்தென்பதோரிறையுங்கண்டிலம்
உய்துமென்றுலிதோருரிமைத்தாகுமோ. (௮)

எந்தையுமுனியுமெம்மிறையிராமனும்
சிந்தனைவருந்துமச்செய்கைகாண்குமேமன்

றந்தவனுயிரினைநணங்குகேள்வியீர்
புந்தியினல்லதுபுகல்விராமென்றான். (கூ)

விழுமியதுரைத்தனைவிசயம்வீற்றிருந்
தெழுவொடுமலையொடுமிகலுந்தோளினாய்
அழுதுமோவிருந்துநம்மன்புபாழ்படத்
தொழுதுமோசென்றெனச்சாம்பன்சொல்லினான். (க0)

மீண்டினியொன்றுநாம்விளம்பமிக்கதென்
மாண்டுறவதுநலமெனவலித்தனம்
ஆண்டகையாகிளங்குமரவன்னது
வேண்டலினின்னுயிர்க்குறுதிவேண்டுமால். (கக)

என்றவனுரைத்தலுமிருந்தவாலிசேய்
குன்றுறழ்ந்தெனவளர்குவவுத்தோளினீர்
பொன்றினீர்மடியயான்போவனேலது
நன்றதோவுலகமுநயக்கற்பாலதோ. (கஉ)

சான்றவர்பழியுரைக்கஞ்சித்தன்னுயிர்
போன்றவர்மடிதரப்போந்துளானென
ஆன்றபேருலகுளோரறைதன்முன்னமியான்
வான்றொடர்குவனெனமறித்துங்கூறுவான். (கங)

வேறு.

எல்லைநம்பிறுதியாய்க்குமெந்தைக்குமியாவரோனும்
சொல்லவுங்கூடுங்கேட்டாற்றுஞ்சவுமடுக்குங்கண்ட
வில்லியுமினையகோவும்வீவதற்கண்ணமச்சொன்
மல்லனீரயோத்திபுக்கால்வாழ்வரோபரதன்மற்றோர். (கச)

பரதனும்பின்னுளோனும்பயந்தெடுத்தவருமூரும்
சரதமேமுடிவர்கெட்டேன்சனகியென்றுலகஞ்சாற்றும்
விரதமாதவத்தின்மிக்கவிளக்கினையுலகத்தியார்க்கும்
கரைதெரிவிலாததுன்பம்விளைந்தவாவெனக்கலுழ்ந்தான் (.கரு)

பொருட்புறந்வயிரத்திண்டோள்பொருசினத்தாளிபோல்வான்
தரிப்பிலாதுரைத்தமாற்றந்தடுப்பருந்தகைத்ததாய
நெருப்படையைவிளைத்தபோலநெஞ்சமுமறுகக்கேட்டு
விருப்பினாலவனைநோக்கிவிளம்பினனெண்கின்வேந்தன் (கசு)

வேறு.

நீயுதின்றுறையுநீங்கதின்குலத்
தாயமுந்தவரொடுந்தலைவரில்லையால்

ஆயதுகருதினமன்னதன்றெனின்
நாயகரிறுதியுநவிலற்பாலதோ. (௧௭)

ஏகுநீயவ்வழியெய்தியிவ்வழித்
தோகையையங்கண்டிலாவகையுசொல்லியெம்
சாகையுமுணர்த்துதிதவிர்திசோகம்போர்
வாகையாயென்றனன்வரம்பிலாற்றலான். (௧௮)

அவனவையுணர்த்தபின்னனுமன்சொல்லுவான்
புவனமூன்றினுமொருபுடையிற்புக்கிலம்
தவனமாண்டவனெனத்தருக்கிலானெனக்
கவனவேகத்துதிர்கழிதிரோவென்றான். (௧௯)

பின்னருங்கூறுவான் பிலத்தில்வானத்தில்
பொன்வரைக்குடுமியிற் புறத்துளண்டத்தில்
நன்னுதற்றேவியைக் காண்டுநாமெனிற்
சொன்னநாளவதியை யிறைவன்சொல்லுமோ. (௨௦)

நாடுதலேநல மென்னுநாடியத்
தோடலர்குழலிதன்றுயரிற்சென்றடர்
வீடியசடாயுவைப்போலவீடுதல்
பாடவமல்லதுபழியிற்றுமென்றான். (௨௧)

என்றலுங்கேட்டனனெருவைவேந்தன்றன்
பின்றுணையாகியபிழைப்பில்வாய்மையான்
பொன்றினனென்றசொற்புலம்புநெஞ்சினன்
குன்றெனநடந்தவர்க்குறுகன்மேயினான். (௨௨)

முறையுடையெம்பியார்முடிந்தவாறெனாப்
பறையிடுநெஞ்சினன்பதைக்குமேனியன்
இறையுடைக்குலிசவேலெறிகலாதமுன்
சிறையுடைமலையெனச்செல்லுஞ்செய்கையான். ()

மிடலுடையெம்பியை வீட்டும்வெஞ்சினப்
படையுளராயினார்போலும்பாரினில்
உடலினைவழிந்துபோயுவரிநீருராய்க்
கடலினைப்புனையுறுமருவிக்கண்ணினான். (௨௪)

உழுங்கதிர்மணியணியுமிழுமின்னினான்
மழுங்கியநெடுங்கணின்வழங்குமாரியான்
புழுங்குவானழுங்கினான்புடவிமீதினில்
முழங்கிவந்திழிவதோர்முகிலும்போல்கின்றான்.

வள்ளியுமரங்களுமலையுமண்ணுறத்
தெள்ளுறுநுண்பொடிபடக்கடிதுசெல்கின்றான்
தள்ளருவன்கால்பொரத்தரணியிற்றனி
வெள்ளியம்பெருமலைபொருவுமேனியான். (௨௬)

எய்தினனிருந்தவரிரியல்போயினார்
ஐயனைமாருதியழுங்கண்ணினான்
கைதவநிசரக்கள்ளவேடத்தை
உய்திகோலினியெனவுருத்துமுன்னினான். (௨௭)

வெங்கதம்வீசியமனத்தன்விம்மலன்
பொங்கியசோரிநீர்பொழியுங்கண்ணினான்
சங்கையிற்சழக்கிலனென்றுதன்மையை
இங்கிதவகையினாலெய்தநோக்கினான். (௨௮)

நோக்கினனின்றனனுணங்குகேள்வியான்
வாக்கினாலொருமொழிவழங்குறுதமுன்
தாக்கருஞ்சடாயுவைத்தருக்கினாலுயிர்
நீக்கினாரியாரதுநிரப்புவீரென்றான். (௨௯)

உன்னைநீயுள்ளவாறுணரப்பிறந்ததைப்
பின்னையாவிரப்புதல்பிழைப்பின்றாதலால்
என்னைமாருதியெனவொருவைவேந்தனும்
தன்னையாத்தன்மையைச்சாற்றன்மேயினான். (௩0)

மின்பிறந்தாலெனவிளங்கெயிற்றினாய்
என்பிறந்தார்க்கிடையெய்தலாதவென்
பின்பிறந்தான்றுணைபிரிந்தபேதையேன்
முன்பிறந்தேனெனமுடியக்கூறினான். (௩௧)

கூறியவாசகங்கேட்டுக்கோதிலான்
ஊறியதன்பத்தினுவரிபுட்புகா
ஏறினதுணர்த்தினனிகலிராவணன்
வீறியவாளிடைவிளித்ததாமென்றான். (௩௨)

அவ்வுரைகேட்டலுமசனியேற்றினால்
தவ்வியகிரியெனத்தரையின்வீழ்ந்தனன்
வெவ்வுயிராவுயிர்பதைப்பவிம்மினான்
இவ்வுரையிவ்வுரையெடுத்தியம்பினான். (௩௩]

வேறு.

இளையாநீள்சிறகின்றிவெந்துகத்
தளையானேனுயிர்போதறக்கதோ
வளையாநேமியான்வன்மைசால்வலிக்
கிளையானேயிதுவென்னமாயமோ. (௫௪)

மலரோனின்றுளன்மன்றும்பின்னுமுண்
டுலையாநீடறமின்றுமுண்டரோ
நிலையார்கற்பமுநின்றதின்றுநீ
இலையானுயிதுவென்னதன்மையோ. (௫௫)

உடனேயண்டமிரண்டுமெய்ந்துயிர்த்
திடநாள்வந்திருவோருமெய்த்திறேம்
விடநீயேதனிச்சென்றவீரமும்
கடனேவெங்கழுழற்குமேன்மையாய். (௫௬)

ஒன்றாமூன்றுலகத்துமோளாரையும்
வென்றானென்னினும்வீரநிற்குநேர்
நின்றானேயவ்வரக்கனின்னையும்
கொன்றானேயிதுவென்னகொள்கையோ. (௫௭)

என்றென்றேங்கியிரங்கியின்னலாற்
பொன்றுந்தன்மைபுகுந்தபோதவற்
கொன்றுஞ்சொற்கொடுணர்ச்சிறல்கிளைஞன்
வன்றிண்டோள்வளையன்னமாருதி. (௫௮)

தேற்றத்தேறியிருந்தசெவ்வியான்
கூற்றொப்பான்கொலைவாளரக்கனே
டேற்றுப்போர்செய்ததென்னியித்தெனக்
காற்றின்சேயிதுகட்டுரைக்குமால். (௫௯)

எங்கோமானவ்விராமனில்லுளாள்
செங்கோலான்மகள்சீதைசெவ்வியாள்
வெங்கோல்வஞ்சன்விளைந்தமாயையால்
தங்கோனைப்பிரிவுற்றதன்மையாள். (௬0)

கொண்டேகுங்கொலைவாளரக்கனைக்
கண்டானும்பியறங்கடக்கிலான்
வண்டார்கோதையைவைத்துநீங்கெனாத்
திண்டோரானெதிர்சினந்துசீறினான். (௬௧)

சீறித்தீயவனேறுதேரையும்
கீறித்தோள்கள்கிழித்தழித்தபின்

தேறித்தேவர்கடேவன்றெய்வவாள்
விறப்பொலிநினைமெய்ம்மையோனென்றான். ( )

விளித்தானன்னதுகேட்டுமெய்ம்மையோய்
தெளித்தாடத்தருநீர்த்தன்மாட்டுயிர்
அளித்தானேயதுநன்றுநன்றெனக்
களித்தான்வாரிகலுழ்ந்தகண்ணினான். (௪௩)

பைந்தாரொங்கலிராமன்பத்தினி
செந்தாள்வஞ்சிதிறத்திறந்தவன்
மைந்தாவெய்யவரம்பில்சீர்த்தியோர்
டுய்ந்தானல்லதுலர்ந்ததுண்மையோ. (௪௪)

அறமன்றாணாடனெம்பியன்பினோ
டுறவன்றாயுயிரொன்றவோவினான்
பெறவொண்ணாதனதோர்பெற்றிபெற்றவற்
கிறவென்றாயினின்பழியாவதோ. (௪௫)

என்றென்றேங்கியிரங்கியின்புனற்
சென்றங்காடுதல்செய்துதீர்ந்தபின்
வன்றிண்டோள்வலிமாறிலாதவன்
றுன்றுந்தாரவர்க்கின்னசொல்லினான். (௪௬)

வாழ்வித்தீரெனைமைந்தர்வந்துநீர்
ஆழ்வித்தீரவிர்துன்பவாழிவாய்
கேள்வித்தீவினைகீறினீரருள்
போழ்வித்தீருணாபொய்யினீங்கினீர். (௪௭)

எல்லீரும்மவ்விராமநாமமே
சொல்லீரென்சிறைதோன்றுஞ்சோர்விலா
நல்லீரப்பயனன்றுநல்லசொல்
வல்லீர்வாய்மைவளர்க்குமாண்பினீர். (௪௮)

என்றானன்னதுகாண்டுமியாமெனா
நின்றார்நின்றுழிநிலமேனியான்
நன்றாநாமநவின்றுநல்கினார்
வன்றோளால்சிறைவானந்தாயவே. (௪௯)

சிறைபெற்றான்றிகழ்கின்றமேனியான்
முறைபெற்றாமுலதெங்குமூடினான்
நிறைபெற்றாவிநெருப்புயிர்க்கும்வாள்
உறைபெற்றாலெனலாமுறாட்டினான். (௫௦)

தெருண்டான்மெய்ப்பெயர்செப்பலோடும்வந்
துருண்டானுற்றபலத்தையுன்னினார்
மருண்டார்வானவர்கோனைவாழ்த்தினார்
வெருண்டார்சிந்தைவியந்துவிம்முவார். (௫௧)

அன்னானைக்கடிதஞ்சலித்துநீ
முன்னாளுற்றதுமுற்றுமோதெனச்
சொன்னார்சொற்றதுசிந்தைதோய்வுறத்
தன்னாலுற்றதுதான்விளம்புவான். (௫௨)

வேறு.

தாயெனத்தகையரண்ணீர்சம்பாதிசடாயுவென்போஞ்
சேயொளிச்சிறையவேகக்கழுகினுக்கரசுசெய்வோம்
பாய்திரைப்பரவைஞாலம்படரிருள்பருகும்பண்பின்
ஆய்கதிர்க்கடவுட்டேரோரருணனுக்கமைந்தமைந்தர். (௫௩)

ஆயுயரும்பர்நாடுகாண்டுமென்றறிவுதள்ள
மீயுயர்விசும்பினூடுமேக்குறச்செல்லும்வேலை
காய்கதிர்க்கடவுட்டேரைக்கண்ணுற்றுங்கண்ணுறாமுன்
தீயையுந்தீக்குந்தெய்வச்செங்கதிர்ச்செல்வன்சீறி. (௫௪)

முந்தியவெம்பிமேனிமுருங்கழன்முருக்கும்வேலை
எந்தைநீகாத்தியென்றனியானிருஞ்சிறையுமேந்தி
வந்தனன்மறைதலோடுமற்றவன்மறையப்போனான்
வெந்துமெய்யிறகுதீந்துவிழுந்தனன்விளிகிலாதேன். (௫௫)

மண்ணிடைவிழுந்தவென்னைவாலிடைவயங்குவள்ளல்
கண்ணிடைநோக்கியுற்றகருணையான்சனகன்காதற்
பெண்ணிடையீட்டின்வந்தவானரரிராமன்பேரா
எண்ணிடையுற்றகாலத்திறகுபெற்றெழுகவென்றான். (௫௬)

தாழ்ந்தமாதவத்தின்யோகசாரங்கனுறையுஞ்சாரல்
வீழ்ந்தனஞ்சிறைகடீயவெவ்வுயிர்த்துளமுமெய்யும்
போழ்ந்தனதுன்பமூன்றவுயிர்ப்பொறைபோற்றகில்லா
தாழ்ந்தனனாழ்ந்தவென்னையருந்தவனெதிர்ந்துதேற்றி. (௫௭)

கற்றிலார்போலவுள்ளக்களிப்பினாலமர்காப்பூ
டுற்றிடக்கருதிமீப்போயாதபத்தனதுமேனி
முற்றழன்முருக்கமண்ணைமுயங்கினையினியென்சின்னாள்
மற்றதினாயினையோம்பாதிகழ்வதுமாலைத்தன்றால். (௫௮)

களித்தவர்கெடுதலின்னஞ்சனகிரியைக்கடடன்வவ்வி
ஒளித்தவாய்துருவியுற்றவானரரிராமநாமம்
விளித்திடச்சிறைவந்தோங்கும்வெவ்வுயிர்த்தயரலென்றான்
தளித்தனைதனலாவியாற்றினனாற்றல்மொய்ம்பீர். (௪௯)

எப்பியுமிடரின்வீழ்வானென்றனைமறுக்கவஞ்சி
அம்பரத்தியங்குமியாணர்க்கழுகினுக்கரசனானுன்
நம்பிமீரெல்றன்மைநீரிவணடைந்தவாற்றை
உம்பருமுவக்கத்தக்கீருணர்த்துமினுரையவென்றான். (௫௦)

என்றலுமிராமன்றன்னையேத்தினரிறைஞ்சியெந்தாய்
புன்றொழிலரக்கன்மற்றத்தேவியைக்கொண்டுபோந்தான்
தென்றிசையென்னவுன்னித்தேடியாய்வருதுமென்றார்
நன்றுநீர்வருந்தன்மின்யானவில்வதுகேளுமென்றான். (௫௧)

பாகொள்மொருதலையானைப்பாதகவரக்கன்பற்றிப்
போகின்றபொழுதுகண்டேன்புக்கனனிலங்கைபுக்கு
வேகின்றவுள்ளத்தாளைவெஞ்சிறையகத்துவைத்தான்
ஏருமின்காண்பிராங்கேயிருந்தனளிறைவியின்னும். (௫௨)

யோசனையொருநூறுண்டாலொலிகடலிலங்கையவ்வூர்
பாசவெங்காற்றங்கூற்றங்கட்புலன்பரப்பவஞ்சும்
நீசனவ்வரக்கன்சீற்றநெருப்புக்குநெருப்புநீங்கள்
ஏசறுங்குணத்தீர்சேறலெப்பரிசெயவதென்றான். (௫௩)

நால்முகத்தொருவன்மற்றைநாரியோர்பாகத்தண்ணல்
பால்முகப்பரவைப்பள்ளிப்பாம்பணைப்பரனென்றாலும்
காலனுக்கேனுஞ்சேறலரிதுகடலின்றன்மை
மேலுமக்குறுவதென்னிச்செல்லுமின்விளிவினுளீர். (௫௪)

எல்லீருஞ்சேறலென்பதெளிதன்றவ்விலங்கைமூதூர்
வல்லீரோவொருவரோகிமறைந்தவனுருகிவாய்மை
சொல்லீரோதுயரைநீக்கித்தோகையைத்தெருட்டிமீள
வல்லீரோவென்சொற்றேறியுணர்த்துமினழகற்கம்மா. (௫௫)

காக்குநரின்மையாலக்கழுகினமுழுதுங்கன்றிச்
சேக்கைவிட்டிரியல்போகித்திரிதருமதனைத்தீர்க்கப்
போக்கெனக்கடுத்ததாகுநல்லதுபுரிமினென்று
மேக்குறவிசையிற்சென்றான்சிறையினல்விசும்புபோர்ப்பான்.

சம்பாதிப்படலம்-முற்றும்.

ஆ படலம்-௧௫-இ-திருவிருத்தம்-௧௦௬௫

பொய்யுரைசெய்யாய்புள்ளரசென்றேபுகலுற்றோர்
கையுறைநெல்லித்தன்மையினெல்லாங்கரைகண்டாம்
உய்யுறைபெற்றாநல்லவையெல்லாமுறுமெண்ணிச்
செய்யுமிதென்றற்செய்வகைநோக்கிற்செயவல்லீர். (௧)

சூரியன்வெற்றிக்காதலனோடுஞ்சுடர்விற்கை
ஆரியனைச்சென்றேதொழுதாற்றதறைகிற்பின்
சீர்நிலைமுற்றுந்தேருதல்கொற்றச்செயலம்மா
வாரிகடப்போரியாவரெனத்தம்வலிசொல்வார். (௨)

மாளவலித்தோமென்றுமிமாளாவசையோடும்
மீளவுமுற்றோமன்னவைநீரும்வெளிபெற்றோம்
காளநிறத்தோடொட்புறமிந்நேர்கடருவுந்
றோளநலத்தீராளுமினெம்மாருயிரம்மா. (௩)

நீலன்முதற்போராகியகொற்றநெடுவீரர்
சாலவுரைத்தார்வாரிகடக்குந்தகவின்மை
வேலைகடப்பன்மீளவிடுக்கின்றெனவிட்டான்
வாலியளிக்கும்வீரவயப்போர்வசையில்லான். (௪)

வேதமனைத்துந்தேர்தரவொட்டாவொருமெய்யன்
பூதலமுற்றுமீரடிவைத்துப்பொலிபோழ்தியான்
மாதிரமெட்டுஞ்சூழ்பறைவைத்தேவரமேரு
மோதவிளைத்தேதாளுலைவுற்றேன்விறல்மொய்ம்பீர். (௫)

ஆதலினிப்போதாரலைகுப்புற்றிடவஞ்சா
மீதுநடத்தித்தீயவருட்கும்வினையோடும்
ஓதைதனைத்தேராவரமுற்றுந்திறனின்றென்
றோதியிருந்தானுவமுகத்தானுதவுற்றான். (௬)

யாமினியிப்போரரிடர்றப்த்திங்கினியாளாப்
போமெனவைப்போமென்பதுபுன்மைபுகழன்றே
கோமுதல்வர்க்கேருகியகொற்றக்குமரா நம்
நாமதிறத்திப்பேரிசைதைக்குநவையில்லோன். (௭)

ஆரியன்முன்னர்ப்போதறவுற்றவதனாலும்
காரியமென்னணிச்சோர்வறமுற்றுங்கடனாலும்
மாருதியொப்பார்வேறிலையென்னுவயன்மைந்தன்
சீரியன்மற்றோளாலைமையுரைப்பானிவைசெப்பும். (௮)

மேலைவிரிஞ்சன்வீயினும்வீயாநிலைநாளீர்
நாலுநயத்துறுநன்னெறிநுணர்ந்தீர்நவையற்றீர்
காலனுமஞ்சுங்காய்சினமொய்ம்பீர்கடனின்றீர்
ஆலநுகர்ந்தானன்னவயப்போரடல்கற்றீர். (௯)

வெப்புறுசெந்தீநீர்வளியாதும்விளியாதீர்
செப்புறுதெய்வப்பல்படையாலுஞ்சிதையாதீர்
ஒப்புறினொப்பார்நும்மலதில்லீரொருகாலே
குப்புறினண்டத்தப்புறமேயுங்குதிகொள்வீர். (௧௦)

நல்லவுமொன்றோதீயவுநாடிநவைதீரச்
சொல்லவும்வல்லீர்காரியநீரோதுணிவுற்றீர்
வெல்லவும்வல்லீர்மீளவும்வல்லீர்மிடலுண்டே
கொல்லவும்வல்லீர்தோள்வலியென்றுங்குறையாதீர். (௧௧)

மேருகிரிக்குமீதுறநிற்கும்பெருமெய்யீர்
மாரிதுளிக்குந்தாரையிடுக்கும்வரவல்லீர்
பாரையெடுக்குநோன்மைவலத்தீர்பழியற்றீர்
சூரியனைச்சென்றெண்கையகத்துந்தொடவல்லீர். (௧௨)

அறிந்துதிறத்தாறெண்ணியறத்தாரழியாமை
மறிந்தருளப்போர்வாலியைவெல்லுமதிவல்லீர்
பொறிந்தமரர்க்கோன்வச்சிரபாணம்புகவுழ்க
எறிந்துழிமற்றோர்புன்மயிரொன்றுமிழவாதீர். (௧௩)

போர்முனையெதிர்ந்தானெழுவுலகேனும்பொருளாகா
ஓர்வில்வலங்கொண்டொல்கலில்வீரத்துயர்தோளீர்
பாருலகெங்கும்பேரிருள்சீக்கும்பகலோன்முன்
தேர்முனடத்தேயாரியநூலுந்தெரிவுற்றீர். (௧௪)

நீதியினின்றீர்வாய்மையமைந்தீர்நினைவாலும்
மாதர்நலம்பேணாதுவளர்ந்தீர்மறையெல்லாம்
ஓதியுணர்ந்தீரூழிகடந்தீருலகேனும்
மாதியயன்றன்னையெனயாதுமறைகின்றீர். (௧௫)

அன்னலமைந்தர்க்கன்புசிறந்தீரதனாலே
கன்னியுணர்ந்தீர்காரியதிற்கேகடனென்னத்
திண்ணிதமைந்தீர்செய்துமுடிப்பீர்சிதைவின்றால்
புண்ணியமொன்றேயென்றுநிலைக்கும்பொருள்கொண்டீர். (௧௬

அடங்கவும்வல்லீர்காலமதன்றேலமர்வந்தால்
மடங்கன்முனிந்தாலன்னவலத்தீர்மறிநாடித்
தொடங்கியதொன்றேமுற்றமுடிக்குந்தொழிலல்லால்
இடம்படவெவ்வாறுகிடைத்தாலிடையாதீர். (௧௭)

ஈண்டியகொற்றத்திந்திரனென்பான்முதலியாரும்
பூண்டுநடக்குநன்னெறியாலும்பொறையாலும்
பாண்டிதர்நீரேயவையினிதுய்க்கும்படிவல்லீர்
வேண்டியபோதேவேண்டினதுய்க்கும்வினைவல்லீர் (௧௮)

ஏகுதிரோகியெம்முயிர்நல்கியிசைகொள்வீர்
ஓகைகொணர்ந்தும்மன்னையுமின்னற்குறைவில்லாள்
சாகரமுற்றுந்தாவிடுநீரிக்கடறாவும்
வேகமமைந்தீரொன்றுவிரிஞ்சன்மகன்விட்டான். (௧௯)

சாம்பனியம்பத்தாழ்வதனத்தாமரைநாப்பண்
ஆம்பல்விரிந்தாலன்னசிரிப்பானறிவாளன்
கூம்பலொடுஞ்சேர்கைக்கமலத்தன்குலமெல்லாம்
ஏம்பல்வரத்தன்சிந்தைதெரிப்பானிவைசொன்னான். (௨௦)

வேறு.

இலங்கையையிடந்துவேரோடிவ்வயிற்றருகென்றாலும்
விலங்கினர்தம்மையெல்லாவேரொடும்விளியநூறிப்
பொலன்குழைமயிலைக்கொண்டுபோரதெனப் புகன்றிட்டாலும்
கலங்கலீருரைத்தமாற்றமுடிக்குவன்கடிதுகாண்டீர். (௨௧)

யோசனையொன்றுநூறுமுள்ளடியுள்ளதாக
ஈசன்மண்ணளந்ததேய்ப்பவிருங்கடலினிதுதாவி
வாசவன்முதலோர்வந்துமலையினுமிலங்கைவாழும்
நீசரையெல்லாநூறிநினைத்ததுமுடிப்பன்பின்னும். (௨௨)

நீயிரோதினையின்முன்னேநெடுந்திரைப்பரவையேழும்
தாயுலகனைத்தும்வென்றுதையலைத்தருதற்கொத்தீர்
போயிதுபுரிதியென்றுபுலமைதீர்புன்மைகாண்டற்
கேயினீரொன்னிலென்னிற்பிறந்தவர்யாவரின்னும். (௨௩)

முற்றுநிருவகைமுற்றும்விழுங்குவான்முழங்கிமுந்நீர்
உற்றதேவெளியுமண்டமுடைந்துபோயுயர்ந்ததேனும்
இற்றைநாம்மருளுமெங்கோனேவலுமிரண்டுபோதும்
எற்றைவார்சிறைகளாகக்கதுமெனிற்கடப்பன்காண்டீர். (உச)

கண்டினித்துறையினியானேயெறிகடலிலங்கையெய்தி
மீண்டிவண்வருதல்காறும்விடைதம்மின்வினாவினென்று
ஆண்டவருவந்துவாழ்த்தவலர்மழையமரர்தூவச்
சேண்டொடர்சிமயத்தெய்வமயேந்திரத்தும்பர்ச்சென்றான். ()

பொருவருவேலைதாவும்புந்தியான்புவனந்தாய
பெருவடிவுயர்ந்தமாயோன்மேக்குறப்பெயர்ந்ததாள்போல்
உருவறிவடிவினும்பரோங்கினனுவமையாலும்
திருவடியென்னுந்தன்மையாவர்க்குந்தெரியநின்றான். (உசு)

பார்திழல்பரப்பும்பொற்றேர்வெயிற்கதிர்ப்பரிதிமைந்தன்
போர்திழல்பரப்பமேலோர்புகழெனவுலகம்புக்குத்
தார்திழல்பரப்புந்தோளான்றடங்கடறாவாமுன்னம்
நீர்திழலுவரிதாவியிலங்கைமேற்செல்லநின்றான். (உஎ)

பருவாயமடங்கல்வைகும்படர்வரைமுழைகண்மூழ்க
உருவாயவிடங்கொளுகைத்தொத்தவால்சுற்றியூழி
தெருவாயசிகரகோடிதெரிவனதெரியநின்றான்
மருவாரைமுழுதுமிற்றோன்றுமந்தரமெனவுமானான். (உஅ)

மின்னெடுங்கொண்டலுளில்விந்தியமலினூர்ப்பத்
தன்னெடுந்தோற்றம்வானோர்கட்புலத்தெல்லைதாவ
வன்னெடுஞ்சிகரகோடிமயேந்திரமண்டந்தாங்கும்
பொன்னெடுந்தூணின்பாதச்சிலையெனப்பொலிந்துநின்றான். ()

மயேந்திரப்படலமுற்றிற்று.

ஆ படலம்-கசு-க்கு-திருவிருத்தம்-க0சரு.

## கிஷ்கிந்தாகாண்டம்.

முற்றுப்பெற்றது.

---

# படலஅட்டவணை.



ஆ படலம்-௧௬-இ-திருவிருத்தம்-௧௪0௫.

| | | | |
|---|---|---|---|
| திருஞானசம்பந்தசுவாமிகளருளியதிருமுறை-௫௰-புத்தகம் | | - | ௧ |
| பெரியபுராணம் | செட்-௧௰ | ,, | ௨ |
| ஆத்திசூடிபுராணமூலமுமுரையும் | | ,, | ௧ |
| திருக்கழுக்குன்றத்தலபுராணமூலமுமுரையும் | | ,, | ௧ |
| திருவிரிஞ்சைத்தலபுராணமூலமுமுரையும் | | ,, | ௧ |
| ஷை முருகன்பிள்ளைத்தமிழ் | | ,, | ௧ |
| பழனிக்குமாரனந்தாதி | | ,, | ௧ |
| ஷை சிவகிரிப்பதிகம்-திருச்செந்திற்பதிகம் | | ,, | ௧ |
| ஷை குமாரகுருபதிகம் | | ,, | ௧ |
| கம்பராமாயணம்-பாலகாண்டம் | | ,, | ௧ |
| ஷை அயோத்தியாகாண்டம் | | ,, | ௧ |
| ஷை ஆரணியகாண்டம் | | ,, | ௧ |
| ஷை கிட்கிந்தாகாண்டம் | | ,, | ௧ |
| ஷை சுந்தரகாண்டம் | | ,, | ௧ |
| ஷை உயுத்தகாண்டம் | செட்-௧௰ | ,, | ௨ |
| ஸ்ரீமத்ராமாயணம் உத்தரகாண்டம் | | ,, | ௧ |
| பதார்த்தகுணசிந்தாமணிமூலமுமுரையும் | | ,, | ௧ |
| சைவசமயவிளக்கவினாவிடை | | ,, | ௧ |
| திருவிசைப்பாதிருப்பல்லாண்டு | | ,, | ௧ |
| திருமுருகாற்றுப்படைமூலமுமுரையும் | | ,, | ௧ |
| கொலைமறுத்தல்மூலமுமுரையும் | | ,, | ௧ |
| தமிழில்தாருமசாலா | | ,, | ௧ |

## பதிப்பித்துக்கொண்டுவரும்புத்தகங்கள்.

| | | | |
|---|---|---|---|
| ௯௬-பிரபந்தங்கள்அடங்கியபதினோராந்திருமுறை | | புத்தகம்- | ௧ |
| ஸ்ரீபாகவதமூலம்-௯000 - பாடல் | | ,, | ௫ |
| பழனித்தலபுராணமூலமுமுரையும் | | ,, | ௧ |
| அப்பர்சுவாமிகளருளியதிருமுறை | -௫௰ | ,, | ௧ |
| சுந்தரமூர்த்திசுவாமிகளருளியதிருமுறை- | -௧௰ | ,, | ௧ |
| திருவிளையாடற்புராணமூலமுமுரையும்- | செட்-௧௰ | ,, | ௫ |
| திருவாய்மொழிக்குப்பிரதிபதம் | செட்-௧௰ | ,, | ௨ |
| உபதேசகாண்[illegible]கந்தபுராணம் [illegible]பாடல். | செட்-௧௰ | ,, | ௬ |
| தொல்காப்பியத்தின்மூன்றுஅதிகாரத்திற்கும் நச்சினார்க்கினியார்இளம்பூரணாசேனாவரை யர் இவர்கள்செய்தஉரையுடன் -செட்-௧௰ | | ,, | ௫ |
| நன்னூல்விருத்தியுரை | | ,, | ௧ |
| தாயுமானசுவாமிபாடல் | | ,, | ௧ |
| திருவாசகம் | | ,, | ௧ |
| திருப்போரூர்சந்நிதிமுறை | | ,, | ௧ |